ண்பளிப்பு :
ராமநாதஸ்வாமி
வண்ணப்படம்

# கல்கி

KALKI 11.2.2001
ரூ. 5.00



# ஆத்ரேயா

## இப்பொழுது புதுப்பொலிவுடன்





**நைட்டீஸ், ரெடிமேட் ரவிக்கைகள், பெட்டிகோட்ஸ் -**

# ATHREYA

1. Jambulinga Street, (Entrance from Valluvar Kottam High Road), Nungambakkam,
Chennai - 600 034.
Phone: 822 6586 Fax No. 5360076. Tlx: 041-6753 RAJA IN . E.Mail: ols@md3.vsnl.net.in

ஆத்ரேயா ரெடிமேட் ரவிக்கைகள் கிடைக்கும் இடம்: EVE'S Park, 108, Bharathiyar St, Karaikal. Ph:20288
Ganesa Lakshmi Textiles - 146 - Long bazzar - Vellore

*VISIT US AT www.athreyawoman.com*

**All major credit cards Accepted**

நிலாவைப் பற்றி கவிதைகள் தான் எழுதுவார்கள் வழக்கமாக. ஆனால், 'நிலாக்காலம்' என்று செலுலாயிட்டில் ஒரு கவிதையைச் செதுக்கியிருக்கிறார்கள் மீடியா ட்ரீம்ஸ்காரர்கள். 'பாரதி' படத்தை எடுத்தவர்களிடமிருந்து, இப்படி ஒரு குழந்தைகள் சப்ஜெக்ட். மிகுந்த மெச்சூரிடியுடன் படத்தை இயக்கி இருக்கிறார் டைரக்டர் காந்தி கிருஷ்ணா.

குழந்தைகள் விகல்பமில்லாமல் பேசிக் கொள்ளும் விஷயங்களுக்குக்கூட, கறுப்பு கோட்டுக்காரர்களும், காக்கிச் சட்டைக்காரர்களும் எத்தனை 'கிரிமினலாக' உள்ளர்த்தம் கற்பிக்கிறார்கள் என்பதைப் பார்க்கிறபோது, படம் பார்க்கிறவர்களுக்கு மனசும் கனத்துப் போகிறது.



# தமிழ் சினிமாவுக்கு இன்னொரு முகம்!

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

• காந்தி கிருஷ்ணா



ஒரு நடிகை. அவருடைய பெண் நிலா. நடிகை வீட்டுக்குப் பக்கத்தில் ஒரு மெக்கானிக் ஷெட். அங்கே எடுபிடி பையன்கள் அமர்; பாலசுப்ரமணியன் என்கிற நிஜப் பெயரே மறக்கப்பட்டு விட்ட வாண்டுப் பையன் 'புள்ளி'. மூவரும் நண்பர்களாகிறார்கள். ஒரு நாள், நிலா வீட்டுக் கார் ஒன்றில், யாருக்கும் தெரியாமல், மூவரும் ஜாலியாய்க் கிளம்பிவிடுகிறார்கள்.

இதற்கிடையே நடிகையின் பெண்ணைக் கடத்திச் சென்று, ஐந்து லட்சம் கறக்கத் திட்டமிடுகிறார்கள் சில ஆசாமிகள். நிலாப் பெண்ணை மீட்க போலீஸ் களமிறங்குகிறது. விளையாட்டுத்தனமாய், அமரும், புள்ளியும், நிலாவை அழைத்துக் கொண்டு போனது, திட்டமிட்டக் கடத்தல், இளம் சிறுமி பலாத்காரம் என கிரிமினல் அர்த்தம் பண்ணப்பட்டு, சீர்திருத்தப் பள்ளிக்கு அனுப்பப்படுகிறார்கள் அமரும், புள்ளியும்!

தங்கள் மீது, சுமத்தப்பட்டுள்ள குற்றச் சாட்டுகளின் தீவிரம், வாதப் பிரதிவாதங்கள், தண்டனை எதையும் புரிந்து கொள்ளாத சிறுவன் புள்ளி, கோர்ட்டின் மேற்கூரையில் உட்கார்ந்திருக்கும் புறாவை, கண்களில் ஆர்வம் பொங்கப் பார்த்துக்கொண்டிருக்கிறான்!

பேசப்படப் போகிற ஒரு படம் இது என்பதில் துளியும் சந்தேகமில்லை என்கிற உணர்வுடன் படத்தின் இயக்குனர் காந்தி கிருஷ்ணாவைச் சந்தித்தோம்.

"சுஜாதா எழுதின நாவல் இது. சினிமாடிக்காக இருந்த கடைசி பகுதியைத் தவிர்த்துவிட்டு, மீதியை சினிமாவாக எடுத்திருக்கிறேன். இதுதான் படத்துக்குச் சரியான முடிவு என்று சுஜாதாவே பாராட்டினார்" என்று சொல்லும் காந்தி கிருஷ்ணாவுக்கு இதுதான் முதல்படம். படித்தது எஞ்ஜினியரிங். சினிமா ஆர்வம் காரணமாக குடியாத்தத்திலிருந்து சென்னைக்கு வந்தவர். ஜென்டில்மென் படத்திலிருந்து 'இந்தியன்' வரை டைரக்டர் ஷங்கருடன் பணியாற்றிய அனுபவம் இவரின் பலம்.

"எஞ்ஜினியர் என்ற பெயரில் அரவிந்த் சாமி, மாதுரி தீட்சித்தை வைத்து எடுத்த படம் என்பது சதவீதம் முடிந்துவிட்டது. ஆனால், எதிர்பாராத சில தடங்கல்களால் அத்துடன் நின்றுவிட்டது. அந்தச் சூழ்நிலையில், சுஜாதா சாரை ஒரு டின்னரின்போது சந்தித்தேன். அது தான் நிலாக்காலம் வாய்ப்பை எனக்குப் பெற்றுத் தந்தது" என்கிறார் காந்தி கிருஷ்ணா.







படத்தில் சிறுமி நிலாவாக நடித்திருப்பவர் ரஞ்சனி. அண்ணா நகர் எஸ்.டி.ஓ.ஏ. பள்ளியில் ஐந்தாம் வகுப்பு படிக்கிறார். பல்வேறு சானல்களிலும், சிறுவர் நிகழ்ச்சிகளில் தோன்றியது உண்டு. "ஒரு விளம்பர ஏஜென்ஸி மூலமாக நிலாக்காலம் படத்தில் நடிக்க வாய்ப்பு வந்தது. நான்கு வருடங்களாக டான்ஸ் கற்றுக் கொள்கிறேன். ஒன்னரை வருடம் பாட்டு கற்றுக் கொள்கிறேன். கீ போர்டு வாசிக்கத் தெரியும். என் படிப்புக்குக் குந்தகம் விளையாத வகையில் சினிமா வாய்ப்பு வந்தால் நடிக்கத் தயார்" என்கிறார்.

அமர் கேரக்டரில் நடித்திருப்பது சென்னை கிறிஸ்தவக் கல்லூரி உயர் நிலைப் பள்ளியில் பத்தாம் வகுப்பு படிக்கிற தினேஷ் குமார். வசதியில்லாத குடும்பம். "சினிமாவில் நடித்து, கிடைத்த பணத்தை வைத்து, நாங்கள் வாங்கியிருந்த கடனில் கொஞ்சம் அடைத்தோம். தங்கைக்குப் புது ஸ்கூல் யூனிபார்ம் வாங்கிக் கொடுத்தோம்" என்கிறான்.

மூணாங்கிளாஸ் பையனான 'புள்ளி'யின் நிஜப் பெயர் உதயராஜ். அப்பா, டி. ராஜேந்தரிடம் உதவியாளராக இருந்துவிட்டு, சொந்தமாய்த் துணி வியாபாரம் பண்ணி நஷ்டமடைந்து இப்போது நிரந்தர வேலை ஏதுமில்லாதிருக்கிறார். உதயராஜின் அண்ணன் சத்யராஜ், டீ.வி. சீரியல்களில் சிறுவர்களுக்கு டப்பிங் குரல் கொடுத்துக் கொண்டிருக்கிறான்.

உதயராஜ், இதுவரை பதினைந்து படங்கள் நடித்துவிட்டானாம். "எல்லாம் ஃப்ளாஷ் பேக்கில்தான் நடிப்பேன். சக்கரம் சுற்றும் இல்லைன்னா, கால்களைக் காட்டுவார்கள். அடுத்த ஷாட் விஜய், முரளி யாராவது வந்து விடுவார்கள்" ரஜினி ஸ்டைலில் தலைமுடியைக் கோதியபடி தன் கதை கூறுகிறான் புள்ளி. "இந்தப் படத்துலதான் எனக்குப் பெரிய ரோல். நடிக்க ரொம்ப ஜாலியா இருந்துச்சி. எனக்கு அவார்டுகூட கெடைக்கும்னு எங்க வூட்டாண்ட, படம் பார்த்திட்டு வந்தவங்க எல்லாம் சொன்னாங்க. எனக்கு அவார்டு கிடைக்குமா?" ஆழமாய், அப்பாவித்தனம் கொப்பளிக்கிறது உதயராஜின் கண்களில்.





கடத்தப்படும் நிலாவைக் கண்டுபிடிக்கும் போலீஸ் அதிகாரியாய்ப் படத்தில் நடித்திருப்பவர் ஒரு நிஜ போலீஸ் அதிகாரி. வால்டர் தேவாரம்!

"புதிதாக, ஆனால் கேரக்டருக்குப் பொருத்த மானவர் என்று ஒரு பட்டியல் போட்டோம். முதலில் எங்கள் மனத்துக்குத் தோன்றியவர் தேவாரம் தான். அவர் நடிப்பாரா என்ற சந்தேகம் எங்களுக்கு இருந்தது. கேட்டுப் பார்த்து விடுவோம் என்று அணுகியபோது, ஒப்புதல் அளித்தார். முதல் அரைநாள் அவரை ஷூட்டிங் பார்க்க வைத்து, சினிமாச் சூழலை புரிந்து கொள்ள வைத்தபின், அவரை நடிக்க வைத்தோம். மூன்றே நாட்களில் அவர் சம்பந்தப்பட்ட காட்சிகளை எடுத்துவிட்டோம்" என்கிறார் டைரக்டர்.

தமிழ் சினிமாவுக்கு இன்னொரு முகம் கிடைத்துள்ளது நிலாக்காலம் மூலமாக!

— எஸ். சந்திமௌலி

# எல்லா மொழிகளிலும்

**நர்மதை நதி அணைக்கட்டுத் திட்டத்தை எதிர்த்துப் போராடும் கிராமவாசிகள்–ஆதிவாசிகளை நேரில் சந்தித்து விட்டு வந்திருக்கிறார்கள், சென்னை கிருஷ்ணமூர்த்தி ஃபவுண் டேஷன் நடத்தும் 'த ஸ்கூல்' பள்ளியின் மாணவ–மாணவிகள். மாணவி வித்யா ராஜா அனுபவங்களை விவரித்தார்:**

"கேவ்டியா கிராமத்தில் பலிபென் என்ற பெண்மணியைச் சந்தித்தோம். அவருடைய நிலங்களை அரசு எடுத்துக் கொண்டு வெறும் நூறு ரூபாய் நஷ்ட ஈடு கொடுத்திருக்கிறது! ஆனால் அவர் அங்கிருந்து போக மறுத்து அங்கேயே தங்கி வருகிறார். காய்கறிகள் பயிரிடுகிறார். அணைக்கட்டு கட்டும் காண்ட்ராக்டர் இன்ஜினியர் ஆகியோருக்கு தங்குமிடம் கட்ட அவருடைய நிலத்தை எடுத்துக் கொண்டு விட்டார்கள். ஜல்சிந்தியில் நாங்கள் சந்தித்த இன்னொரு முக்கியமான கிராமவாசி பாவா மஹாரியா. 'நாங்கள் பதினைந்து ஆண்டுகளாக அமைதியான வழியில் போராடுகிறோம். வன்முறைப் பாதையைத் தேர்ந்தெடுத்திருந்தால் இந்தப் போராட்டம் பதினைந்து நாட்களிலேயே முடிந்து போயிருக்கும். என் நாக்குதான் எனக்கு ஆயுதம்!' என்றார் மஹாரியா.

"இங்கே அரசுப் பள்ளிக்கூடம் ஆகஸ்ட் 15ஆம் தேதியும், ஜனவரி 26ஆம் தேதியும் மட்டுமே திறக்கிறார்கள், தேசியக் கொடியை ஏற்ற. பிறகு மூடிவிடுகிறார்கள்! மேதா பட்கரின் சமூக சேவகர்கள் ஒரு பள்ளியை நடத்தி வருகிறார்கள். அந்த மாணவ-மாணவிகள்கூட அணைக்கட்டை எதிர்த்துப் பாடல்கள் பாடுகிறார்கள். எல்லா மொழிகளிலும் எதிர்ப்புக்குரல்.

"தோம்கேடியில் மேதாபட்கரைச் சந்தித்தோம். சென்னையிலிருந்து வந்திருக்கிறோம் என்று கேட்டதும் அவருக்கு ஒரே மகிழ்ச்சி. அவர் பேச்சில் இருக்கிற உறுதி, அவர் பிரச்னையை எடுத்துச் சொல்லும் தெளிவு எல்லாமே ஆணித்தரமாக இருக்கின்றன. அந்த மக்களின் அவஸ்தைகளை எடுத்துச் சொல்லும்போது கண்கலங்கி விடுகிறார்.

"'நிலத்தை இழந்தவர்களுக்கு மறுவாழ்வு நிலையங்கள் என்ற பெயரில் வெறும் டின் ஷீட் கொட்டகை கொடுத்திருக்கிறார்கள். அதிலும் 26 மறுவாழ்வு நிலையங்கள் மூழ்கிப் போய் விட்டன' என்றார் மேதா பாட்கர். 'பருத்தி, கோதுமை,



• மேதாபட்கர்

கரும்பு, காய்கறிகள் என்று எல்லாவற்றிலும் ஏற்கெனவே சுயச்சார்பு நிலையை அடைந்திருக்கிற இந்தக் கிராமப்புறங்களுக்கு, மேலும் நீர்ப்பாசன வசதியும், குடிநீர் வசதியும் செய்து தருகிறோம் என்று சொல்லுகிறார்கள்! எண்ணெயும், உப்பும் மட்டுமே இவர்கள் வெளியிலிருந்து வாங்குகிறார்கள். சாதாரணமாக, கிராமங்களிலிருந்து நகரங்களுக்குக் குடிபெயரச் செய்யும் பிரச்னைகள் இங்கு இல்லை. இந்த அணைக்கட்டுத் திட்டத்துக்குப் பிறகு அது தலைதூக்கி இருக்கிறது! இழப்பீடு என்ற பெயரில் ஒரு சிறு தொகை தருகிறார்கள். இதுவே நகரங்களாக இருந்தால் இத்தனை குறைவாகத் தருவார்களா? கிராமவாசிகள்–ஆதிவாசிகள் என்றால் அவர்கள் மக்கள்



• மேதாபட்கருடன் மாணவிகள்



மாணவிகள்

இல்லையா?' என்று கேட்கிறார் மேதா பட்கர். 'சர்தார் சரோவருக்காக இது வரை 9000 கோடி ரூபாய் செலவாகி இருக்கிறது. முதலிலேயே ஒழுங்காக பிளான் பண்ணியிருந்தால் தண்டச் செலவு குறைந்திருக்கும்' என்கிறார்.

''கிருஷ்ணபுரா, அக்கர், உதுன்வா என்ற மூன்று மறுவாழ்வு நிலையங்களுக்குப் போய்ப் பார்த்தோம். சாணம் மெழுகிய, எந்தப் பூச்சி பொட்டும் வராத, அழகான, தூய்மையான குடிசைகளிலிருந்து இந்த அப்பாவி மக்களைக் கிளப்பி, வெறும்

# எதிர்ப்பு!

டின்ஷீட் அடித்த கொட்டகைகளில் குடியமர்த்தியிருக்கிறார்கள்!

"நர்மதை நதியில் சர்தார் சரோவரை அரசே கட்டுகிறது. மகேஷ்வர் அணையை எஸ். குமார்'ஸ் நிறுவனம் கட்டுகிறது. 2000 பேர் வேலை செய்ய வேண்டிய இடத்தில் ஐம்பது பேரே வேலை செய்கிறார்கள். அவர்களும் ஆந்திரப் பிரதேசத்திலிருந்து, குறைந்த கூலிக்கு வரவழைக்கப்பட்ட தொழிலாளர்கள். குஜராத் அம்புஜா சிமெண்ட் தொழிற்சாலை, சிமெண்ட் காண்ட்ராக்ட் பெற்றிருக்கிறது. அணைக்கட்டுக்கு இருக்கிற எதிர்ப்பைப் பார்த்த சிமென்ஸ் கம்பெனியும், பிற வெளிநாட்டு நிறுவனங்களும் ஒதுங்கிக் கொண்டு விட்டன. வேறு யார் முதலீடு செய்வார்கள் என்று கம்பெனி கம்பெனியாகக் கதவைத் தட்டுகிறார்கள் இப்போது!

''கடோல்மால் கிராமத்தில் சங்கீதா-ஸப்னா சகோதரிகள் தங்கள் தகப்பனார் தேவராம்பாயுடன் சேர்ந்து போராடுகிறார்கள். கல்கத்தாவில் படிக்கும் கேரள இளைஞர் படிப்பைப் பாதியில் விட்டுவிட்டு இங்கே வந்து விட்டார். அதேபோல் ஜவஹர்லால் நேரு யுனிவர்சிடியிலிருந்து அலீத் பாய். அமெரிக்க ஸியாட்டில் நகரில் மைக்ரோ சாஃப்ட் நிறுவனத்தில் வேலை பார்க்கும் பெண், வேலையை உதறிவிட்டு இங்கேயே வந்து விட்டார். நிகர்ப்பூரில் கமல்பாய், அவருடைய அம்மா, பாட்டி ஆகிய மூவரும் 'இந்த இடத்தை விட்டு நகரமாட்டோம். உயிர்த் தியாகம் செய்ய வேண்டுமானாலும் தயார்தான்!' என்றார்கள்.

• சில்வி

"எத்தனை எத்தனையோ மாற்று வழிகள் இருக்க அதிகச் செலவு செய்தும் குறைந்த பயனே தரும் திட்டத்தை அரசு உடனே கைவிட வேண்டும்'' என்கிறார் சித்தரூபா பலித் என்னும் சில்வி.

"பேகாவ் கிராமத்தில் பெண்கள் ஆண்களைவிட உறுதியாக இருக்கிறார்கள். ஆண்கள் அரசு தருகிற நஷ்டஈட்டை வாங்கிக் கொண்டு போய்க் குடித்துத் தீர்த்து விடுகிறார்கள். அவர்களுக்கு உணவைத் தவிர வேறு எந்த சுகமும் அளிக்க இந்தப் பெண்கள் மறுத்துவிடுகிறார்கள்!

"மேதா பட்கரின் கூட்டத்தைப் போலவே, கிராமங்கள் தோறும் நடக்கும் கூட்டங்களும் பாட்டோடுதான் முடிகிறது. எல்லாம் நர்மதா நதி அன்னை பற்றியும், இயற்கை பற்றியும் தான்.

"சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு எங்களுக்குப் பலத்த அடிதான். ஆனால் நாங்கள் பயந்து போய்விடவில்லை. இறுதியில் உண்மை நிச்சயம் வெல்லும் என்றார் மேதா பாட்கர்."

சந்திப்பு: **சாருகேசி**
படங்கள்: **வித்யா ராஜா, சாந்தலா ஹரிதாஸ்**




முதலீட்டில் ஆரம்பித்து விட்டோம். மொத்தம் பத்து மெஷின்கள் வாங்கியிருக்கிறோம். அழுக்குத் துணிகளை எடுத்து வந்து, எடை போட்டு எடைக்கு ஏற்ப காயின்களை, மெஷினில் போட்டு துவைத்துக் கொண்டு போகலாம். ஐந்து கிலோ துணிக்குக் கட்டணம் ஐம்பது ரூபாய். ஒரு தடவை லோடு செய்தால், நாற்பத்தைந்து நிமிடத்தில் நன்றாகத் துவைத்து, பிழிந்து கொடுத்து விடும் இந்த மிஷின்!" என்கிறார் பழனிசாமி.

"துணிகள் துவைக்கப்படும் நேரத்தில், ஒரு ரவுண்டு ரங்கநாதன் தெருவுக்குப் போய் ஷாப்பிங் முடித்துக்கொண்டு வந்துவிடுகிறார்கள் சில வாடிக்கையாளர்கள். இன்னும் சிலர் இங்கேயே இருக்கும் நேரத்தில் பொழுது போக்க பத்திரிகைகள், மியூசிக், டீவி போன்ற வசதிகளையும் செய்து கொடுத்திருக்கிறோம்! அதுமட்டுமில்லை; நாங்களே கூடுதல் கட்டணம் ஏதுமின்றி, வீட்டுக்கே சென்று துணிகளை வாங்கிவந்து, மறுபடி டெலிவரி செய்கிறோம். மக்களிடம் நல்ல வரவேற்பு கிடைத்திருப்பது, உற்சாக மூட்டுகிறது!" என்கிறார் சுப்ரமணியம்.

பேச்சிலர்ஸ் மத்தியில் இதற்கு நல்ல வரவேற்பாம். குடும்பங்களில் பலர் பெட்ஷீட், போர்வைகளை மட்டும் எடுத்து வந்து துவைத்து வாங்கிக் கொண்டு போகிறார்கள். வீட்டில் வாஷிங்மெஷின் வைத்திருப்பவர்களும் இங்கு வருகிறார்களாம். ஏனென்றால் வீட்டில் தாராளமாக தண்ணீர் செலவு செய்ய முடியவில்லையாம்!

— பாரதி

படம்: ஸ்ரீஹரி

# ஊருக்குப் புதுசு!

அமெரிக்காவில், வீடுகளில் வாஷிங் மெஷின் வைத்துக் கொள்ளுவது இல்லை. பதிலாக இரண்டு, மூன்று அபார்ட்மென்ட்களுக்குப் பொதுவாக ஓரிடத்தில் வாஷிங்மெஷின்கள் இருக்கும். வார இறுதி நாட்களில் அழுக்குத் துணிகளை அங்கே எடுத்துப் போய் வாஷிங்மெஷின்களில் துணிகளின் எடைக்கு ஏற்ப நாணயம் செலுத்தி, துவைத்து, காய வைத்து, இஸ்த்திரி செய்துகொள்வார்கள்.

இது போன்ற புதியமுறை சென்னையில் முதல் முறையாக அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. பழனிசாமி, சுப்ரமணியம் என்கிற இரண்டு பேர் தி.நகரில் இதை ஆரம்பித்துள்ளார்கள்.

'நாங்கள் அமெரிக்கா சென்றபோது, அங்கே இது போன்ற ஏற்பாட்டைப் பார்த்தோம். ஆச்சரியமாக இருந்தது. நம் ஊரிலும் இதைச் செய்து பார்த்தால் என்ன என்று தோன்றவே சுமார் பதினைந்து லட்சம் ரூபாய்

தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்

# பவர்ஃபைனான்ஸ்

நடத்தும்

## டெபாசிட் திரட்டும் முகாம்கள்

உள்ளூர் காசோலை
ஏற்றுக்
கொள்ளப்படும்.

## புதுடெல்லி

நாள் :

**9; 10 & 11 பிப்ரவரி, 2001.**

இடம் :

**டெல்லி தமிழ் சங்கம்**

தமிழ் சங்கம் மார்க், செக்டார்–5, R.K. புரம்,
புதுடெல்லி – 110 022.
தொலைபேசி : 6193966 / 6174217.

**நேரம் : காலை 10 மணி முதல் மாலை 7 மணி வரை**

## சேலம்

நாள் :

**22, 23 & 24 பிப்ரவரி, 2001.**

**ஸ்ரீ வாசவி சுபிக்ஷா ஹால்,**

மேட்டுத் தெரு
(ஸ்ரீ சுகவனேசுவரர் கோயில் தெரு),
சேலம் - 636 001.
✆ 416494

## திருச்சி

நாள் :

**26 & 27 பிப்ரவரி, 2001.**

**அஜந்தா ஹோட்டல்,**

ஜங்ஷன் சாலை,
திருச்சி - 620 001.
✆ 415501

**நேரம் : காலை 9 மணி முதல் மாலை 7 மணி வரை**




மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ளவும் :

**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம்**

(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)
பதிவு அலுவலகம் : எண் 84, டிடிகே சாலை, ஆழ்வார்பேட்டை, சென்னை – 600 018.
தொலைபேசி : 4997689, 4995648. ஃபேக்ஸ் : 044-4982894.

30-9-2000 தேதியிட்ட ... இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது

Visit us at : www.tn.gov.in / www.chennaionline.com / www.aaraamthinai.com / www.southindia.com / www.webulagam.com / www.thegoal.com

பள்ளிக்குச் செல்லும் குழந்தைகள் பலர் இன்று கண்ணாடி அணிந்து கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். நாளாக, நாளாக இவர்களுடைய கண்ணாடி பவர் அதிகரித்துக் கொண்டே போவது, பெற்றோர்களைக் கவலைப்பட வைக்கிற ஒரு விஷயம். பெற்றோர்களுடைய இந்தக் கவலையைப் போக்க, ஒரு எளிய வைத்தியம் சொல்லட்டுமா?

உங்கள் குழந்தைகளுக்கு, வாரம் ஒரு முறை பாசிப்பருப்பு, வெல்லம் இவற்றுடன் ஏலக்காய்ப் போட்டு, பாயசம் வைத்துக் கொடுங்கள். ஏற்கெனவே சொன்னதைப் போல, ஏலக்காயின் தோலை அகற்றியோ அல்லது நன்றாக நசுக்கியோ பயன்படுத்துங்கள். இப்படி ஒரு வருட காலம் தொடர்ந்து பாசிப்பருப்புப் பாயசம் கொடுத்து வந்தபின், உங்கள் குழந்தைகளை கண் பரிசோதனைக்கு அழைத்துச் செல்லுங்கள். கண்ணாடியின் பவர் கூடியிருக்காது என்பது மட்டுமில்லை. குறைந்தும் இருக்கும் என்பது நிச்சயம். ஏலக்காய், செரிமானத்துக்கு ஏற்றது என்பது தெரிந்ததுதான். எனவே, வெற்றிலை, பாக்கு போட்டுக் கொள்ளுகிறபோது உடலுக்குக் கேடு விளைவிக்கும் புகையிலையைத் தவிர்த்து ஏலக்காய் ஒன்றைச் சேர்த்துக்கொண்டால் நல்லது.

# கொத்துமல்லி



தமிழ்நாட்டு சட்டசபையில் மாநில சுகாதார அமைச்சரான ஆற்காடு வீராசாமியால் சிபாரிசு செய்யப்பட்ட பெருமைக்குரிய கிச்சன் கிளினிக் ஐட்டம் கொத்துமல்லி. ரத்தக் கொதிப்பைக் குறைக்கவும், ஆரோக்கியமான வாழ்க்கைக்கும் தினம் ஒருபிடி கொத்துமல்லி சாப்பிடுங்கள்.



மூலிகைமணி
டாக்டர் க.வேங்கடேசன்

இஞ்சியைத் தோல் சீவி விட்டும் மிளகை இலேசாக வறுத்துவிட்டும், வெந்தயத்தைத் தண்ணீரில் ஊற வைத்தும் பயன்படுத்த வேண்டும் என்று நான் முன்பே சொல்லி இருக்கிறேன். அதைப் போல, பச்சை கொத்துமல்லியைத் தனியே பயன்படுத்துவதைவிட, அத்துடன் கருவேப்பிலை, உளுந்து, சிறிது மிளகு, சீரகம், உப்பு சேர்த்து இலேசாக வதக்கி, துவையல் செய்து, சாப்பிட்டால் உடம்புக்கு நல்லது.

சிலர், பாசிப்பருப்பு, மிளகு, சீரகம், வெந்தயம், பெருங்காயம் சேர்த்து, 'மசியல்' செய்து, சாப்பிடுவார்கள். இதுவும் நல்லதுதான்.

பச்சைக் கொத்துமல்லி ஒரு புறம் இருக்க, தனியாவின் மருத்துவக்குணங்கள் பற்பல. ஒரு ஸ்பூன் தனியாவை ஒரு டம்ளர் தண்ணீரில் நன்றாகக் கொதிக்க வைத்து, வடிகட்டி, ஆற வைத்து, அதனுடன் தேன் அல்லது பனங்கற்கண்டு சேர்த்துப் பருகலாம். காலையில் ஒரு தம்ளர், மாலை ஒரு தம்ளர் என்று ஒரு மாத காலத்துக்கு இரண்டு வேளையும் சாப்பிட்டு வந்தால், ரத்தக் கொதிப்பு, தலை சுற்றல், போதை மயக்கம் போன்றவை கட்டுப்படும். அதுவும் குறிப்பாக பிளட் பிரஷர்காரர்கள், இந்த தனியா தண்ணீரைக் குடித்து வந்து, டெஸ்ட் எடுத்துப் பார்த்தால், பி.பி. கட்டுப்பட்டிருப்பதைக் காணலாம்.

கொத்துமல்லி சூப் தயாரிப்பது எப்படி என்று உங்களுக்குத் தெரியுமா? ஒரு சிறு கைப்பிடி அளவுக்குக் கொத்துமல்லியை எடுத்துக்

கொள்ளுங்கள். அதனுடன் இரண்டு டம்ளர் தண்ணீர் விட்டு, நன்றாகக் காய்ச்சி, ஒரு குவளை அளவுக்கு வடிகட்டி அதில் மிளகு, சீரகம், வெந்தயப்பொடி, சிறிது உப்பு, பூண்டு, வெங்காயம், கருவேப்பிலை ஆகிய

# தைலம்!

டாக்டர்
க.வே. அபிராமி



வற்றைச் சேர்த்துத் தாளித்துக் கலந்து விடுங்கள். இந்தச் சூப்பை ருசித்துப் பாருங்கள். அதன் டேஸ்ட்டுக்கு அடிமையாகி விடுவீர்கள்; ஆரோக்கியத்துக்கும் ஏற்றது.



கோடைகாலத்தில் பலருக்கு மோர் சாப்பிடப் பிடிக்கும். புளிப்பில்லாத மோரில், சிறிதளவு கொத்துமல்லி இலைகளைக் கலந்து, கொஞ்சம் சீரகப் பொடி சேர்த்து, உப்பில்லாமல் பருகி வர, பிளட்பிரஷர் கட்டுப்படும்.

விஞ்ஞானபூர்வமாகவும் இதற்கு விளக்கம் தருவது சாத்தியமே! பொதுவாக, ரத்த அழுத்தம் அதிகரிப்பதற்கு, வயிற்றில் அதிக அளவில் பித்தம் சேருவதுதான் காரணம். இதன் ஒரு பகுதி மீண்டும் ரத்தத்துக்கே வந்து சேர்ந்து விடுகிறது. இதனால்தான், ரத்த அழுத்த நோய்க்கு, சித்த மருத்துவத்தில் 'ரத்தப் பித்தம்' என்று ஒரு பெயரும் உண்டு. கொத்துமல்லி சூப், கொத்துமல்லி துவையல், கொத்துமல்லி கலந்த மோர் ஆகியவற்றைச் சாப்பிடும்போது, அவை வயிற்றில் சேருகிற பித்தத்தை சிறுநீர் வழியாக வெளியேற்றிவிடும். இதனால் ரத்தத்தில் பித்தம் கட்டுப்பட்டு, நம் உடம்பில் உள்ள ரத்த அழுத்தத்தைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்கும். 'பித்த சாந்தி' என்பது தனியாவின் முக்கியமான மருத்துவக் குணங்களுள் ஒன்று.

ரத்த அழுத்தத்துக்குத் தரப்படும் மாத்திரைகள் சிறுநீரைப் பெருக்கி, வெளியேற்றுவதால், பி.பி குறைகிறது. அதனால்தான் ஆரோக்கியமான வாழ்வுக்கு, அன்று சட்டசபையில் அமைச்சர் ஆற்காடு வீராசாமி கொத்துமல்லியை சிபாரிசு செய்தார்.

பொதுவாகவே, கொத்துமல்லி மிகுந்த மணம் கொண்டது. மணமற்ற மலரும் கொத்துமல்லி சேர்க்காத சாம்பார் அல்லது ரசமும் ஒன்று என்பார்கள் உணவுப் பிரியர்கள். பசியைத் தூண்டும், செரிமானத்தைத் துரிதப்படுத்தும், உடலின் வெப்ப அளவை அதிகரிக்கும், உடம்பில் உற்பத்தியாகும் அதிகப்படியான சிறுநீரை முறைப்படி வெளியேற்றும் குணங்கள் இதற்கு உண்டு.

தவிர, உள்சூடு, குளிர்க் காய்ச்சல், மூளைக்கோளாறு காரணமாக வரக்கூடிய விக்கல், நாவரட்சி, செரிமானமின்மை, வாந்தி, ஏப்பம் ஆகியவற்றைப் போக்க, பெரிதும் உதவுகிறது கொத்துமல்லி.

மேற்கத்திய நாடுகளில் கொத்துமல்லியிலிருந்து ஒருவித தைலம் எடுக்கிறார்கள். மேற்கூறிய நோய்களுக்கு இந்தத் தைலத்தின் ஒன்றிரண்டு சொட்டுக்களை, சர்க்கரை கலந்து தருவார்கள்.

கொத்துமல்லி மகாத்மியம் சொல்லும் சித்தர் பாடலும் உண்டு என்பது பலருக்கு ஒரு புதிய செய்தி!

படங்கள்: **வெங்கடேஷ்**




# டபுள் பஞ்ச்!

## வட்டமேஜை

✉ ஓவியர் சசி நோய்க் கொடுமையிலிருந்து மீண்டு, மீண்டும் ஓவிய சகாப்தம் படைக்க எல்லா மத தெய்வங்களையும் வேண்டி வழிபாடு செய்தேன்.

**திருவண்ணாமலை, எல்.மீனாட்சிசுந்தரம்**

✉ தலையங்க கார்டூன்கள் அனைத்தும் நச். சீனத் தலைவரின் 'காரிய கைகுலுக்கல்'. அவரது உள் நோக்கத்தை அப்பட்டமாகப் படம் பிடித்தது டபுள் பஞ்ச்!

**சூரம்பட்டி, டி.என்.சத்யா முருகவேல்**

✉ தமிழகத்திலிருந்து அடுத்த இளம் புயல் சியு. இந்திய அணியில் இடம் பெற்று கலக்கப் போகிறான் என்பதை அறிந்து. 'அட்டைப்பட அந்தஸ்து' கொடுத்து. அவரைப் பற்றி கட்டுரை வெளியிட்டு. அவரை வாழ்த்தியதன் மூலம் 'கல்கி' இளை ஞர்களை உற்சாகப்படுத்தும் பத்திரிகை என்பதை நிரூபித்திருக்கிறது.

**மதுரை, என். பாலகிருஷ்ணன்**

✉ பிரபல வி.ஐ.பி.க்களையே திரும்பத் திரும்ப விமர்சனம் பண்ணிக் கொண்டிருக் கும், இதழ்களின் நடுவே, சாக்கடைத் தொழிலாளர்களின் நலனுக்காகவே ஒரு தலையங்கம் எழுதி, அரசுக்கும் வாரியத்துக்கும் உடனடியாக, உணர்த்தியிருந்த விதம் அருமை.

**கும்பகோணம், புலவர் எஸ்.கே. மூர்த்தி**

✉ கே.பி. என் வாடிக்கையாளர்கள் மூலமாகவே அந்நிறுவன முதலாளியைப் பேட்டி கண்டிருந்தது புதுமை!

**திருப்பரங்குன்றம், டி.கே. சுப்பிரமணியன்**

✉ 'தீனா' படத்துக்குப் போனாப் போகுதுன்னு 'ஆவரேஜ்' சர்டிபி கேட் கொடுத்த உமது விமர் சனத்தை இயற்கையா ஏத்துக்க முடியலியே!

**மதுரை, ஏ. முத்துலட்சுமி**

✉ பிளஸ் டூ மாணவர்களுக்குப் பத்மா சேஷாத்ரி பள்ளியின் தலைவர் திருமதி ஒய்.ஜி. பார்த்தசாரதி, கூறிய பரீட்சைத் தேர்வுக்கான 'டிப்ஸ்'கள் மிக உணர்ந்து பின்பற்றக் கூடியவை.

**வேலூர், பத்மநாபன்**

✉ 'சியூ'வின் தந்தை சிவராமகிருஷ்ணன் இந்திய அணியின் முன்னாள் ஓபனிங் பேட்ஸ்மேனாக இருந்ததில்லை. தமிழ்நாடு, கிழக்கு மண்டலம் மற்றும் தெற்கு மண்டல அணிகளில் ஓப்பனிங் பேட்ஸ்மேனாக அவர் சிறப்பாக ஆடியுள்ளார்.

**சென்னை, ராமலிங்கம்**

✉ மூலிகை மணியாரின் முத்தான கருத்து கள் எங்களுக்குச் சத்தாக இருக்கின்றன. இப்படிப்பட்ட இயற்கை மருத்துவத்தை அன்றாட வாழ்வில் கடைபிடிக்கும் பொழுது பணவிரயம் தடுக்கப்படுகிறது. உணவுக்கு உணவு. மருந்துக்கு மருந்து. கல்கிக்கோ தொண்டுக்குத் தொண்டுக்கு.

**சென்னை, சேது. கோவிந்தசாமி**

✉ கணவன் - மனைவியிடையே அன்பு என்ற நீர் பாய்ச்சி அந்த உறவினை எந்தச் சூழ்நிலையிலும் சிதைய விடக்கூடாது என்ற அதி உன்னத தத்துவத்தினை வேஷங்கள் சிறுகதை பாங்குடன் எடுத்துரைத்திருந்தது.

**தோட்டக்குறிச்சி, இரா.வனையாபதி**

## INDIAN INSTITUTE OF MANAGEMENT & TECHNOLOGY

25, Mada Church Road, Mandaveli,
Chennai - 600 028. INDIA Phone : 4956036
Fax : 495 2692 e-mail : icolam@hotmail.com

*in association with*



## ALL INDIA COUNCIL FOR MANAGEMENT STUDIES

29, Lazarus Church Road, R.A. Puram,
Chennai - 600 028. INDIA Phone : 4933210
Fax : 493 3259 e-mail : aiicas@hotmail.com

**IIMAT** and **AICOMAS** jointly offer the following **One Year** and **Six Months** Diploma Courses by correspondence

**Eligibility :** No formal qualification (Open Education System). **For Application and Prospectus send Rs. 10/- Postage stamp** to any one of the Institute.

### ONE YEAR DIPLOMA COURSES

* BUSINESS MANAGEMENT
* BUSINESS ADMINISTRATION
* MARKETING MANAGEMENT
* TOTAL QUALITY MANAGEMENT & ISO 9000 / QS 9000
* MATERIALS MANAGEMENT
* EXPORT & IMPORT MANAGEMENT
* HOTEL MANAGEMENT
* CATERING MANAGEMENT
* BANKING & INSURANCE MANAGEMENT
* TRAVEL & TOURISM MANAGEMENT
* MECHANICAL ENGINEERING
* CIVIL ENGINEERING
* ELECTRICAL ENGINEERING
* ELECTRONICS & COMMUNICATION ENGINEERING

### SIX MONTHS DIPLOMA COURSES

* BUSINESS MANAGEMENT
* BUSINESS ADMINISTRATION
* OFFICE ADMINISTRATION
* SALES & MARKETING
* FINANCIAL MANAGEMENT
* RESEARCH & DEVELOPMENT
* INDUSTRIAL RELATIONS & PERSONNEL MANAGEMENT
* HUMAN RESOURCES DEVELOPMENT
* EXPORT & IMPORT MANAGEMENT
* FOREIGN TRADE MANAGEMENT
* MATERIALS MANAGEMENT
* PRODUCTION MANAGEMENT
* FOOD & BEVERAGE MANAGEMENT
* FOOD PRODUCTION MANAGEMENT
* COMPUTERS IN OFFICE MANAGEMENT
* COMPUTER APPLICATION
* HOTEL MANAGEMENT
* BANKING MANAGEMENT
* TEACHER TRAINING EDUCATION
* LABOUR LAWS
* QUALITY CONTROL & ISO 9000
* ADVERTISING & PUBLIC RELATIONS
* NURSING MANAGEMENT
* ENVIRONMENTAL MANAGEMENT SYSTEM & ISO 14000/14001
* INTERNATIONAL BUSINESS MANAGEMENT
* BUSINESS INFORMATION SYSTEM
* MANAGEMENT INFORMATION TECHNOLOGY
* HEALTH & HOSPITAL MANAGEMENT
* HOSPITAL ADMINISTRATION
* EDUCATIONAL MANAGEMENT
* TOTAL QUALITY MMANAGEMENT & ISO 9000
* NETWORKING & INTERNET APPLICATION
* QUALITY ASSURANCE & QS 9000 / ISO 9000
* SOFTWARE CAPABILITY MATURITY MODEL (guidelines for improving software process)
* INTERNATIONAL AIRLINES MANAGEMENT (Affiliated/Recognised by Westwind Aviation Academy, Arizona, USA)
* E-COMMERCE APPLICATION
* WEB DESIGNING APPLICATION
* WEB APPLICATION DEVELOPMENT
* INTERNET & INTRANET SECURITY

**We offer Post-Graduate Diplomas also. (Duration - 18 months). Kindly write to any one of the above institute for more information.**



# ஒரே வாரத்தி

இந்திய ஸ்தூபி மரபுக் கலையை ஒட்டிக் கட்டப்பட்ட ஏழு மாடி பகோடாவில் ஏறி, நான்கு பாகங்களிலிருந்தும் ஷிஆன் நகரைப் பார்ப்பது ஒரு த்ரில். புத்தர் சிலைகள்தான் இங்கே.

கீழே இறங்கி வந்தால் மெகா சைஸ் மணிக்கு ஒரு மண்டபம். ட்ரம்முக்கு ஒரு மண்டபம்!

மசூதி, மியூசியம் இரண்டும் சற்றே ஒதுக்குப்புறமாயிருந்ததால் திட்டமிட்டபடி போக முடியவில்லை. 'மியூசியம் பார்க்க ஷாங்காயில் வாய்ப்பு இருக்கிறது. கவலைப்பட வேண்டாம்' என்று முன்பே கோபால் கூறியிருந்ததால், ஷிஆனில் அதைத் தவற விட்டது குறித்து வருத்தம் ஏதும் இருக்கவில்லை.

ஓட்டலில், டாக்ஸியில், ஒரு சிறிய சீனக் கடையில் என்று ஒரு இடம் பாக்கி இல்லாமல் பிரெட் கிடைக்குமா? என்று ஆங்கிலத்தில் எழுதிக் காட்டியும், (சுமாராக) படம் வரைந்து காண்பித்தும், அவர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை.

முதல் நாள் இரவு பெரிய சைஸ் வாழைப் பழங்கள் இரண்டையும் ஓர் ஆப்பிளையும் மட்டுமே சாப்பிட்டிருந்த வயிறு அலாரம் மணி அடிக்கத் தொடங்கியது.

ஓட்டலிலிருந்து வெளியே வந்து சாலையைத் தாண்டி எதிரே ஒரு நடை நடந்து

• அடியேன்

பார்க்கலாம் என்று துணிச்சலாகப்
புறப்பட்டதில் பலன் கிடைத்தது!

ஓட்டலுக்கு எதிரேயே பேக்கரி
ஷாப்!

காய்ந்த மாடு கம்பங் கொல்லை
யில் விழுந்தது போல், குறுக்கே வரும்
கார்கள் டாக்ஸிகளைப் புறக்கணித்து
ஜீப்ரா க்ராஸிங்கில் ஓர் ஓட்டம் ஓடி
னேன். (ஜீப்ரா க்ராஸிங்கில் பாத
சாரிகள் கடக்கும் போது, வாகனங்கள்
தானாக நின்று விடுகின்றன! மக்கள்
கடந்த பிறகே வாகனங்கள் நகர்
கின்றன. இந்தச் சலுகையை இந்தியா
வில் நிச்சயம் பாதசாரிகள் எதிர்
பார்க்க முடியாது!)

பிற்பகல் மூன்று மணிக்கே
ஓட்டல் அறையைக் காலி செய்து

# 30 மாடிக் கட்டடம்!

## சென்னை டு சைனா - 5

விட்டு, ஷி ஆன் விமான நிலையத்
துக்குப் புறப்பட்டாயிற்று. (ஐந்து
நட்சத்திர ஓட்டலின் அத்தனை வசதி
களையும் புறக்கணித்து விட்டு முன்ன
தாகவே கிளம்ப மனக ஒத்துழைக்க
வேண்டும்!) பெய்ஜிங்கிலும் சரி, ஷி ஆனிலும்



சரி, ஓட்டல் அறை வாடகையோடு,
'ஸிடி டெவலப்மென்ட் ஃபண்டு' என்ற
வகையில் ஒரு நாளைக்கு ஆறு யுவான்
என்று கணக்கிட்டு, நம்மிடம் இருந்து
வசூலித்து விடுகிறார்கள். கொஞ்சம்
ஜாக்கிரதையாக இருக்க வேண்டிய விஷயம்
'மினி பார்'தான். ஃப்ரிஜ்ஜில் பீர், பெப்ஸி,
கோகோகோலா டின்கள் இருக்கின்றனவே,
நமக்குத்தான் வைத்திருக்கிறார்கள் என்று
குடித்துக் காலி பண்ணினால் தொலைந்
தோம்! அதற்கும் அறுபது யுவான் பில்லில்
சேர்த்து விடுவார்கள். பிஸ்லரி வாட்டர்
மட்டுமே இதில் இலவசம்!

டாலரை மாற்ற வெளியே வந்து வங்கி
யிலோ, அங்கீகரிக்கப்பட்ட சேஞ்சரிடமோ
போக அவசியமில்லாமல், ரிசப்ஷனின் ஒரு
பகுதியிலேயே அதற்கும் வசதி இருக்கிறது.
வெளியில் என்ன ரேட் இருக்கிறதோ அதே

சாருகேசி

• ஷாங்காய் நகரில்...

'ரேட்'டில் பண மாற்றுக் கிடைத்து விடுகிறது.

ஷி ஆன் விமான நிலையத்தில் அறிவிப்புப் பலகையில், நான் பயணம் செய்ய வேண்டிய ஆறு மணி விமானம் தாமதம் ஆகும் என்று குறிப்பு வந்தது. இரண்டு மணி நேரம் தாமதம்! அப்படியானால் எட்டு மணிக்குப் புறப்பட்டு, ஷாங்காய் போய்ச் சேரும் போது பத்து மணி ஆகிவிடும்!

அதற்கு முன்னால் 3.55க்குப் புறப்படும் விமானத்தில் பயணம் செய்ய அனுமதிப்பார்களா? சைனா நார்த்வெஸ்ட் ஏர்லைன்ஸ் கவுன்ட்டரில் மெதுவான ஆங்கிலத்தில் விசாரித்தபோது, மூன்றாவது கவுன்ட்டரில் கேட்கச் சொன்னார் ஓர் அதிகாரி. கடகடவென்று கம்ப்யூட்டரில் தட்டிவிட்டு, 'நோ பிராப்ளம். ஆப்போஸிட் கவுன்ட்டர்!' என்று கைகாட்டினாள் பெண்மணி. எதிர்க்கவுன்ட்டரில் டிக்கட்டைக் கொடுத்து, 3.55 ஃப்ளைட்டுக்கு மாற்றச் சொல்லிக் கேட்டபோது, உடனே மாற்றி, கையெழுத்தும் போட்டுக் கொடுத்தாள் சீனப் பெண்மணி. ஆனால் ஓகே போடவில்லை! "இடம் இருக்குமா?" என்று கேட்டதற்கு, "கவலைப்படாதீர்கள். அது ட்ரான்ஸிட் ஃப்ளைட். பெரும்பாலும் இடம் கிடைத்து விடும்" என்றாள். மணி 3.15. உடனே செக்இன் செய்து போர்டிங் பாஸ் வாங்கிக் கொண்டு இருக்கை எண் தேடினால் காணோம்! "உள்ளே எந்த ஸீட் காலியாக இருக்கிறதோ அதில் உட்கார்ந்து கொள்ளுங்கள்!" என்றாள் 'செக் இன்' பெண்மணி.

அடுத்த அரைமணி நேரத்தில் விமானத்தில் ஏறியவுடன் மூச்சு வந்தது. ஸீட் இருந்தது! (நடக்குமா இது நம்மூரில்!)

பக்கத்து ஸீட்கார சீனர், "இந்தியா?" என்று கேட்டார்.

"ஆமாம்." என்றவன், "ஷாங்காய் போகிறேன்!" என்றேன். "நீங்கள்?"

"நான் அமெரிக்காவில் இருக்கிறேன். பதினைந்து வருடங்களாக... ஷாங்காய்க்காரன்!" என்றார். (அப்பாடா! ஆங்கிலம் பேசும் ஒரு சீனரைக் கண்டு பிடித்து விட்டேன்!)

அவர் ஸெமி-கண்டக்டர் தயாரிப்பு நிறுவனத்தின் இயக்குநர். அமெரிக்கத் தயாரிப்பாளர்கள் அவரைச் சீன மார்க்கெட்டைப் பிடிக்க அனுப்பி வைத்திருந்தார்கள். அவர் ஷாங்காய்க்காரராகவே இருந்தது அவர்களுக்கு வசதியாகப் போய் விட்டது. கம்ப்யூட்டர் துறையிலும் சிபியு(CPU)க்களுக்கு, சிறிய ஸெமி-கண்டக்டர்களைப் பயன்படுத்த வாய்ப்பிருப்பதைக் குறிப்பிட்டார். தாம் ஒரு வாரம் ஷாங்காயில் இருக்கப் போவதாகச் சொன்னார்.

ஆறு மணி அளவில் விமானம் ஷாங்காய் ஏர்போர்ட்டை அடைந்ததும்தான், உறவினர் கோபாலுக்கு எப்படி விஷயத்தைத் தெரியப்படுத்துவது என்ற கவலை தோன்றியது. எனது விமானம் தாமதமாக எட்டு மணிக்கு மேல் புறப்பட்டு பத்து மணி சுமாருக்குத்தான் விமான நிலையத்துக்கு வரும் என்று அவர் நினைத்திருப்பார். விமான நிலையத்துக்கு ஃபோன் செய்து விசாரித்துத் தெரிந்துகொண்டிருப்பார். மாறாக நான் அந்தக் குறிப்பிட்ட விமானத்தில் போகாமல், அதற்கு முன்னதாகவே நான்கு மணி விமானத்தில் பயணப்பட்டு விட்டதை அவரிடம் சொல்லவே இல்லையே!

அந்தச் சீன இயக்குநரிடம், விமானம் தரையைத் தொடும் சமயத்தில் என் கவலையைச் சொல்லி, "விமானக் கூடத்திலிருந்து போன் செய்ய வசதி இருக்கிறதா?" என்று கேட்டேன். "இருக்கிறது. ஆனால் உங்களிடம் அதற்கான யுவான் மதிப்புள்ள கார்டு இருக்க வேண்டுமே?" என்றார்.

மறு நிமிடமே, தம் கோட் பாக்கெட்டில் கையை விட்டு, தமது செல்போனை எடுத்து, "டெலிபோன் நம்பரைச் சொல்லுங்கள்!" என்றார். சொன்னேன். எண்களை அழுத்திவிட்டு என் கையில் கொடுத்து, "பேசுங்கள்!" என்றார்.

"கோபால்! நான் ஷாங்காய் வந்து சேர்ந்துவிட்டேன்!" என்றதும் அவருக்குத் தூக்கிவாரிப் போட்டிருக்க வேண்டும்.

"நான் விமானத்துக்குள்ளே இருந்துதான் பேசுகிறேன். ஒரு சீன நண்பரின் செல்போனிலிருந்து. பேகேஜ் பகுதியிலிருந்து பெட்டியை எடுத்துக்கொண்டு, விமான தளத்துக்கு வெளியே வர இன்னும் குறைந்தது 10 – 15 நிமிடங்களாவது ஆகும்!" என்றேன்.

"நான் ஏழாவது நிமிடம் அங்கே

---

**"நாம ஊரை விட்டு ஓடுறதுல ஒரு சின்ன பிராப்ளம் இருக்கு!"**

**"என்ன பிரச்னை?"**

**"லோக்கல் போலீஸ் ஸ்டேஷன்ல தினம் நான் ஆஜராகிக் கையெழுத்துப் போடணும்!"**

**— அம்பை தேவா**

---

இருப்பேன்!'' என்றார் கோபால். அவர் இருப்பிடம் ஏர்போர்ட்டுக்கு அருகே தான்!

அந்தச் சீன நண்பரிடம், ''தாங்க்ஸ், தாங்க்ஸ்'' என்று சொல்லி போனைக் கொடுத்தபோது, தோளைக் கட்டிப் பிடித்துக் கொண்டு, ''இது ஒரு பெரிய விஷயமே இல்லை. டேக் கேர்!'' என்று விடைகொடுத்தார்.

டாக்ஸிகள் நூற்றுக்கணக்கில் வரிசை யாக அணிவகுத்து நிற்க, பயணிகள் ஒவ்வொருவராக அதில் ஏற, காவல் துறைக் காரர் (அப்பாடா, ஒரு போலீஸ்காரரைப் பார்த்தாயிற்று!) உதவிக் கொண்டிருந்தார். இன்னொருவர் டாக்சி எண்ணைக் குறித்துக் கொண்டிருந்தார்.

''ஹாய்!'' என்று கைகளை அசைத்தபடி வந்தார் கோபால். அதிக தூரம் போகும் டாக்ஸிகள் ஒரு வரிசை. குறைந்த தூரம் போகும் டாக்ஸிகள் இன்னொரு வரிசை. இரண்டாவது வரிசையிலிருந்து ஒரு டாக்ஸியை வரவழைத்தார்.



''என்ன ஆயிற்று உங்கள் கார்?''

''இந்தியாவிலிருந்து கனடாவில் செட்டில் ஆன இந்தியத் தொழிலதிபர் ஒருவரை அழைத்து கொண்டு வர காரை எடுத்துக் கொண்டு டிரைவர் ஈக்வான் போயிருக்கிறார். நாம் ஏழே நிமிடங்களில் ஹாங்சோவ்வுக்குப் போய் விடலாம் - டாக்ஸியில்!'' என்றார்.

ஹாங்சோவ் பகுதியில்தான் வீடு.

டாக்ஸி, மெத்தென்ற, அகலமான சாலைகளையும், ஃப்ளை ஓவர்களையும் தாண்டி விரைந்தது.

வானுயரக் கட்டடங்கள். 'மாஸ்ஸிவ்' என ஆங்கிலத்தில் சொல்லுவார்களே, அது போல ஒவ்வொரு கட்டடமும் பிரும் மாண்ட மாளிகை போல் இருந்தது. இருட்டத் தொடங்கி விட்டதால் அவற்றின் விளக்கொளி இன்னும் கவர்ச்சியாய் இருந்தது.

ஃப்ளை ஓவர் என்றால் நம்மூர் மாதிரி அல்ல. அதிலேயும் இரண்டு தளங்கள்! ஃப்ளை ஓவரின் கீழேயே இன்னும் அகல மான சாலைகள். இந்தப்புறம் நாலு, அந்தப் புறம் நாலு என்று எட்டு லேன் டிராஃபிக்!

பெய்ஜிங்கிலும், ஷிஆனிலும் இருந்தது போலவே தெருவுக்கு நாலு பொது டெலிபோன் கூண்டுகள்! இந்த முனையில் இரண்டு. அந்த முனையில் இரண்டு. எல்லாம் ஆளுயரத்துக்கு. டெலிபோனுக்கு மட்டும் குடை மாதிரி சிறியதாகப் பாதுகாப்பு! (நம்மூரில் இது மாதிரி ஒன்று இருக்க முடியுமா? விட்டு வைப்பார்களா?)

''சைனாவுக்கு வருவதற்கு முன்னால், இந்த ஊர்கள் எல்லாம் இப்படி இருக்கும் என்று நினைத்தீரா?''

''சத்தியமாக இல்லை!''

''குடிசை வீடுகள், அஸ்பெஸ்டாஸ் வீடுகளாக இருக்கும். குண்டும் குழியுமாக ரோடுகள் சின்னதாக இருக்கும். குப்பையும் கூளமுமாக இருக்கும். நிறைய பிச்சைக் காரர்கள் இருப்பார்கள். பசியும் பட்டினியு மாக மக்கள் இருப்பார்கள்... என்றெல் லாம்தானே நினைத்தீர்கள்?''

''ஒரேயடியாக அப்படி நினைக்க வில்லை. ஆனால் எனக்கு இன்னும் பிரமிப்பு அடங்கவில்லை. சிங்கப்பூர், சிகாகோ, நியூயார்க், ஹாங்காங் எல்லாம் இந்த நகரங்களுக்கு உறைபோடக் காணாது என்று மட்டும் தோன்றுகிறது!''

''இங்கே எல்லாம் 'மாஸ்ஸிவ்'தான். தயாரிப்பு என்றால் தயாரித்துக் குவித்து விடுவார்கள்! எந்தப் பொருளை எடுத் தாலும் வாங்கத் தூண்டும் இவர்கள் கைவண்ணம். என்ன ஒழுங்கு, டிஸிப்ளின் பாருங்கள்! இதுதான் கம்யூனிஸ்ட் நாடு என்று நினைக்கத் தோன்றுகிறதா? ...வருகிற வழியில் ஃப்ளை ஓவர் அருகே ஒரு முப்பது மாடிக் கட்டடத்தைக் கட்டிக் கொண்டிருந் தார்களே, நீங்கள் ஒரு வாரம் கழித்துப் புறப்படும் போது பாருங்கள். கட்டி முடித்து உள்ளே குடிபுகுந்திருப்பார்கள்! உங்கள் ஊர் மாதிரி மேம்பாலம் கட்டுகிறோம் என்று சின்ன ஓவர்பிரிட்ஜுக்கு இரண்டு வருஷம் மூணு வருஷம் எடுத்துக் கொள்ளுகிற சமாசாரமே இங்கே இல்லை. நாலு மாதம். அதிகபட்சம் ஆறு மாதம். அதுவும் எந்த மாதிரி ஃப்ளை ஓவர்! உங்கள் ஊர் போல நாலு மடங்கு ஆறு மடங்கு இருக்கிற மேம் பாலத்துக்கு! டிஸிப்ளின் மட்டுமா? உழைப்பு. கடுமையான உழைப்பு!''

ஒரு வாரத்துக்கு கோபால் 'நம் ஊர்' அர்ச்சனை செய்வதைப் பொறுமையுடன் கேட்டுக் கொள்ளுவதைத் தவிர வேறு வழி இல்லை என்று முடிவு செய்தேன்!

– அடுத்த வாரம்

எங்களிடம் ராசிக்கல் மோதிரம் வாங்கி பயன்பெறும் அனைவருக்கும் எங்களது வாழ்த்துக்கள்




ராசிக்கல் மோதிரம் வாங்க ராசியான கடை P.R. ஜுவல்லரி

# P.R. JEWELLERY

GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES

102, USMAN ROAD, T. NAGAR, CHENNAI - 600 017. PH: 4344442, 4327764

TUESDAY HOLIDAY (10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)



**P.R.** ஜுவல்லரியில் ராசிக்கல் மோதிரம் வாங்கி அணிந்துபயன்பெறுங்கள். ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம் ரூ. 400/-

| நட்சத்திரம் | ராசி | ராசிக்கேற்றகல் | கல்லின் எடை | வெள்ளி மோதிரம் விலை | இன்சூர் தபால் செலவு |
|---|---|---|---|---|---|
| அசுவினி, பரணி, கார்த்திகை முதல் பாதம் முடிய | மேஷம் | பவழம் | 2 CARAT | 400/- | 50/- |
| கார்த்திகை 2-ம் பாதம், ரோகிணி, மிருகசீரிஷம் 2ம் பாதம் முடிய | ரிஷபம் | வைரம் | 5 CENT | 2250/- | 200/- |
| மிருகசீரிசம் 3-ம் பாதம், திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் முடிய | மிதுனம் | மரகதபச்சை | 20 CENT | 400/- | 50/- |
| புனர்பூசம் 4ம் பாதம், பூசம், ஆயில்யம் முடிய | கடகம் | முத்து | 2 CARAT | 400/- | 50/- |
| மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய | சிம்மம் | மாணிக்கம் | 20 CENT | 400/- | 50/- |
| உத்திரம் 2ம் பாதம் முதல், அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் முடிய | கன்னி | மரகத பச்சை | 20 CENT | 400/- | 50/- |
| சித்திரை 3-ம் பாதம் முதல், சுவாதி, விசாகம் 3ம் பாதம் முடிய | துலாம் | வைரம் | 5 CENT | 2250/- | 200/- |
| விசாகம் 4ம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய | விருச்சிகம் | பவழம் | 2 CARAT | 400/- | 50/- |
| மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் முடிய | தனுசு | புஷ்பராகம் | 1 CARAT | 400/- | 50/- |
| உத்திராடம் 2ம் பாதம், திருவோணம் அவிட்டம் 2-ம் பாதம் முடிய | மகரம் | நீலம் | 20 CENT | 400/- | 50/- |
| அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3ம் பாதம் முடிய | கும்பம் | நீலம் | 20 CENT | 400/- | 50/- |
| பூரட்டாதி 4ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய | மீனம் | புஷ்பராகம் | 1 CARAT | 400/- | 50/- |
| தனுசு, மீன ராசிக்காரர்கள் கனக புஷ்பராக மோதிரமும் அணியலாம் | | | 50 CENT | 1000/- | 100/- |
| ராகு, கோமேதகம் | | | 50 CENT | 400/- | 50/- |
| கேது, வைடூரியம் | | | 20 CENT | 400/- | 50/- |
| அனைவரும் அணியக்கூடியது கார்னெட் வெள்ளி மோதிரம் | | | 2 CARAT | 400/- | 50/- |

*** நவரத்தினம் மோதிரம் அணிந்தால் மிகவும் நல்லது. *** **WE ACCEPT MASTER CARD/VISA CARDS**

அனைவரும் அணியக்கூடியது கார்னெட் மோதிரம் ரூ. 400/- கார்னெட் மோதிரம் அணிந்தால் செல்வ வளம் பெருகும். வியாபாரம், படிப்பு, ஞாபக சக்தி அதிகரிக்கும்.

குறிப்பு : புஷ்பராகம், வைரம், நவரத்தினம், ஆகிய மோதிரங்கள் வெள்ளியிலும், தங்கத்திலும் அணியலாம்.
மீதி அனைத்து ராசிக்கல் மோதிரங்கள் வெள்ளியில் அணிய வேண்டும். வெள்ளியில் அணிந்தால் பலன் அதிகம். மேற்படி ராசிக்கல் மோதிரம் நம்பிக்கையுடன் அணிந்து முயற்சி செய்தால், கல்வி, தொழில், வேலை வாய்ப்பு, வியாபாரம், அனைத்திலும் 100 சதவீத வெற்றி கிடைக்கும்.

* எங்களிடம் நியூமராலஜி படியும் கல் மோதிரங்கள் கிடைக்கும் * திருக்கணித பஞ்சாங்கப்படி கம்ப்யூட்டர் ஜாதகம் ரூ. 50/-

**குறிப்பு: எங்கு ஜோதிடம் பார்த்தாலும் எங்களிடம் வந்து ரூ. 400/-க்கு ராசிக்கல் மோதிரம் வாங்கி பயன்பெறுங்கள். ஒரிஜினல் கல் என முழு உத்திரவாதம் தருகிறோம்.**




2001 பிப்ரவரி 11
விக்ரம தை 29
மலர் : 59
இதழ் : 28

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## பூகம்பம்

குஜராத் பூகம்பத்தின் பயங்கரத்தை வர்ணிக்க முடியாது. அதன் விளைவுகளின் கொடூரமோ நெஞ்சை உறையச் செய்கிறது. துர்மரணத்தில் உயிரிழந்தவர்கள் பாக்கியசாலிகள் என்று சொல்கிற அளவுக்குத் தப்பிப் பிழைத்த பலரது நிலைமை வேதனைப்படுத்துகிறது. பிழைத்தவர்களுள் பலர், உடல் மட்டுமின்றி மனமும் பாதிக்கப் பட்டு பேதலித்துப் போயிருக்கிறார்கள். ஆயிரக்கணக்கான குழந்தைகளை அனாதைகளாக்கியிருக்கிறது பூகம்பம். பலநூறு மைல்களுக்கப்பால் உள்ள, பாதிக்கப்படாத சகோதரர்களைக்கூட தூக்கம் இழக்கச் செய்கிற அளவுக்கு மனித வளச் சேதம்.

உலகமே திரண்டெழுந்து குஜராத்துக்கு உதவ முன் வந்துள்ளது. பணமும் பொருளுமாகத் தாமதமின்றி வந்தடைந்துவிட்டன. மனிதாபிமானம் ஓங்கி நிற்கிறது என்பதனால் ஒருபுறம் ஆறுதல் கொள்ளலாம்; ஆனால், வந்து சேர்ந்துள்ள உதவியை உடனடியாகவும் பரவலாகப் பயன்தரும் வகையிலும் எப்படி உபயோகிப்பது என்பதுகூட புரியாமல் அரசும் தன்னார்வ அமைப்புகளும் திகைத்துத்தான் போயிருக்கின்றன.

'முன்னே பின்னே செத்தாத்தானே சுடுகாடு தெரியும்..?' என்று வேடிக்கையான பழங்கால வசனம் ஒன்று உண்டு.

பூகம்பம் என்பதையே அறியாத ஒரு தலைமுறை அதில் சிக்கி செய்வதறியாது




திணறுகிறது.

இதற்கு யார் பொறுப்பு..?

பூகம்பம் வருவதை, பருவ மழைபோல் துல்லியமாகக் கணித்துச் சொல்ல இயலாதுதான். ஆனால் கட்ச் பகுதியும் குஜராத்தின் வேறு பல பகுதிகளும் நில நடுக்கம் ஏற்படக்கூடிய பிரதேசங்கள் என்று புவியியல் வல்லுனர்கள் எடுத்துக்காட்டி எச்சரித்திருக்கிறார்கள்.

இமயமலைப் பகுதியில் நிகழும் நிலத்தடி மாற்றங்களும் இமயத்தின் அடிவாரத்தில் கட்டப்பட்டுள்ள அணைகளும் நிச்சயமாக பூகம்பத்தை உண்டுபண்ணும் என்றும் கூறியிருக்கிறார்கள்.

இதெல்லாம் போதாதென்று கடந்த இரு மாதங்களில் குஜராத்தில் கட்ச் மற்றும் சௌராஷ்டிரா பகுதியில் ஏற்கெனவே நில நடுக்கங்கள் நிகழ்ந்துள்ளன; இதைச் சுட்டிக் காட்டி பாதுகாப்பு நடவடிக்கைகள் மேற்கொள்ளும் வண்ணம் புவியியல் விஞ்ஞானிகளும், மக்கள் நலனில் அக்கறையுள்ள பத்திரிகையாளர்களும் மீண்டும் மீண்டும் எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். எல்லாமே செவிடன் காதில் ஊதிய சங்குதான்.

'எச்சரிக்கையைக் காதில் வாங்கிக் கொண்டால் பூகம்பத்தைத் தவிர்த்துவிட முடியுமா?' என்று கேட்கலாம்.

யாராலும் தடுக்க முடியாதுதான். ஆனால், எச்சரிப்போர், கூடவே பூகம்பத்தால் நிகழக்கூடிய சேதத்தைக் குறைக்கவும் வழிகள் கூறியிருக்கிறார்கள் :

பூகம்ப அபாயமுள்ள பிரதேசங்களில் கட்டடங்களை எத்தனை உயரம் அமைக்க வேண்டும்; எவ்வாறு பலமான பாதுகாப்புடன் கட்ட வேண்டும் என்பதற்கு விதிகளே வகுக்கப்பட்டுள்ளன.

"ஆனால், இந்த நெறிமுறைகளும் விதிகளும் பெரும்பாலும் கடைபிடிக்கப்பட்டதில்லை" என்கிறார் ஒரு மூத்த குஜராத்தி பத்திரிகையாளர். மக்கள் அவற்றைப் பின்பற்றவில்லை;




அரசும் வலியுறுத்திப் பின்பற்றச் செய்யவில்லை.

பூகம்ப அபாயம் உள்ள பிரதேசங்களில் ஆபத்துதவி படைகள் நிறுவி, ஓர் அவசரமெனில் அவை எவ்வாறு செயல்பட வேண்டும் என்று அவ்வப்போது ஒத்திகைகள் நடத்தித் தயார் நிலையில் வைப்பது அவசியம். தீ விபத்து நேர்ந்தால் தீயணைப்புப் படை எவ்வாறு இயங்க வேண்டும் என்று 'ஃபயர் ட்ரில்' நடத்துவார்களே - அது போல்! இந்த முன்னெச்சரிக்கை நடவடிக்கையும் எடுக்கத் தவறிவிட்டது அரசு.

பூகம்பம் ஏற்படுகிற நேரத்தில் மக்கள் தற்காப்புக்காக என்ன செய்ய வேண்டும்? ஏது செய்தால் உயிர் - உடலுக்குச் சேதம் ஏற்படுவதைக் குறைக்கலாம் அல்லது தவிர்க்கலாம்..? - இவையெல்லாம் பூகம்ப அபாயப் பகுதிகளில் வாழ்கிற மக்களுக்குக் கற்பிக்கப்பட்டிருப்பின், இந்த அளவு உயிர்ச் சேதம் குஜராத்தில் ஏற்பட்டிராது.

முன்னேறிய நாடுகள் பலவற்றிலும் பயங்கரமான பூகம்பங்கள் ஏற்படுகின்றன. ஆனால் அங்கெல்லாம் உயிர், பொருள் சேதம் இந்த அளவுக்கு ஏற்படுவதில்லை; நிவாரணப் பணிகளும் மறுசீரமைப்பும் சாவி கொடுத்ததுபோல் வேகமாகவும் துல்லியமாகவும் நடைபெற்று வருகின்றன. காரணம், அரசும் மக்களும் இந்த இயற்கை விபத்துக்குப் பல விதங்களில் தயார்ப்படுத்தப்பட்டு உஷாராயிருக்கின்றனர் என்பதுதான்.

நம் நாட்டிலும் இதே போன்ற நடவடிக்கைகளால் சேதத்தைக் குறைக்கலாம். வட இந்தியா, பூகம்பங்கள் நிகழக்கூடிய பகுதி என்பது மீண்டும் ஒருமுறை வன்மத்துடன் நிரூபணமாகியிருக்கிறது. இனியேனும் நாம் எச்சரிக்கையுடன் இருந்தாக வேண்டும்.

குஜராத்தில், இடிபாடுகளில் சிக்கியவர்களை மீட்பதும் காப்பதும் முதல் பணியாக இருக்கும்; மாநிலத்தைப் புனருத்தாரணம் செய்வது அடுத்து தொடரும் பணியாக இருக்கும். அந்த மறுசீரமைப்புப் பணியானது இனி வரும் இயற்கைச் சீற்றங்களுக்கு எதிரான பாதுகாப்பு நடவடிக்கைகளையும் உள்ளடக்கியதாக அமைய வேண்டும். இத்தனை உயிர்களைக் காவு கொடுத்த பிறகும் நாம் பாடம் கற்கத் தவறினோமானால் மன்னிப்பு ஏது..?

ஆமதாபாத்தி
லிருந்து
ஆர்.சி. ஜெயந்தன்

ஒரு பக்கம், திறந்த வெளியில் உணவு சமைக்க தீ எரிகிறது... மறுபக்கம்... முழுச் சடலங்களையும் பின்னமான உடல்களையும் மிஞ்சி நின்ற உடலுறுப்புகளையும் எரியூட்ட சிதை எரிகிறது... நெஞ்சுரம் மிக்கவர்களையும் நிலை குலையச் செய்யக் கூடிய இந்தக் காட்சியை, ஆமதா

• பூஜ் நகரம்!

பேலஸ் மருத்துவமனை

# கொடூரத்தை வெல்லும் கருணை!



• ஜெயேந்திர ஷா

பாத்திலிருந்து சுமார் நானூறு கிலோமீட்டர் தூரத்தில் உள்ள 'பச்சாவா' என்ற நகரில் பிண வாடைக்கிடையே நின்று பார்த்த போது... நொறுங்கிப்போகாமல் எங்களைக் காத்தது எது?... யோசிக்கிறேன்...

இந்திய ராணுவத்தின் இஞ்சினியரிங் ரெஜிமெண்ட் வீரர்கள் தீவிரமான மீட்புப் பணிகளில் ஈடுபட்டிருக்கின்றனர்... விஷ்வஹிந்து பரிஷத், ஜமாத் ஏ இஸ்லாமி தொண்டர்கள் சமமான ஈடுபாடுடன் உழைக்கின்றனர். தெரிந்த தெரியாத தன்னார்வத் தொண்டு நிறுவனங்களைச் சேர்ந்த தொண்டர்கள் பசி, தூக்கம் பாராது மட்டுமல்ல... கொஞ்சமும் உயிருக்கு அஞ்சாமல், அருவருப்புப் பாராட்டாமல் இடிபாடுகளுக்கிடையேயும் பிணக்குவியல்களினூடேயும் பரபரவென்று இயங்கிக் கொண்டிருக்கின்றனர். சொந்தச் சகோதரர்களுக்காகத் தொண்டில் ஈடுபட்டுள்ளவர்களுக்கிடையே அயல்நாட்டுத் தன்னார்வ வீரர்களும் அதே தீவிரத்துடன் இயங்கிக் கொண்டிருக்கிறார்கள்...

பிரதிபலனை எதிர்பாராமல் துயர் துடைக்கும் இந்த மனித நேயம்தான் மனத்துக்கு வலு கொடுக்கிறது. இயற்கையின் கொடூரத்தை ஜெயித்து நிற்கும் மானுட கருணை, ஒடிந்த மனத்துக்கு நம்பிக்கையூட்டி நிமிர்த்தி நிறுத்துகிறது.

பச்சாவாவைச் சுலபத்தில் அடைந்து விடவில்லை நாங்கள்.

ஆமதாபாத் சென்றிறங்கியது முதலே அடுக்கடுக்கானத் துயரக் காட்சிகள். செய்திகள் மூலம் அறிந்த பயங்கரம் நேரில் கண்டபோது டால்பி சவுண்ட் சிஸ்டத்தில் ஒலியமைக்கப்பட்ட காட்சியாக நெஞ்சில் வந்து வந்து அறைந்தது!

ரயில் நிலையத்தில் சொந்த தேச அகதி

• நோய் பரவுமுன் வெளியேறி...

களாக பலநூறு கிராமங்களிலிருந்து பல்லாயிரம் மக்கள்.

வெளியே வந்தால், அப்பளமாக நொறுங்கிப் போன அடுக்கு மாடிக் குடியிருப்புகளிலிருந்து வெளியேறி நடுத் தெருவில் நிற்கும் 'பணக்காரர்கள்!' கயிற்றுக் கட்டில்களில் தூக்கமிழந்த கண்களுடன் உட்கார்ந்து அடுத்த நில நடுக்கம் வருமோ என்று அச்சத்தில் பொழுதை ஓட்டுகிறார்கள்.

குஜராத் தலைநகரின் இன்னொரு பக்கம்... இரண்டாயிரம் உயிர்களை ஒரு கணத்தில் பலிகொண்ட அடுக்கு மாடி குடியிருப்பின் இடிபாடுகளில் மீட்புப் பணி ஓயாது நடக்கிறது. மணி நகர் மெட்ரிக் பள்ளியின் பிளஸ் ஒன், பிளஸ் டூ மாணவர்களுள் பதினாறு பேர் மட்டும் குற்றுயிருடன் தப்ப 52 மாணவர்கள் கனவுகளோடு நொறுங்கிப் போயிருக்கிறார்கள். திருமண நிச்சயதார்த்தம் நடந்த கான்க்ரீட் கட்டடம் இப்போது குப்பைமேடு! ஏழு பேரை மட்டுமே குற்றுயிரோடு மீட்க முடிந்திருக்கிறது. காருடன் நொறுங்கிப் பிணமாகிப் போன நான்கு பேரை கிரேன் கொண்டு அப்புறப்படுத்திய கணத்தில் அழுகிற ஓலம்- அடிவயிற்றை கனக்கச் செய்கிறது.

தனது மனைவி, மகளின் சடலங்களுக்காக நான்கு நாட்களாகக் காத்திருக்கிறார் சுகுமார்- நகைக்கடை உரிமையாளர். "இனி கிடைக்கும் என்று நம்பிக்கையில்லை... கேரளாவிலிருந்து வந்தவன் நான். இங்கே பதினைந்து லட்சத்துக்கு ஃபிளாட் வாங்கினேன் - லக்ஷுரி அபார்ட்மெண்ட்... இனி கேரளாவுக்குத் திரும்பிப்போய் அமிர்தானந்தமயி மடத்துல சேர்ந்துடலாம்னு இருக்கேன்... மகளையும் அழைச்கட்டுப் போய்டுவேன்..." விரக்தியின்றி, விதியை ஏற்ற பக்குவத்துடன் அவர் பேசுவது ஆச்சர்யமாயிருக்கிறது.

ஆமதாபாத்தில் இடிந்துபோன பல முக்கியமான அபார்ட்மென்ட்களைக் கட்டிக் கொடுத்திருப்பவர் சில்ப் டெவலபர்ஸ் நிறுவன உரிமையாளர்- பி.ஜே.பி.எம்.எல்.ஏ. கம்லேஷ் பட்டேல் என்கிறார்கள். இவர் விற்பனை செய்த எல்லா ஃபிளாட்டுகளும் நொறுங்கிப் போயிருக்கின்றன. "எம்.எல்.ஏ. என்ற முறையில்கூட இன்னும் வந்து பார்க்கவில்லை" குமுறுகிறார்கள் பாதிக்கப்பட்ட மக்கள்.

நகரின் வடக்கு பகுதியில் வஸ்திராப்பூரில் வரிசையாக ஏழு குடியிருப்புகள் மண்மேடாகிக் காட்சியளிக்கின்றன. தொலைத்த உறவினர்களுடைய உடலின் பகுதிகளாவது கிடைக்காதா என்று துழாவிக் கொண்டு நிற்கிற கூட்டத்தைப் பார்க்க வேதனை பிடுங்கித் தின்கிறது.

பூகம்பம் நடந்து ஐந்து நாட்களாகி விட்டன. ஐந்தாம் நாள் இறுதியில் ஜுனாதார் பஜார் பகுதியில், மங்களம் அபார்ட்மென்ட்ஸின் துகள்களுக்கடியிலிருந்து முப்பத்தைந்து வயது நளினியை மீட்டெடுக்கிறார்கள். தனது ஒன்றரை வயது மகனுடன் தப்பியிருக்கிறார் நளினி. தான் பட்டினி கிடந்தபோதிலும் குழந்தைக்குத் தாய்ப்பால் ஊட்டியிருக்கிறார். இந்தத் தாய்மையைப் போற்றி வியக்க பெண்கள் கூட்டம் நளினியைக்


• சுகுமார்





• எஞ்சிய கை...

அணிவகுப்பில் இணைந்து பின் செல்ல வேண்டியிருக்கிறது.

பச்சாவா தாலுகாவில் வசித்த ஐம்பதாயிரம் பேரில் முப்பதாயிரத்தினர் பிணமாகி இடிபாடுகளினடியில் கிடக்கிறார்கள்.

• வீட்டருகிலேயே சிதை - ஜன்னல், கதவுகளே விறகு!



• சிதைந்த கனவு!

கிடத்தியுள்ள மருத்து வமனையை மொய்க்கிறது.

பூஜ், பச்சாவா நகரங்களைப் பார்க்கப் புறப்பட்டால், பேருந்து போகாது என்று கூறிவிட்டார்கள். "பெரிய பெரிய பாலங்களெல்லாம் உடைந்து ஊசலாடிக் கொண்டிருக்கின்றன. போக்குவரத்து சாத்தியமில்லை..."

வாடகைக் கார் உரிமையாளருக்கு நம்பிக்கையூட்டி ராணுவ வாகனங்களின்





• சுவரை உடைத்துத் தேடி...



பச்சாவா மொய்தீன் பஜார் பகுதியில் இடிபாடுகளினிடையேயிருந்து "பானி! பானி!" (தண்ணீர் கொடுங்கள்) என்று உதவி கேட்கும் தீனக் குரல்...

கண்ணிமைக்கும் நேரத்தில் ரஷ்ய உதவிப் படையினர் அங்கே ஆஜராகிறார்கள். அந்த ஓர் உயிரைக் காப்பாற்ற ஐந்து மணி நேரம் போராட்டம். துளித்துளியாக இடிபாடுகளை அகற்றி ஒரு குழந்தையைத் தாங்கி எடுப்பது போல் எழுபத்தைந்து வயது குவர்பென் தாக்கர் என்ற மூதாட்டியை அவர்கள் மீட்பதைக் காணக் காண கண்கள் நம்ப மறுக்கின்றன. 96 மணி நேரப் போராட்

• நொறுங்கிய காரில் சடலம்



• நிவாரண முகாமில்...

டத்துக்குப் பின், உணர்வற்ற நிலையிலும் கைகுவித்து நன்றி சொல்ல முயன்று தோற்கிறார் குவர்பென் தாக்கர்!

ஜெயேந்திர ஷா! விஸ்வ ஜோதி தியேட்டர் அருகே, மிஞ்சியிருக்கும் ஒற்றைச் சுவர்மீது தனியாளாய் அமர்ந்திருக்கிறார். இந்தியன் எக்ஸ்பிரஸ் நிறுவன குஜராத்தி நாளிதழான 'ஜன்ஸத்தா'வின் நிருபர்.

"நானே இப்படிச் செய்தியாவேன் என்று நினைத்துக்கூட பார்க்கவில்லை..." என்று ஆங்கிலத்தில் சொல்லும் அவருடைய முகம் பேயறைந்ததுபோலிருக்கிறது. "கண்ணீர்கூட மிச்சமில்லை" என்று

• இடிந்த வீட்டிற்கு அருகிலேயே...





• மருந்துகள்

அவர் நமது கைகளைப் பிடித்துக் கொள்ள நமது கண்கள் கலங்கிப்போகின்றன.

பச்சாவா லட்சுமிபாய் பெண்கள் பள்ளியில் பதினெட்டு உடல்கள் மீட்கப்பட்டு விட்டன. 'இன்னும் அடியில் மேலும் சடலங்கள் இருக்கக் கூடும்... ஆனால் அவற்றை அகற்ற ரொம்ப நேரம் பிடிக்கும். பக்கத்தில் மேலெழுந்தவாரியாக உள்ள உடல்களை வெளிக்கொணர்ந்த பிறகு இங்கே திரும்புவோம்...' - ஒரு முடிவுடன் ராணுவ வீரர்கள் அகன்றுவிட, அத்தனை இடிபாடுகளையும் தூக்கி நெஞ்சில் வைத்ததுபோல் கனக்கிறது! மெள்ள பள்ளியை வலம் வர... இருண்ட ஓர் இடுக்கில் ஒரு மாணவியின் கை மட்டும் ஒரு காகிதத்தைப் பற்றியபடி விறைத்துப் போயிருக்கிறது!

மெதுவாகக் காகிதங்களை விரல்களிலிருந்து அப்புறப் படுத்திப் பார்த்தால்....

கைகளில் வரையும் மருதாணி கோலத்தின் அழகான வரைபடம்!- 'கலையோடு கனவுகளும் இளமையுமாக, கணக்கிடமுடியாத இழப்புகள் இந்த பூகம்பத்தினால் ஏராளம் ஏராளம்' என ஏளனமாகப் பறைசாற்றுவது போலிருந்தன அந்த வரைபடங்கள்!

**ப**ச்சாவாவை விட்டு வெளியேறும் தருணத்தில்.... திடீரென்று நான்கு வினாடிகள் நீடித்த நில நடுக்கம் அத்தனை பேரையும் அலற வைக்கிறது!

குற்றுயிராய் நிற்கும் மாடுகளையும் மருந்துகளுக்காகவும் உணவு, உடைக்காகவும் கூட்டம் கூட்டமாக ஓடும் மக்களையும் வேதனை மேலிட பார்த்தவாறு பூஜ் செல்கிறோம்.

**ப**ச்சாவாவிலிருந்து 77 கி.மீயில் உள்ளது பூஜ். நகரை நெருங்கும்போதே ஒட்டகம், குதிரை, கழுதை பூட்டிய ஜட்கா வண்டிகளில் துணி மூடிய பிணங்களை ஏற்றி எடுத்துச் செல்லும் காட்சி அச்சுறுத்துகிறது.

மூக்கில் துணி சுற்றிக் கொள்ளாமல் நகரில் நுழைய



• ஆமதாபாத் ஜங்ஷனில்...

# நடுங்க வைக்குப்

பூமி மைய அக்கினிக் குழம்புக்கு 'மாக்மா' என்று பெயர். அதன் மேற்புறத்தில் ஒரு நிலப்படலம் இருக்கிறது. இதை crust என்கிறார்கள். ஆரஞ்சுப் பழுத்தின் தோலி மாதிரி அமைந்துள்ளது. மகா சமுத்திரங்கள், மலைகள், நிலப்பரப்பு எல்லாம் இருப்பது இந்தப் பழத்தோலி மாதிரியான பொருக்குப் படலத்தில்தான். இந்தப் படலம் ஒரே இணைப்பாக இல்லாமல் துண்டு துண்டாக ஒன்றுடன் ஒன்று தொட்டுக்கொண்டு பரவியிருக்கிறது. அவலை, நெருக்கமாகத் தூவி மூடிய மாதிரி என்று சொல்லலாம்.

இந்தப் படலம் அசைகிறபோது, அல்லது வேக மாக அதிர்கிறபோது நில நடுக்கம் உண்டாகிறது. இயற்கையாக ஏற்படுகிற நில நடுக்கங்கள் தவிர மனிதனின் அடாவடிகளாலும்கூட இது உண்டா கிறது.

முக்கியமாக இரண்டு காரணங்களைச் சொல்ல லாம். நிலத்தடியில் நடத்தப்படுகிற அணு ஆயுதச் சோதனைகளின் பின் விளைவாக. மனிதர்களால் உருவாக்கப்படுகிற நீர்த் தேக்கங்களில் அளவுக்கு அதிகமாகச் சேமித்து வைக்கப்படுகிற தண்ணீரின் எடையாலும் நில நடுக்கங்கள் உண்டாகலாம்.

நீர்த்தேக்கங்களின் கொள்ளளவு மட்டத்தைக் குறைப்பது, நில அதிர்வு ஏற்படக் கூடிய வாய்ப் பைத் தவிர்க்கும் என்று குஜராத்தைச் சேர்ந்த நிலவியல் நிபுணரான ஜயப்பிரகாஷ் கே. நதானி என்பவர் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பே 'சயன்ஸ் டுடே' இதழில் எழுதினார்.

• தரைமட்டமான பள்ளிக்கூடம்...



அண்மையில் ஏற்பட்ட நில நடுக்கம், முதலில் தொடங்கியது மேற்குக் கடற்கரையை ஒட்டிய கேரளப் பகுதியான கோட்டயம், இடுக்கி, சபரிமலை வட்டாரங்களில் தான். இதன் அதிர்வுகள், திருநெல் வேலி, தூத்துக்குடி, கோயம்புத்தூர், நீலகிரி மாவட்டங்களிலும் உணரப் பட்டது. அப்புறம்தான் குஜராத் மாநிலத்து பூஜ் வட்டாரத்தைக் கொட்டிக் கவிழ்த்து நாசம் பண்ணி விட்டு, இப்போது அதிர்வுகளாக பெங்களூர், மைசூர், ஒசூர், தர்மபுரி

முடியாது.

காமெராவுடன் நம்மைக் கண்டதும் ஓடி வந்து புலம்புகிறார்கள் மக்கள். ஜமாத் ஏ இஸ்லாமி தொண்டர் நமக்கு மொழிபெயர்க் கிறார்.

"வானத்தில் பறந்து, சுத்தி சுத்திப் பார்த் துட்டுப் போயிடறாங்க... எம்.எல்.ஏயாவது, எம்.பியாவது, அமைச்சராவது! ஒருத்தரும் வரவில்லை ஐயா...! குடிக்க தண்ணீர்கூட கிடைக்காமல் எங்கள் ஊரான அஞ்சாரை விட்டு இங்கே வந்திருக்கிறோம்..."

கதறியழுபவர்களுக்கு எப்படி ஆறுதல் சொல்வதென்று அறியாமல் திணறுகிறோம்.

ஒன்றரை ல்ட்சம் மக்கள் தொகை கொண்ட பூஜ்ஜில் பெரும்பாலும் செம்மண் வீடுகள். "ஒரு லட்சம் பேராவது செத்துப் போயிருப்பார்கள்" என்கிறார் உள்ளூர் போலீஸ் காரரான அய்யூப்கான்.

இடிந்த வீடு ஒன்று. அதனுள்ளிருந்து 'ஓம் நாராயணா' 'ஓம் நாராயணா' என்று இடை விடாமல் பாட்டு கேட்கிறது. மீட்பு வீரர் ஒருவர் உள்ளே போய் சுவரை உடைத்துப் பார்த்தால்... எலக்ட்ரானிக் அலாரம் கடி காரம்! மீளா துயிலில் கிடக்கும் மக்களின் ஆன்ம சாந்திக்குப் பிரார்த்திக்கும் அந்த எலக்ட்ரானிக் முரண்பாடு நம்மை உலுக்கித்தான் எடுக்கிறது.

பூஜ்ஜிலிருந்து கிளம்பி அஞ்சார் நோக்கிப் போகையில் விளையாட்டு மைதா னத்தில் சடலங்களை அடுக்கி சிதைய மைத்து எரியூட்டிக் கொண்டிருக்கும் காட்சி

# நிஜங்கள்!

என்று அலை பாய்ந்திருக்கிறது.

சமீபத்திய மூன்று நிகழ்வுகளும் எப்போது என்பதைக் கவனிக்க வேண்டும்.

டிசம்பர் 12 – ரிக்டர் அளவு 5.0
பௌர்ணமிக்கு மறுநாள்

ஜனவரி 7 – ரிக்டர் அளவு 4.8
பௌர்ணமிக்கு 2 நாட்கள் முன்பு

ஜனவரி 26 – ரிக்டர் அளவு 6.9
அமாவாசைக்கு 2 நாட்கள் பின்னால்.

இது ஒன்றும் தற்செயலானதாகச் சொல்ல முடியாது. சந்திரனின் ஈர்ப்பு விசைக்கும் நில நடுக்கங்களுக்கும் நிச்சயம் தொடர்பு இருக்கிறது.

'மாக்மா' குழம்பிலிருந்து வெளிப்படுகிற மெர்க்குரி ஆவியின் அடர்த்தியும் நில நடுக்கங்களோடு சம்பந்தப்பட்டது என்று சோவியத் அறிஞர்கள் ஆராய்ந்தார்கள்.

தேய்பிறையின்போது பூமியின் வெளிப்புற அடுக்கு (crust) சுருங்குகிறது. வளர்பிறையில் விரிவடைகிறது. இந்த மாற்றங்களால் மெர்க்குரி ஆவி வெளிப்படுவது பாதிக்கப்படுகிறது என்கிறார்கள்.

தமிழ்நாடு, கேரளப் பகுதியில் அண்மையில் நில நடுக்கம் உண்டானபோது தலை சுற்றல், மயக்கம் ஏற்பட்டதாய்ச் சொன்னார்கள். இது மெர்க்குரி ஆவி வெளிப்படுவதன் விளைவாய் இருக்கலாம்.

நில நடுக்கம் ஏற்படக்கூடிய சந்தர்ப்பத்தை விலங்குகள் முன்கூட்டியே அறிந்துகொள்கின்றன.

ஜப்பானிலும் வெளி தேசங்களிலும் ஏற்பட்ட 47 நில நடுக்கங்களை ஆராய்ந்து 157 விதமான விலங்குகளின் நடவடிக்கைகளைக் கவனித்துப் பதிவு செய்திருக்கிறார்கள்.

சைனாவில், தொழில் நகரமான ஹெய்ச் செங்கில் ஒரு கடுமையான நில அதிர்வு நிகழப் போவதை வெற்றிகரமாக முன் கூட்டியே கண்டறிந்து, ஒரு லட்சம் பேர்களை அழிவிலிருந்து காப்பாற்றியிருக்கிறார்கள். இந்த நில நடுக்கம் 1975 பிப்ரவரி 4ம் தேதி நிகழ்ந்தபோது யாருமே வீட்டுக்குள் முடங்கிக் கிடக்காமல் திறந்த வெளியில் சினிமா பார்த்துக் கொண்டிருந்தார்கள். மாலை 7.36க்கு நடுக்கம் ஏற்பட்டபோது 90 சதவிகிதக் கட்டடங்கள் தரைமட்டமாயின. உயிர்ச் சேதம் ஒன்றுகூட இல்லை. இதை மிகப் பெரிய சாதனையாகக் குறிப்பிடுகிறார்கள். ஆனால் அடுத்த ஆண்டிலேயே தாங்ஷான் நில நடுக்கம் ஏற்பட்டு ஆறரை லட்சம் பேர் பலியாகப் போவதை முன் கூட்டியே கண்டறிய முடியவில்லை!

— சுப்ர. பாலன்

**குஜராத் பூகம்ப நிவாரண நிதிக்கு கல்கி ஊழியர்கள் தங்கள் ஒரு நாள் ஊதியத்தை அளித்துள்ளனர். கல்கி வாசகர்களும் ஏற்கெனவே அனுப்பியிருப்பார்கள் என்று நம்புகிறோம். அனுப்பாதவர்களை அனுப்புமாறு நினைவூட்டுகிறோம்.**

**–ஆர்.**

யைக் காண்கிறோம்.

அஞ்சார்! மரண அமைதி என்பது இதுதான்! மண்ணோடு மண்ணாகிப் போயிருக்கிறது ஊர். பாகிஸ்தான் எல்லையோர கிராமம். அழுகிய சடலங்களின் தாங்க முடியாத வாடையைத் தவிர 'உயிர்' அடையாளங்கள் எதுவுமில்லை.

வெளியேறி மீண்டும் பூஜ் வழியே பச்சாவா, ஆமதாபாத் என்று திரும்பியாக வேண்டும். பூஜ் சிறைச்சாலையை விழுந்து விழுந்து படம் பிடித்துக் கொண்டிருக்கின்றனர் உலகெங்கிலுமிருந்து வந்துள்ள பத்திரிகையாளர்கள். பாக். தீவிரவாதிகள் உள்ளிட்ட 188 கைதிகள் தப்பியோடியது இங்கிருந்துதானே! பரிதாபத்தைக் காட்டிலும், உறவும் நட்பும் கடந்த மனிதநேயத்தைக் காட்டிலும், திரத்தைக் காட்டிலும் பரபரப்புத்தானே விலைபோகிறது!

பூஜ் எல்லையில், நகரைவிட்டு வெளியேறும் ஒவ்வொரு வாகனத்தையும் வழிமறித்து உணவும் பணமும் யாசிக்கும் மக்கள் கூட்டத்தைப் பார்க்க மனம் வெதும்புகிறது. எல்லாவற்றையும் உதறிவிட்டுத் தன்னார்வத் தொண்டர்களுடன் சேர்ந்து உழைக்கத் துடிக்கிறது... ஆனால், இன்னும் இருபத்திநாலு மணி நேரத்துக்கு மேல் இங்கே ராணுவம்கூட இருக்க முடியும் என்று தோன்றவில்லை.

அழுகிய பிணங்களினால் பரவக்கூடிய நோய்த்தொற்று விரைவிலேயே ஆரம்பமாகிவிடும். தடுப்பு நடவடிக்கைகள்...? பெரிய கேள்விக்குறியாக மிரட்டிக் கொண்டிருக்கிறது.

**31, ஜனவரி 2001**

அட்டை, படங்கள்: ஜரிஸ்

# வாஞ்சிநாதன்

டெபுடி கமிஷனர் விஜய்காந்த் @ வாஞ்சிநாதன். ஊழல் செய்யும் அதிகாரிகளை லெஃப்ட் அண்டு ரைட் வாங்கி ஊழல் செய்யத் தூண்டும் தாதாக்களை ரைட் அண்டு லெஃப்ட் வாங்குகிறார். இதுதான் கதைச் சுருக்கம்.

சுக்லாம் பரதரம் சொல்லி எந்த டெம்ப்போவில் இயக்குனர் கதை சொல்ல ஆரம்பிக்கிறாரோ அதே டெம்ப்போவை மங்களம் பாடும் வரை மெயின்டேன் பண்ணிவிடுகிறார் - சந்தோஷம்.

ஏதோ, நாட்டில் ஊழலும் லஞ்சமும் தலை விரித்தாடுகிறது. ஏதோ, நானும் அதை சப்ஜெக்ட்டாக எடுத்துக்கொண்டு படம் பண்ணியிருக்கிறேன். ஏதோ, நீங்களும் பார்த்துவிட்டுப் போங்கள் என்கிற மாதிரி இல்லாமல் இந்த அராஜகங்களை ஒழித்துக் கட்ட வேண்டும் என்கிற ஆவேசம், ஆத்திரம் படம் முழுக்கத் தெரிகிறது - ரொம்ப சந்தோஷம்.

ஆனால் படத்தைக் கொண்டு போயிருக்கும் விதம் ரொம்பவே அன்ரியலிஸ்டிக். உதா. 1 - அந்நிய நாடுகளுடன் தொடர்பு வைத்துக் கொள்ளும் அளவுக்கு அரசியல்வாதிகளின் சப்போர்ட்டுடன் இயங்கும் ஹை-லெவல் தாதாக்களை விஜய்காந்த் சகட்டுமேனிக்குப் பந்தாடுகிறார். ஆனால் அவர்களால் விஜய்காந்துக்கு மருந்துக்குக்கூட ஒரு இடைஞ்சலோ ஆபத்தோ ஏற்படவில்லை. உதா.2 - கோர்ட், கேஸ் என்று போகாமல் குற்றவாளிகளுக்கு ஆன் - தி - ஸ்பாட் தண்டனை, அதுவும் மரண தண்டனை கொடுத்துக்கொண்டே வருகிறார் விஜய்காந்த். ஆனால் அவரைக் கேள்வி கேட்பதற்கு அவருடைய டிபார்ட்மெண்ட்டில் ஒரு ஜீவன் இல்லை. உதா.3 - டெபுடி கமிஷனருக்கு, கமிஷனர் பாஸ்தானே...? இந்த ஹைரார்க்கியே நமக்குக் குழம்பிவிடும் அளவுக்குக் கமிஷனர் வி.கா.க்கு எடுபிடி வேலைகள் பார்த்துக் கொடுத்து அவர் இட்ட கட்டளைகளை நிறைவேற்றிக்கொண்டு தேமே என்று இருக்கிறார்.

இதை எல்லாம் கூட சேர்த்துக் கொள்ளலாம். ஆனால் விஜய்காந்த் எப்படித் துப்பு துலக்குகிறார் என்பதைக் காண்பிக்காமல், ஒவ்வொரு கேஸிலும் யார், யாரை, எங்கே, ஏன் கொன்றார்கள் என்று சகல விஷயங்களையும் விரல் நுனியில் வைத்துக் கொண்டு நடமாடும் என்சைக்ளோபீடியாவாக விஜய்காந்த் வலம் வருவதைக் கொஞ்சமும் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

ஹீரோயின் நம்பர் -1, ஹீரோயின் நம்பர்-2 எல்லோரும் ஆளுக்கு ஒரு டூயட்டுடன் கோவிந்தா. விஜய்காந்துக்குக் காதலிக்கவெல்லாம் நேரமில்லை மூட்டை கட்டி அனுப்பி விட்டார்கள்.

○ ஃபெயில் ○ ஜஸ்ட் பாஸ்.
● ஆவரேஜ் ○ அபவ் ஆவரேஜ்
○ டிஸ்டிங்ஷன்

— கிருஷ்ணா சிதம்பரம்

## நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
## வாய்நாடி வாய்ப்பச் செயல் - குறள்

ஒரு மனிதனுக்கு பணம், சொத்து, செல்வாக்கு முதலியவை எவ்வளவு இருப்பினும், அவனுடைய நிம்மதி என்பது நோய் இல்லா வாழ்க்கையில் மட்டுமே உள்ளது. இன்றைய சூழ்நிலையில் அறிவியலின் வளர்ச்சி நமக்கு அறிய பல நன்மைகளையே செய்து கொண்டுள்ளபோதும், அவற்றால் நமக்கு நிறைய தீமைகளும் உள்ளது. எனவே இன்றைய இளைஞர்கள் கூட முதுமையில் வரும் வியாதியால் பாதிக்கப் படுகிறார்கள் ஆனால் உலகில் உள்ள அனைத்து பிரச்சனைகளுக்கும் ஆண்டவன் ஏதாவது ஒரு தீர்வை குடுத்துள்ளான் அவ்வாறு ஒவ்வொரு விதமான வியாதிகளாலும் பாதிக்கப்பட்டு பின் அதிலிருந்து விடுபட்ட அதிசயத்தை கீழே சிலர் கூறியுள்ளனர்.



நான் கடந்த சில வருடங்களாக உடம்பில் அரிப்பு ஏற்பட்டு சோரியாசிஸ் என்ற நோயாலும், கடுமையான மூட்டு வலியாலும் பாதிக்கப்பட்டேன். பல சிகிச்சைகளும் எனக்கு பலன் தாராமல் ரப்பானி வைத்யசாலாவில் காண்பித்தேன் தொடர்ச்சியாக சில மாதங்கள் அங்கு பெற்ற சிகிச்சையின் பலனாக என் பிரச்சனைகள் அனைத்தும் தீர்ந்தது.

**Mrs. Padma Swaminathan**

Reign Rich Apats Mouna swamy Madam Street, Vengatapuram, Chennai - 53.

---

நாங்கள் திருமணமாகி 6 வருடமாகியும் குழந்தையில்லாமல் பல மருத்துவமனைகள் ஏறி இறங்கினோம். டாக்டர் ஹக்கீம் S.A. சையத் சத்தார் அவர்களிடம் சிகிச்சை பெற்ற 3 மாதத்திலேயே கர்ப்பம் அடைந்து இப்போது அழகிய ஆண் குழந்தை பிறந்துள்ளது.

சென்னை
தேனாம்பேட்டையைச் சேர்ந்த
ஜெய்சங்கர் - மாரியம்மாள்
தம்பதிகள்



---



S. Ravi

**S. Ravi, Bhel spd. CP. P.Box No.1245, Bangalore, Ph : 3346392**

எனக்கு உடலில் உப்பு அதிகமாக இருப்பதாகச் சொல்லி பெங்களூரில் பல மருத்துவர்களிடம் சிகிச்சை பெற்று, பின் பரிசோதனை செய்ததில் என் கிட்னி பெயிலியர் ஆகி இருப்பதும், அதை அறுவை சிகிச்சை செய்து மாற்றுவதுதான் ஒரே வழி என்றும் அறிவுறுத்தப்பட்டேன். பின் நண்பர்களின் ஆலோசனைப்படி ரப்பானி வைத்யசாலா வந்து சிகிச்சை பெற்றேன். படிப்படியாக என் உடலில் இருந்து யூரியாவின் அளவு குறைந்து இப்போது கிட்னி மாற்ற வேண்டிய அவசியமில்லை என்று பரிசோதனையில் தெரியவந்துள்ளது.

---

(தமிழ்ச் செல்வி சென்னை காரம்பாக்கம், போரூர், 3/143 அண்ணா சாலை)

அடிவயிற்றில் வலி என்று மூன்று வருடங்களாக சென்னையில் பிரபல பெரிய மருத்துவமனை ஒன்றில் சிகிச்சைக்கு சென்ற நான் தொடர்ந்து சிகிச்சை பெற்றும் கடைசியில் ஆபரேஷன் செய்து கர்ப்பப்பையை நீக்க வேண்டும் என்ற கூறி விட்டார்கள். முடிவில் ரப்பானி வைத்தியசாலாவிற்கு வந்து சிகிச்சை பெற்ற இரண்டு மாத காலத்திற்கு பின் ஆபரேஷன் செய்யச் சொன்னவர்களிடம் சென்று மீண்டும் பரிசோதனை செய்ததில் இனி ஆபரேஷன் வேண்டாம் எல்லாம் நார்மலாக உள்ளது என்று கூறிவிட்டார்கள்.



தமிழ்ச் செல்வி

**மேலும் அல்சர், கை கால் வாதம், மூளை வளர்ச்சி குறைவு, லிவர் பெயிலியர், மூலம் நரம்புத் தளர்ச்சி, ஆண்மைக் குறைவு, யானைக்கால் வியாதி, காக்கா வலிப்பு போன்ற சகல வியாதிகளுக்கும் சிறந்த சிகிச்சை அளிக்கப்படுகிறது)**



(15.12.2000 அன்று யுனானி மருத்துவ மாத இதழை தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் வழங்க மாண்புமிகு அமைச்சர் ஆற்காடு வீராசாமி பெற்றுக் கொண்டபோது எடுத்த படம்)

**டாக்டர் ஹக்கீம் S.A. சையத் சத்தார்**
**ரப்பானி வைத்ய சாலா**
**73/1, டாக்டர் பெசன்ட் ரோடு,**
**மீர்சாகிப்பேட்டை மார்க்கெட் அருகில்,**
**இராயப்பேட்டை, சென்னை - 600 014.**
**போன் : 8510969, 8410874**



இந்தியாவில் கம்யூனிஸ்ட் இயக்கம் தோன்றி இந்த ஆண்டோடு ஒரு பவள விழாக் காலம் ஆகிவிட்டது. சுதந்தரப் போராட்டத்தில் தீவிரமாக ஈடுபட்டது, சுதந்தரத்திற்குப் பின் நேரு அரசை எதிர்த்து ஆயுதம் தாங்கிய போராட்டம், அதன் விளைவாகத் தடை, பின்னர் நீதிமன்றத்தால் தடை நீக்கம், சீனப் படையெடுப்பை ஒட்டி செங்குத்தான பிளவு என்று அதன் வரலாற்றில் பல மைல் கற்கள். 1952ல் நடந்த பொதுத் தேர்தலில் நாடாளுமன்றத்திலும், சென்னை மாகாண சட்டமன்றத்திலும் காங்கிரஸுக்கு அடுத்தபடியாக அதிக இடங்களைப் பெற்றார்கள் கம்யூனிஸ்டுகள். ஆனால் அந்த இயக்கத்தின் இன்றைய நிலை? இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தேசிய கவுன்ஸில் உறுப்பினரும் பழுத்த கம்யூனிஸ்டுமான தா. பாண்டியனைச் சந்தித்து தலைப்பில் உள்ள கேள்வியைக் கேட்டோம். பொறிந்து தள்ளி விட்டார்!

# இந்தியாவில் கம்யூனிஸம்

இந்தியாவில் கம்யூனிஸம் இறந்து விட்டதாகக் கூறுவது தவறு; அது இறக்காது. கம்யூனிஸ்ட் கட்சியின் வளர்ச்சி, அதன் லட்சியம், சேவை, மற்றும் தியாகத்திற்கேற்ப உயராமல் இருக்கிறதே என்று கேட்பதுதான் நியாயமாக இருக்க முடியும். மாறாக கம்யூனிஸம் இறந்து விட்டது அல்லது விரைவில் சாகும் என்று ஒரு வரி தீர்ப்பு கூறுவது அலசிப் பார்க்காமல் அவசரத்தில் தீர்ப்பு கூறுவதற்கு ஒப்பாகும்.

கம்யூனிஸத் தத்துவம், காரல்மார்க்ஸ், ஏங்கெல்ஸ் ஆகியோரால் விஞ்ஞான அடிப்படையில் வகுத்துக் கொடுக்கப்பட்டது. சுரண்டலற்ற சமத்துவமான வாழ்க்கை, பிறப்பாலும், நிற அடிப்படையிலும் வேற்றுமை காணாத நிலை போன்ற நல்ல சிந்தனைகள், மனிதகுலம், நாகரிக உலகில் அடியெடுத்து வைத்த நாளிலிருந்தே வளர்ந்து வந்திருக்கிறது. இதே கருத்தைப் பெரும்பாலான மதங்களின் மையக் கருத்தாகவும் காணலாம். ஆனால் அத்தகைய நல்ல கருத்துக்கள் மனிதனின் ஆசை வெளியீடுகளாக மட்டுமே நின்று விட்டன. இந்த வேற்றுமைகளை அகற்ற வேண்டுமானால் அதற்குரிய மூல காரணத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும். இதைத்தான், ''கஞ்சி குடிப்பதற்கிலார்; அதன் காரணங்கள் இவை எனும் அறிவுமிலார்'' என்றான் பாரதி. வள்ளுவர், 'நோய் நாடி நோய் முதல் நாடி' என்றார். அதை விஞ்ஞானரீதியில் விளக்கிச் சொன்னவர்தான் மார்க்ஸ்.

மார்க்ஸின் தத்துவங்களை நடைமுறைக்குக் கொண்டு வந்தவர் லெனின். இன்று சோவியத் நாடு சரிந்து போனதாலும், இந்தியாவில் கம்யூனிஸ்ட் இயக்கங்கள் தேர்தலில் சரிவு நிலை அடைவதாலும், இதுபோன்ற கேள்விகள் எழுகின்றன.

எங்களைப் பார்த்துக் கேள்விகள் கேட்போரை நான் ஒரு எதிர் கேள்வி கேட்க விரும்புகிறேன். மகாத்மா காந்தி, நாடாளுமன்ற, சட்டமன்ற தேர்தல்களில் போட்டியிடவில்லை. அவரது லட்சியங்களைப் பலரால் கடைபிடிக்க முடியவில்லை. இருந்தும் காந்தியடிகளை இந்திய மக்களின் நெஞ்சத்திலிருந்து யாராவது அழிக்க முடியுமா? அவரது கொள்கைகள், சேவைகள், ஒரு ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராட, கோடானுகோடி மக்களைத் திரட்டியது என்பதை மறக்கக் கூடாது. அதே போல் தமிழகத்தில் தந்தை பெரியார். ஈரோடு நகரசபை தவிர வேறு எந்தத் தேர்தலிலும் போட்டியிட்டதில்லை. இருந்தும் இந்தியாவில் முதல் அரசியல் சட்டத் திருத்தம் பெரியாரின் இயக்கத்தில் தான் நடந்தது என்பதை மறுக்க முடியுமா? எனவே கம்யூனிஸ இயக்கத்தின் வளர்ச்சியை, நாடாளுமன்றம்; சட்டமன்றம் போன்ற ஜனநாயக அமைப்புகளில் பெறும்

> “ முதலாளித்துவத்துடன் இறுதிக்கட்டப் போருக்கான களம் இப்போது தயாராகி விட்டது. நாங்கள் செய்ய வேண்டிய போர் உச்சத்தை எட்டிவிட்டது. ”



இடங்களை வைத்துத் தீர்மானிக்கக் கூடாது. அது எடுத்து முன்வைத்த கொள்கைகள், கோரிக்கைகள் எந்த அளவுக்கு வெற்றி பெற்றுள்ளன என்பதையும் சேர்த்துப் பார்க்க வேண்டும்.

உலக அளவில் பார்த்தாலும் கம்யூனிஸ்ட் இயக்கம் எல்லா நாடுகளிலும் தூக்கி எறியப் படவில்லை. கம்யூனிஸம் என்பது மனிதகுலம் முழுமைக்கான ஒரு பொதுத் தத்துவம். இன்று நவீன உற்பத்தி முறைகளில் பல விதமான

# இறந்துவிட்டதா?

பொருட்களைக் கோடிக் கணக்கில் உற்பத்தி செய்கிறோம். ஆனால் அவற்றை விற்றாக வேண்டும்; வாங்குவதற்கு மனிதர்களுக்குச் சக்தி வேண்டும். அப்படி வாங்கச் சக்தியில்லா விட்டால் என்ன ஆகும்? உற்பத்தி செய்த முதலாளி தலையில் கை வைத்துக் கொள்ள வேண்டியதுதான். இந்தியாவில் 1956 முதல் சுமார் மூன்று லட்சம் தொழிற்சாலைகள் மூடப்பட்டிருக்கின்றன. இவை அனைத்தும் கம்யூனிஸ்டுகளின் அராஜகப் போராட்டத்தினால் மூடப்பட்டவை அல்ல. இதற்குக் கம்யூனிஸ்டுகள் காரணமல்ல. இந்தப் போக்குகள் எதைக் காட்டுகின்றன என்றால், வரும் காலகட்டத்தில் முதலாளித்துவ சமூக அமைப்பு முடம் ஆகும் என்பதைத்தான். கம்யூனிஸம் சாகாது. அகங்காரத்தால் இதைக் கூறவில்லை. நாங்களில்லாமலும், இந்தக் கட்சியும், தத்துவமும் இருக்கும்; வெற்றி பெறும். தத்துவங்களைச் சொல்லி இந்தியாவில் எங்கள் நிலையை மறைக்க முயலவில்லை. திரிபுரா, கேரளா, மே. வங்காளம் ஆகிய மாநிலங்களில் தேர்தல்கள் மூலம் இயக்கம் ஆட்சியைப் பிடித்துள்ளது. ஆனால் வெற்றி பெற்ற மாநிலங்களுக்கு அடுத்துள்ள மாநிலங்களில் கட்சி வளராததற்குக் காரணம் மக்களின் நிலைமைகளைச் சரியாக மதிப்பிடத் தவறியதுதான். நவீன கால மாற்றங்களுக்கு ஏற்ப மக்களின் சிந்தனைகளும் வேட்கைகளும் மாறுகின்றன. அவற்றை அங்கீகரித்து, தீர்வு காண கம்யூனிஸ்ட் இயக்கம் தவறியிருக்கிறது.

நாங்கள் உலகத்தைப் பற்றிப் பேசும்போது நகைத்தவர்கள், இப்போது, 24 மணி நேரமும் உலகமயமாக்கலைப் பற்றியே பேசிக் கொண்டிருக்கிறார்கள். இதை ஒரு மாபெரும் வெற்றி என்று நான் கருதுகிறேன். ஏனெனில் முதலாளித்துவத்துடன் இறுதிக் கட்டப் போருக்கான களம் இப்போது தயாராகி விட்டது. நாங்கள் செய்ய வேண்டிய போர் உச்சத்தை எட்டி விட்டது. இப்போது எங்களோடு, சிந்தனையாளர்கள், தேசபக்தர்கள், விஞ்ஞானிகள், மனித குலத்தை நேசிப்பவர்கள் என்று போராட அணி திரண்டிருக்கிறார்கள். எனவே எங்கள் கருத்துக்கள் பரவலாகி இருக்கின்றன. நாங்கள் வளர்ந்திருக்கிறோம்.

நமது நாட்டில் நடைபெறும் தேர்தல்களைப் பொறுத்தமட்டில் அது பணம், விளம்பரம், அடிதடி, ஜாதி என்று மேலோங்கி விட்ட ஒரு சந்தையாகி விட்டது என்பதை சேஷன் உட்பட அனைவரும் சொல்லி வருந்துகிறோம். இந்தச் சந்தையில் பேட்டை ரவுடிகள், தியாகிகளைவிட வலிமையுள்ளவர்களாகக் காட்சியளிப்பார்கள். இது தற்காலிகம் தான். கோட்சேயால் காந்தியடிகளைத்தான் கொல்ல முடிந்தது; ஆனால் காந்தியம் வாழ்கிறது என்று நான் நம்புகிறேன். எனவே உறுதியாகச் சொல்கிறேன். காந்தியால் பாராட்டப்பட்ட, பாரதியால் வரவேற்கப்பட்ட கம்யூனிஸம் இந்திய மண்ணில் நிச்சயம் மலரும்!

சந்திப்பு : **ப்ரியன் ஸ்ரீநிவாசன்**

படம் : **ராஜன்**



**ம**ஹ்ரிபுக்கும் இஷாவுக்கும் இடைப்பட்ட சமயத்தில் ரபியுதீன் மாமு வந்தார்.

"குச்சு தாடிக்காரரு வர்றாரும்மா..." என்று மகன் அமீது சொல்லவும் "யாரு?" என்றாள் ஜுபைதா.

"நோம்பு நோம்புக்கு வருவாரே... அத்தாவோட சொந்தம்னு. அவரு..."

"அட... அவரா?" அவளது குரல் வரட்சியாக இருந்தது. முதல் நினைப்பே சோறு குழம்பு பற்றியதாக இருந்தது. இருக்கிற அலுப்பில், "இந்த மனுஷனுக்கு என்ன செய்ய?" என கவலைப்பட்டாள்.

புருஷனின் சொந்த பந்தங்கள் மீது எப்போதும் அவளுக்குச் சலிப்பு உண்டு. இவர் பஷீரின் தாய்மாமன். அம்மாவின் கடைசித் தம்பி. தனது ஜீவிதத்தின் அத்தாட்சி போல பஷீரை மட்டும் பெற்றுவிட்டு அம்மா சில வருஷங்களிலேயே மவுத்தாகி விட்டாள். வேர் அற்றுப் போனதாலோ என்னவோ பஷீருக்குத் தாய் வழியில் சரியாக உறவு அமையவில்லை. ரபியுதீன் மாமு மட்டும் விதிவிலக்கு. தனது இருப்பை உணர்த்துகிற மாதிரி வருடா வருடம் ரமலான் மாதத்தில் 'உடுப்பு யாசகம்' பெற வந்து விடுவார்.



பிறை பத்துக்கு உள்ளாகவே அவருக்கு நாலு முழ வேட்டியும் மேல் துண்டும் சட்டைத் துணியும் வாங்கி வைத்த காலமும் இருந்தது.

தனது தந்தைக்குப் பிறகு பஷீரும் அதைக் கடைபிடித்து வந்தான். ஒருநாள் தங்க வைத்து, சாப்பாடு போட்டு, புறப்படுகிற சமயம் தட்டில் புதுத் துணி வைத்துக் கொடுத்து, வார்த்தைகளில் விளக்கமுடியாத பரவசத்துடன் அவர் பெற்றுக் கொள்வதைக் கண்டு பெருமிதம் கொள்வான்.

இந்த இரண்டு மூன்று வருடங்களாக தொழில் பாதித்து குடும்பச் செலவுகளுக்குக் கூட தடுமாறுகிற நிலைமையாக இருந்தது. அதிலும் போன வருஷம் அவர் வந்தபோது குழந்தைகளுக்குக் கூட எடுக்க வழியில்லாதிருந்தது. நிலைமையைச் சொல்லி, "தப்பா நினைக்கக் கூடாது..." என்று மூடிய கைக்குள் ஐம்பது ரூபாய் மட்டும் வைத்துக் கொடுத்தான். கையோட்டம் இருந்தால் இப்படிச் செய்கிறவன் இல்லை என்று அறிந்தவர்தானே அவரும். கொஞ்சம் தடுமாறினாலும் ஒன்றும் சொல்லவில்லை. "அல்ஹம்துலில்லாஹ்..." எனக் கூறி கண்களில் ஒற்றி பாக்கெட்டில் வைத்துக் கொண்டார்.

"இவரை அந்தநாள்ல இருந்து பாக்கறேன். அதே கோலத்துலதான் இருக்காரு – பையனுக தலையெடுத்தும் தரித்திரம் தீராம. மேலுக்குப் போட நம்ம துணிதான் எப்பவும். இந்த வருஷம் அதும் முடியாமப் போச்சு. பாவம்..." போன பிறகு அவரைப் பற்றியே பஷீர் பேசிக்கொண்டிருந்தான். தர்மத்தின் மாதம் இது. தொடர்ந்து கொடுத்து வந்ததைக்கூட நிறுத்தும்படியான நிலைமைக்காக ஜுபைதாவும் வருத்தப்பட்டாள். "இருக்கட்டும்... நம்ம நிலைமை சரியானதும் எல்லாம் சேர்த்துக் குடுத்துரலாம். .."

இந்த ஒரு வருட இடைவெளி எதையும் மாற்றிவிடவில்லை. இந்த வருடம் மறுபடியும் வந்துவிட்டார். அக்காள் மகன் அதற்குள் சம்பாதித்து, இடும்பம் குள பாசனத்தில் தோப்பும்

## மும்தாஜ் யாசீன்

வயலும் வாங்கி இருப்பான் என நினைத்து விட்டாரா?

ஜுபைதாவுக்கு எரிச்சலாக இருந்தது.

"அஸ்ஸலாமு அலைக்கும்..." வாசலில் குரல்.

ஜுபைதா பதில் சொன்னாள். "வாங்க..." தலை முக்காடை சரி செய்தபடி கதவோரம் ஒதுங்கி நின்றாள்.

தனது வருகை குறித்த கூச்சமும், தயங்கிய நடையுமாக ரபியுதீன் மாமு உள்ளே வந்தார். அதே குச்சி தாடி. வெள்ளைத் தொப்பி. முழுக்கை சட்டை. கெண்டைக்காலுக்கு மேலே உயர்த்திக் கட்டிய வேட்டி. ஒல்லியான உடம்பு. கையில் மஞ்சள் பை.

"அல்லாவே... நாயனே..." தனக்குத்தானே சொல்லிக் கொள்கிற மாதிரி இறைவனின் திருநாமத்தை உச்சரித்தபடி திண்ணைச் சுவரோரம் உட்கார்ந்தார். "எல்லாம் சொகந்தானே..."

"இருக்கம்..." என்றாள் ஜுபைதா.

"மருமகப் புள்ள கடையிலயா?"

"இப்ப கடை இல்லை. எடுத்தாச்சு... வெளியூர் போயிருக்காரு"

அவர் பெரியதாக மீண்டும் இறைவனின் நாமத்தை உச்சரித்தார்.

சில விநாடிகளுக்குப் பேச ஏதுமற்று மௌனம் மட்டுமே இருந்தது.

"எப்ப வருவாரு?"

"சரியாத் தெரியலை... ரெண்டொரு நாள் ஆகும்..." என்றாள்.

"ம்ஹும்..." சுவரில் சாய்ந்துகொண்டார். கால் குடைச்சல். முடியலை."

ஜுபைதா ஏதும் பேசினால் பேச்சைத் தொடர முடிந்திருக்கும். அவள் சாப்பாட்டிற்கான யோசனையில் இருந்தாள்.

பெண்களுக்குள் சோறு, குழம்பு, பரிமாற்றம் நடப்பது உண்டு. பக்கத்து வீட்டில் மரியமக்கா, "மொச்சைக் குழம்புதான் இன்னைக்கு. பரவாயில்லையா?" என்று கேட்டாள்.

"போதும்க்கா..." என்றாள் ஜுபைதா.

கையில் கிண்ணத்துடன் படி ஏறும்போது சின்னவன் சம்சு ஓடி வந்தான். "அம்மா பசிக்குது..."

உள்ளே வந்ததும் புதிய மனிதராக ரபியுதீன் மாமுவைக் கண்டதும் தயங்கினான். மாமு அவனைக் கை நீட்டிக் கூப்பிட்டார்.

"வாங்க சின்னத் தொரை..."

அவன் போகவில்லை. அம்மாவின் காலைக் கட்டிக்கொண்டான். மாமு பெரியவனிடம் சொல்லிக்கொண்டிருந்தார். "உங்க எல்லாரையும் நம்ம ஊருக்குக் கூட்டிட்டுப் போறேன். வர்றீகளா?"

அவரது வருகையைப் போலவே இந்த வார்த்தைகளும் தவறாதவை. "சரீன்னு



ஒரு நாளைக்குக் கூடவே கிளம்பப் போறேன் பாருங்க..." என ஜுபைதா சிரித்துக்கொண்டே சொல்வதும்; "ஏன்..: போனா அவுங்க தின் கிறதை உனக்குத் தர மாட்டாங்களா?" என பஷீர் கேட்பதும் முன்பெல்லாம் நடந்திருக் கிறது.

சோறு குழம்பை உள் அறையில் எடுத்து வைத்துவிட்டு, "சாப்பிடலாம். வாங்க..." என்று கூப்பிட்டாள் ஜுபைதா.

"அதுக்கென்ன..." ரபியுதீன் மாமு மஞ்சள் பையை விரித்து ஒரு கவரை எடுத்தார். "ஒரு தட்டு வேணும்மா..."

எதற்கு என்று தெரியாமல் ஜுபைதா எடுத்து வந்து கொடுத்தாள். வெற்றிலை பாக்கு, ஐந்தே கால் ரூபாய் மொய்ப் பணத்துடன் கவரையும் வைத்து, "வாங்கிக்கம்மா..." என் றார். மூலையில் மஞ்சள் தடவிய கல்யாணப் பத்திரிகை அது.

"என்னது?"

"எம் மகன் பெரியவனுக்கு நிக்காஹ் வச் சிருக்கேன். கட்டாயம் எல்லாரும் வரணும்..."

"சரிங்க..."

"மருமகப்புள்ள வந்ததும் சொல்லுமா..."

"ம்..."

அவரது மன இறுக்கம் சற்று தளர்ந்த மாதிரி இருந்தது. "பஷீரை ஒரு நாளைக்கு வரச் சொல்லு... எம் மகன்கிட்டச் சொல்லி தொழி லுக்கு ஒத்தாசை பண்ணச் சொல்றேன்."

அவள் அதை எரிச்சலுடன் சகித்துக் கொண்டாள். இளக்காரம்தானே இது? இவரிடம் யாசித்துப் பிழைக்கிற அளவுக்கு மட்டமாக நினைக்கிறாரா?

**ப**ஷீர் அகமது மறுதினமே ஊரிலிருந்து வந்துவிட்டான். மாமுவின் வருகையே ஜுபை தாவுக்கு மறந்துபோனது. இரண்டு நாள் கழித்து கொழும்பு ஹாஜியார் மகளின் கல்யாணப் பத்திரிகை வந்தபோதுதான் நினைவுக்கு வந்தது. இந்த ஊருக்குப் பக்கம்தான் மாமுவின் ஊரான ருத்ராபாளையம்.

"உங்க மாமு வந்திருந்தாரு..."

"எப்ப?"

"நீங்க ஊர்ல இல்லாதப்ப..."

"அடடா..." பஷீர் வருத்தப்பட்டான். "ஏதாச்சும் குடுத்து அனுப்பினியா?"

"ம்ஹூம்... அப்பப் பார்த்து கையில பத்து ரூவாகூட இல்ல..."

பஷீர் சாப்பிடுவதில் கவனம் குறைந்தவன் போலானான்.

"அவரு பையனுக்குக் கல்யாணமாம். அழைச்சுட்டுப் போறாரு..." பத்திரிகையைத் தேடிக் கொண்டு வந்து கொடுத்தான். ஒவ் வொரு எழுத்தையும் கவனமுடன் படித் தான்.

"அவசியம் போயாகணும்..."

**ஹா**ஜியின் வீட்டுக் கல்யாணத்தை முடித்துவிட்டு ருத்ராபாளையம் புறப்பட்டுப் போனார்கள்.

பெருமாள் கோவில் அருகே வண்டித்தடப் பிரிவில் பேருந்து நின்றது. கீழே இறங்கியதும் அம்மாவின் கையைப் பிடித்துக் கொண்டு சிறு பிராயத்தில் நடந்தது பஷீரின் ஞாபகத்திற்கு வந்தது. மாட்டு வண்டி இந்த இடத்தில் திரும்பு கிற போது அச்சாணியே முறிந்துபோகிற அளவுக்குக் குலுங்கும். இத்தனை வருஷ இடைவெளிக்குப் பிறகும் ஊர் பெரிதாக ஒன்றும் மாறிவிடவில்லை. அதே ஆலமரம். கோவில் திண்ணை. சர்க்கரை வள்ளிக் கிழங்கும், அவித்த மொச்சையும் விற்கிற கிழவிகள், மண்பாதை...

தூரத்தில் ஒலிபெருக்கிச் சத்தம். யாரிடமும் கேட்க வேண்டும் என்று தோன்றவில்லை. உத்தேசமாக அதே திசையில் நடந்தார்கள். தூரத்தில் கல்யாணப் பந்தல் தெரிந்தது.

> **"பல்பு வாங்கும்போது நல்லா எரியும்னு சொன்னீங்க..."**
> **"ஆமா, அதுக்கென்ன?"**
> **"அடுப்புல போட்டுப் பார்த் தேன், எரியலையே!"**
> **— எஸ். தமிழ்மணி**

நெருங்க நெருங்க பந்தலின் விஸ்தீரணம் புலப் பட்டது. தெருவையே அடைத்து நீளமாகப் போடப்பட்டிருந்தது. பச்சை ஓலை வேய்ந்து, முகப்பில் வாழை மரங்களும், பாக்கு மட் டையும், இளநீர்க் காய்களும், விளக்கு அலங் காரங்களும்... உள்ளே வரிசை வரிசையாக மடக்கு நாற்காலிகள், குறுக்கும் நெடுக்குமாக நாலைந்து கார்கள், இரு சக்கர வாகனங் கள், பட்டுச் சேலையும் சலவை உடுப்பு மாக பெண்கள், ஆண்கள், குழந்தை கள்...

இது வேறு ஏதோ கல்யாணம் போல. வசதியைக் காண அப்படித்தானிருந்தது.

"யார்கிட்டவும் கேளுங்க... தெரிஞ்சவர் மாதிரி விடுவிடுன்னு போறீங்க..." ஜுபைதா சிடுசிடுத்தாள்.

"பொறு..." பஷீர் சுற்றும் முற்றும் பார்த் தான். தலைக்குத் தொப்பி போட்டு பெரியவர் ஒருத்தர் வேகமாகக் கடக்கவும், சலாம் கூறி நிறுத்தினான். "இங்க ரபியுதீன் வீடு எதுங்க... அவரு பையன் கல்யாணத்துக்கு வந்திருக்

கோம்..."

அவனையும், சற்று தள்ளி நிற்கும் ஜுபைதாவையும் பார்த்தபடி "நீங்க ஆரு?" என்று கேட்டார் பெரியவர்.

"நான் அவரோட அக்கா மகன்..."

"காத்தூன் பீவின்னு மவுத்தாகிப் போச்சுதே... பழனியில கட்டிக்குடுத்தது..."

"ஆமாங்க..."

"அடடா... மக்களே..." பெரியவர் உணர்ச்சி வசப்பட்டார். கண்கள் கசிவதாகக் கூடத் தோன்றியது. "எனக்குச் சின்னத்தா மகதான் உங்கம்மா... அந்த மகராசிக்குப் பெறகு உங்க குடும்பத்தோட போக்குவரத்து இல்லாமப் போச்சு. உங்கத்தா ரெண்டாந்தாரம் கட்டினதும் புத்தி மாறிட்டாகு..." என்னவோ யோசிப்பதைப் போல கொஞ்சம் நிறுத்தினார். "ம்ஹ்ம்... ரபியுதீன் மட்டும் எப்பவாச்சும் போய் வருவான். விசாரிச்சுப்போம்... அதும் பையனா நீ..ம்."

கண்களைத் துடைத்துக்கொண்டார். ஜுபைதா சட்டை நுனியைப் பற்றி இழுத்தாள்.



"வீடு பக்கந்தானுங்களா?"

"இத்தனை வருஷம் கழிச்சு பழைய சொந்தத்தைத் தேடி வந்திருக்கியே. ரொம்ப சந்தோஷம் மருமகனே..."

"......................"

"அதோ பாட்டுப் பாடுதே... அந்த வீடு தான்..."

பஷீர் அப்போதுதான் வீட்டைப் பார்த்தான். பந்தல் பாதியை மறைத்த போதும் வீட்டின் விஸ்திரணத்தை அறிந்து கொள்ள முடிந்தது. சுற்றிலும் ஓட்டு வீடுகளாக இருக்க, கம்பீரமான மாடியாக நின்றது அது.

"இந்த வீடா?"

"சொன்னனே... அதேதான். போ... நான் இதோ வந்துட்டேன்." பெரியவர் போய்விட்டார்.

தூரத்திலேயே ரபியுதீன் மாமு பார்த்து விட்டார். வேகமாக ஓடி வந்தார். "வாப்பா... வாம்மா..."

முகத்தில் இதுவரை கண்டிராத மலர்ச்சியும், பெருமையும் நாலெட்டு முன்னே வைத்து, "காதரு... இங்க வா... வா... சொல்றேன்" யாரையோ கூப்பிட்டார். நண்பர்களோடு இருந்த மாப்பிள்ளை எழுந்துவந்தான். பஷீர் பக்கம் திரும்பி, "எம் மகன்..." என்றவர், மகனிடம் "இதாரு தெரியுதா... ஒன் அத்தை மகன்டா... பஷீரு..."

காதர் சலாம் சொன்னான். "அத்தா அடிக்கடி சொல்லுவாக... நீங்க வந்தது ரொம்ப சந்தோஷம்..."

பையன் பார்க்க லட்சணமாக இருந்தான். பேச்சும், தொனியும் மரியாதை தெரிந்தவன் என்பதைக் காட்டியது. வாரி புரோக்கர் என்று மாமு சொல்லி இருக்கிறார். அவன் தலையெடுத்த பிறகுதான் குடும்பம் முன்னேறி இருக்கிறது. கம்பீரமாக நிற்கும் வீடு. செழிப்பைக் காட்டுகிற மனித முகங்கள்... பஷீர் அவனுக்குத் தனது நல்வாழ்த்துகளைத் தெரிவித்தான்.

தனது வருகையை மாமு பெரிய விஷயமாக்கிக் கொண்டிருப்பதாகத் தோன்றியது பஷீருக்கு. "டேய்... அவனே... இவனே..." என்று பெயர் சொல்லி ஒவ்வொருத்தராகக் கூப்பிட்டுக் காட்டிக் கொண்டிருந்தார். சுற்றிலும் வேடிக்கை பார்க்கிற கூட்டம். கொஞ்ச நேரத்திற்குள் கல்யாண வீட்டுக் கலகலப்பு அவனை மையம் கொண்டதாக மாறி இருந்தது. அம்மாவின் ஜாடை அப்படியே இருப்பதாக வயதானவர்கள் சிலர் ஞாபகப்படுத்திக் கொண்டார்கள். எப்போதோ செத்துப் போன அம்மாவின் நினைவுகள் அசை போடப்பட்டன. அவளது அழகும், குணமும் பலரால் திரும்பத் திரும்பப் பேசப்பட்டுக் கொண்டிருந்தது.

"ரபியுதீன் அந்தக்கா வளர்த்த புள்ளையாக்கும். எப்பவும் இடுப்புல வச்சக்கிட்டே அலையும்..."

"கட்டிக் குடுத்த பெறகும் அந்தப் பாசம் குறையலை. பெரு நாளுக்கு முதல்ல அவனுக்குத் துணிமணிக வாங்கி அனுப்பிட்டுத்தான் தனக்கு எடுக்குமாக்கும்..."

"அப்ப இருந்து அவரு உடுத்தறது அக்கா வூட்டுத் துணிதான்... இன்னிக்கு இம்புட்டு வசதி வந்திருச்சன்னு பேரு... ஆனா நோம்பு நோம்புக்கு அக்கா மகன்ட்டதான் துணி மணிக்குப் போயி நிப்பாரு..."

"அதொரு குணம். சில பேருக்கு அப்பத்தான் நிறைவா இருக்கும்."

ஊர் திரும்பும்போது பஷீரின் மனத்தில் தீர்மானமாக ஓர் எண்ணம் உருவாகி இருந்தது. 'இனிமேல் எந்த ஒரு கஷ்டம் வந்தாலும் அவருக்குத் துணிமணி வாங்கித் தருவதை நிறுத்தக் கூடாது...' முதன்முறையாக ஜுபைதாவும் அதை ஆமோதித்தாள். ○

# பொன்னியின் செல்வன்



ஐம்பத்து ஏழாம் அத்தியாயம்

## விடுதலை

வந்தியத்தேவன் சிறிது நேரம் வாசற்படிக்கருகில் கவலையுடன் நின்றான். புலிகளைப் பார்த்த வண்ணம் மீசையில் கையை வைத்து முறுக்கிக் கொண்டு நின்ற காவலன் மீது பாய்ந்து அவனைத் தீர்த்துக் கட்டிவிட்டு மேலே போகலாமா என்று ஒருகணம் யோசித்தான். ஆனால் புலிக்கூண்டுகளுக்கு அப்பால் அடுத்த வாசற்படிக்கருகில் மற்றும் இரு காவலர்கள் நிற்பது தெரிந்தது. அவர்களில் ஒருவன் இந்தக் காவலனுக்கு ஏதோ சமிக்ஞையினால் தெரிவித்துவிட்டு அப்பால் போனான். ஒருவேளை தன்னைப் பற்றித்தான் அவர்கள் ஜாடையாகப் பேசிக் கொள்கிறார்களோ? இந்தக் காவலனைத் தாக்கி வீழ்த்திவிட்டுப் போனாலும், அப்பால் இது போன்ற பல வாசற்படிகளும் அவற்றில் காவலர்களும் இருப்பார்கள். அவர்களையெல்லாம் சமாளித்து விட்டுத் தப்பிச் செல்ல முடியுமா? அதைக் காட்டிலும் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து சென்று புலிக்கூண்டுகளைத் திறந்துவிட்டால் என்ன? அப்போது ஏற்படக் கூடிய குழப்பத்தில் தப்பிச் செல்வது எளிதாக இருக்கும் அல்லவா...?

இப்படி அவன் எண்ணியபோது,

**அமரர் கல்கி**

காவலன், "ஓகோ! தப்பித்துக் கொள்ள லாம் என்று பார்க்கிறாயோ?" என்று கூறியதைக் கேட்டு வந்தியத்தேவன் ஒருகணம் திடுக்கிட்டான்.

புலிகளில் ஒன்று உறுமியது.

"அட நாயே! சும்மா கிட!" என்று அதட்டினான் காவற்காரன்.

அவன் புலியுடன் பேசுகிறான் என்று அறிந்ததும் வந்தியத்தேவன் சிரித் தான்.

காவற்காரன் திரும்பிப் பார்த்தான்.

"பின்னே பாருங்க, ஐயா! இந்தப் புலி என்னை மிரட்டப் பார்க்கிறது. இது மாதிரி எத்தனையோ புலிகளை நான் பார்த்திருக்கிறேன்! இந்தச் சிங்கத் திடம் அதன் ஜம்பம் சாயாது!" என்று கூறி மறுபடியும் மீசையை முறுக் கினான்.

வந்தியத்தேவன், "கூண்டுக்குள் இருக்கும் வரையில் புலியும் எலியும் ஒன்றுதான்! அதன் ஜம்பம் எப்படிச் சாயும்?" என்று சொல்லி விட்டுக் கையிலிருந்த பெரிய வேளாரின் இலச்சினையைக் காட்டினான்.

"போங்க, ஐயா, போங்க! முதன் மந்திரியின் ஆட்கள் வாசலிலே உங் களுக்காகக் காத்திருக்கிறார்களாம்! சீக் கிரம் போங்க!" என்று கூறிவிட்டு, அவர்கள் வந்த பக்கத்தை நோக்கி, "அடே பைத்தியக்காரா! சும்மா இருக்க மாட்டே!" என்று கூவினான்.

அச்சமயம் வந்தியத்தேவன் பைத்தியக்காரனின் கையைப் பிடித்துக்கொண் டிருந்தான். அவன் கை நடுங்குவதைத் தெரிந்துகொண்டு, கையை இறுக்கிப் பிடித்துத் தைரியப் படுத்தினான்.

பிறகு, காவற்காரனைத் தாண்டி இரு வரும் முன்னால் சென்றார்கள்.

"விடுதலை வேண்டுமாம், விடுதலை! எல்லாரையும் விடுதலை செய்துவிட் டால், பிறகு எங்கள் பிழைப்பு என்ன ஆகிறது?" என்று அந்தக் காவலன் கூறியது அவர்கள் காதில் விழுந்தது.

வந்தியத்தேவன் எவ்வளவோ துணிவுள்ளவனாயினும், அச்சமயம் அவன் நெஞ்சம் பக், பக் என்று அடித் துக்கொண்டிருந்தது. வாசலில் முதன் மந்திரியின் ஆட்கள் காத்துக் கொண் டிருப்பதாகக் காவலன் சொன்னது அவன் மனத்தில் பதிந்திருந்தது. சிறைக்குள்ளே இருட்டாயிருக்கிறது; அதனால் இங்குள்ள காவலர்களை எளிதில் ஏமாற்றிவிட்டுச் செல்லலாம். வெளியில் வெளிச்சமாயிருக்குமே? முதன்மந்திரியின் ஆட்கள் இந்த ஆள் மாறாட்டத்தைக் கண்டுபிடித்து விட் டால் என்ன செய்கிறது? ஆயினும் பார்க்கலாம் ஒரு கை! எதற்கும் தயாரா யிருக்க வேண்டியதுதான்! நல்லவேளை யாக இந்தப் பைத்தியக்காரனும் கெட்டிக்காரப் பைத்தியக்காரனாயிருக் கிறான். சமயத்தில் கை கொடுப்பான்...!

பாதாளச் சிறையில் பல வாசல் களையும் கடந்து பிறகு தங்க நாணய வார்ப்படச் சாலையின் வாசல் களையும் கடந்து அவர்கள் விரைந்து சென்றார்கள். ஆங்காங்கேயிருந்த காவலர்கள் அவர்களிடமிருந்த வேளாரின் இலச்சினையைப் பார்த் ததும் ஒதுங்கி வழி விட்டார்கள். இவர் களை யாரும் சந்தேகிக்கவும் இல்லை; உற்றுப் பார்க்கவும் இல்லை.

போகும்போதே வந்தியத்தேவன் பரபரப்புடன் யோசித்து ஒரு திட்டம் போட்டுக்கொண்டான். நீண்ட அறை ஒன்றில் அவர்கள் போய்க்கொண் டிருந்தபோது அவனுடைய துணைவன் காதில், "நீ முதன் மந்திரி வீட்டுக்குப் போகப் போகிறாயா? என்னுடன் வரு கிறாயா?" என்று கேட்டான்.

"முதன்மந்திரி வீட்டுக்குப் போனால் மீண்டும் பாதாளச் சிறைதான்! உன் னுடனே வருவேன்! நீ எங்கே போவ தாக உத்தேசம்?" என்றான்.

"கடவுள் அருள் இருந்தால், ஈழ நாட் டுக்கே போய் விடலாம்! முதன்மந்திரி யின் ஆட்களுக்கு முன்னால் நீ என் னைப் 'பினாகபாணி!' என்று கூப்பிடு...! உன் பெயர் என்ன?"

"பைத்தியக்காரன்!"

"உண்மையான பெயர்? உன் பெற்றோர்கள் வைத்த பெயர்?"

'ஆ! அதுவா! பெற்றோர்கள் எனக்

குக் 'கரிய திருமால்' என்று பெயரிட்டனர். சுற்றத்தாரும் ஊராரும் 'கருத்திருமன்' என்று அழைத்தார்கள்.

"நல்ல பெயர்தான்! கருத்திருமா! தஞ்சை வீதிகளில் நாம் போகும் போது உன் தோளைத் தொடுவேன். உடனே நீ என்னுடன் ஓடிவரச் சித்தமாயிருக்க வேண்டும். நன்றாக ஓடுவாய் அல்லவா?"

"ஓ! ஓட்டத்தில் ஈழத்தரசன் மகிந்தன்கூட என்னுடன் போட்டியிட முடியாது!"

வந்தியத்தேவன் சிரித்தான்.

"நீ நல்ல பைத்தியக்காரன்!" என்றான்.

பொற்



காசு வார்ப்படச் சாலையைக் கடந்து அவர்கள் வெளியில் வந்தார்கள்.

வந்தியத்தேவன் பயந்தபடி அங்கே முதன் மந்திரியின் ஆட்கள் ரொம்பப் பேர் இல்லை. இரண்டே இரண்டு பேர்தான் இருந்தார்கள். அவர்களில் ஒருவன் நல்ல குண்டன். வந்தியத்தேவனுக்கு அவனை எங்கேயோ எப்போதோ பார்த்த மாதிரி இருந்தது. தெளிவாக நினைவுக்கு வரவில்லை.

"நீங்கள்தானே முதன் மந்திரியின் ஆட்கள்!" என்றான் வந்தியத்தேவன்.

"என்ன தம்பி, அதற்குள்ளேயா மறந்துபோய்விட்டாய்?" என்றான் அவர்களில் ஒருவன்.

"இல்லை, இல்லை! நீங்கள்தானே எங்களை முதன்மந்திரி வீட்டுக்கு அழைத்துப் போகப் போகிறீர்கள்?" என்றான் வந்தியத்தேவன்.

"ஆமாம்; நாங்கள்தான்! நீ முதன் மந்திரி வீட்டுக்குப் போகும் வழியைக் கூட மறந்து போனாலும் போய்விடுவாய்!"

அப்போது கருத்திருமன், வந்தியத்தேவன் கூறியதை நினைவு கூர்ந்து, "அப்பா, பினாகபாணி! எனக்குப் பயமாயிருக்கிறது! முதன்மந்திரி மறுபடியும் என்னைப் பாதாளச் சிறையில் தள்ளி விடுவாரோ, என்னவோ!" என்றான்.

"அதெல்லாம் மாட்டார், அப்பனே! எங்கள் முதன்மந்திரியின் சமாசாரம் உனக்குத் தெரியாது போலிருக்கிறது. ஆனால், தப்பித்துக் கொள்ள மட்டும் பார்க்காதே! அப்படி ஏதாவது செய்தால், நாங்கள் பாதாளச் சிறையில் இருக்க நேரிடும்!"

இவ்விதம் சொல்லிவிட்டு அந்த ஆட்களில் குண்டனாயிருந்தவன் முன்னால் நடந்தான். இன்னொருவன் வந்தியத்தேவனுக்கும் கருத்திருமனுக்கும் பின்னால் காவலாக வந்தான்.

தஞ்சாவூர் வீதிகளில் கலகலப்பே இல்லை. ஜனசஞ்சாரமும் இல்லை. ஆதித்த கரிகாலரின் இறுதிச் சடங்குகளினால் ஏற்பட்ட கிளர்ச்சிகள் அடங்கிவிட்ட பிறகு கோட்டைக்குள் வசித்தவர்கள் அவர்களுடைய அலுவல்களில் ஈடுபட்டிருந்தார்கள். கோட்டைக்கு வெளியில், கொடும்பாளூர்ப் படைகள் கடுமையாகக் காவல் புரிந்து வந்தன. கோட்டைக்கு வெளியிலிருந்து யாரும் உள்ளே வருவதற்கு அநுமதிக்கப்படவில்லை.

வந்தியத்தேவன் இருபுறமும் உற்றுப் பார்த்துக்கொண்டு நடந்தான். அந்த இரண்டு ஆட்களிடமிருந்து தப்பிச் செல்வது மிகவும் சுலபம். ஆனால், மறுபடியும் பிடிபடாமல் இருக்க வேண்டுமே? கோட்டைக்குள்ளிருந்து வெளியேறுவதற்கும் வசதியாக இருக்க வேண்டுமே? இந்த எண்ணத்தினால், வந்தியத்தேவன் வீதியின் இரு பக்கங்களையும் உற்றுப் பார்த்துக்கொண்டு நடந்தான்.

பெரிய பழுவேட்டரையருடைய அரண்மனை வாசலைத் தாண்டிச் சென்றதும், வந்தியத்தேவனுடைய பரபரப்பு அதிகமாயிற்று. அடுத்தாற்போல், அந்தச் சந்து வரப் போகிறது! முன்னொரு தடவை சின்னப் பழுவேட்டரையரின் ஆட்களிடமிருந்துதான் தப்பி ஓடிச் சென்ற சந்துதான்! அதைத்தான் அவனும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். வளைந்து வளைந்து சென்ற அச் சந்தில் மூலை முடுக்குகள் அதிகம் இருந்தன. இரண்டு புறமும் தோட்டச் சுவர்கள். சுவர்களின் மேலாக வெளியில் தாழ்ந்து தொங்கிய மரங்கள். அங்கேதான் இக் காவலர்களிடமிருந்து தப்பி ஓடினால் ஓடலாம். முன் போலவே பெரிய பழுவேட்டரையருடைய மாளிகைத் தோட்டத்துக்குள் குதிக்கலாம். அங்கே குதித்துவிட்டால் அடர்ந்த மரங்களுக்கிடையே ஒளிந்து கொள்ள வசதியாயிருக்கும். முன் போலவே, பொக்கிஷ நிலவறைப் பாதை மூலமாக வெளியேறவும் இலகுவாயிருக்கும். வேறு வழியில் தப்புவது சாத்தியமில்லை...

இதோ அந்தச் சந்து வழி, அவன் முன் தப்பிச்சென்ற வழி, வந்துவிட்டது.

வந்தியத்தேவன் கருத்

திருமனுடைய தோளைத் தொடலாமா என்று எண்ணினான்? ஆனால் இது என்ன? அங்கே யார் கூட்டமாக வருகிறார்கள்? சிவிகைகள்! குதிரைகள்! கையில் வேல் பிடித்த காவல் வீரர்கள்.

இவ்வளவு ஆர்ப்பாட்டத்துடன் வருகிறவர்கள் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவோ, பெருந்தர அதிகாரிகளாகவோ இருக்க வேண்டும்.

இதை உணர்ந்து முதன்மந்திரியின் ஆட்கள் சுற்று முற்றும் பார்த்தார்கள். வந்தியத்தேவன் கவனத்தைக் கவர்ந்த சந்தை அவர்களும் கவனித்தார்கள். உடனே அவ்விடம் சென்று ஒதுங்கி நின்றார்கள். தாங்கள் அழைத்து வந்த இருவரையும் தங்களுக்குப் பின்னால் நிறுத்திப் பிறர் அறியாவண்ணம் அவர்களை மறைத்துக்கொண்டு நின்றார்கள்.

எதிரில் கூட்டமாக வந்தவர்கள் விரைவில் அந்த இடத்தை அடைந்து அவர்களைத் தாண்டிச் சென்றார்கள்.

முன்னால் வேல் பிடித்த வீரர்கள் சிலர்.

பிறகு, மூன்று கம்பீரமான வெண் புரவிகளின் பேரில் மலையமானும் கொடும்பாளூர் வேளாரும் அவர்களுக்கு நடுவில் ஒருவரும் வந்தனர். நடுவில் வந்தவர் பொன்னியின் செல்வர் என்பதை வந்தியத்தேவன் கண்டான்.

ஆகா! எவ்வளவு சமீபத்தில் இருக்கிறார்? ஆனாலும், எவ்வளவு தூரமாகப் போய்விட்டார்?

ஒருகணம் வந்தியத்தேவன் எண்ணினான்; காவலர்களை மீறி ஓடிச் சென்று அவர் முன்னால் நிற்கலாமா என்று. உடனே அந்தக் கருத்தை மாற்றிக் கொண்டான். தமையனைக் கொன்றதாகக் குற்றம் சாட்டப்பட்டவனுக்குப் பொன்னியின் செல்வர்தான் எப்படிக் கருணை காட்ட முடியும்...? அல்லது சிநேக உரிமை கொண்டாட முடியும்...? தன்னைப் பார்த்ததும் அவர் அருவருப்பு அடைந்தாலும் அடையலாம். பக்கத்திலுள்ள மலையமானும் வேளாரும் என்ன செய்வார்கள் என்று சொல்ல முடியாது.

இதற்குள் அவர்களுக்குப் பின்னால் வந்த சிவிகைகளின் மீது வந்தியத்தேவன் கவனம் சென்றது.

ஆகா! இளையபிராட்டி குந்தவை! கொடும்பாளூர் இளவரசி வானதி! சம்புவரையர் மகள் மணிமேகலை!

வந்தியத்தேவனுடைய நெஞ்சு படாதபாடு பட்டு விம்மித் துடித்தது.

வேறு எந்தச் சந்தர்ப்பமாயிருந்தாலும், இந்த மூன்று பெண்மணிகளில் எவரையும் அணுகி உதவி கோரலாம். அவர்களும் மனமுவந்து உதவி செய்வார்கள். ஆனால், இப்போது? ஆதித்த கரிகாலனை வஞ்சகத் துரோகம் செய்து கொன்றவனைப் பார்த்தால் இளைய பிராட்டியும் இளவரசி வானதியும் எத்தனை அருவருப்புக் கொள்வார்கள்?

போகட்டும், இந்தப் பேதைப் பெண் மணிமேகலையை இவர்கள் தங்களுடன் சேர்த்துக்கொண்டிருக்கிறார்களே? அதற்காக மகிழ்ச்சி அடைய வேண்டியதுதான். மணிமேகலை இவர்களிடம் கடம்பூரில் நடந்ததையெல்லாம் சொல்லியிருப்பாளா? தன்னைத் தப்புவிப்பதற்காக 'நான்தான் கொன்றேன்' என்று சொன்னாளே, அம் மாதிரி இவர்களிடமும் சொல்லியிருப்பாளா? இல்லை, சொல்லியிருக்க மாட்டாள். அவ்விதம் சொல்லியிருந்தால் இவர்கள் அவளைத் தங்களுடன் இவ்வளவு ஆதரவாக அழைத்துப் போக மாட்டார்கள்.

சிவிகைகள் அவர்கள் நின்று கொண்டிருந்த சந்தைக் கடந்து சென்றன. பின்னால் வந்த காவலர்களும் போனார்கள்.

''சரி; வாருங்கள்! இனி நாம் போகலாம்'' என்று சொல்லிவிட்டு முதன் மந்திரியின் ஆட்கள் முன்னால் நடந்தார்கள்.

வந்தியத்தேவன் ஒரு நொடியில் 'இதுதான் சமயம்' என்ற முடிவுக்கு வந்தான். கருத்திருமனுடைய தோளைத் தொட்டு விட்டுச் சந்து வழியாக ஓட்டம் பிடித்தான். கருத்திருமனும் அவனைத் தொடர்ந்து ஓடினான்.

காவலர்கள் இருவரும் பின்னால் ஓடி வரும் சத்தம் கேட்டது. சிறிது நேரம் வரையில் திரும்பிக் கூடப் பார்க்

காமல் இருவரும் ஓடினார்கள். முதலில், கருத்திருமன் திரும்பிப் பார்த்தான்.

"ஒருவன் பின்தங்கி விட்டான்; ஒருவன்தான் வருகிறான்!" என்றான்.

வந்தியத்தேவனும் திரும்பிப் பார்த்துக் குண்டன் பின் தங்கி விட்டதை அறிந்தான். ஒருவனாயிருந்தாலும், அவனுடன் நின்று சண்டை பிடிக்கப் பார்ப்பது அறிவுடைமையாகாது. ஆகையால், கருத்திருமனுக்கு சமிக்ஞை காட்டிவிட்டு மேலே ஓடினான்.

முன்னொரு தடவை அவன் மதில் சுவர் ஏறிக் குதித்த அதே இடத்தை அடைந்த பிறகுதான் நின்றான். முறிந்து வளைந்திருந்த கிளை அப்படியே இன்னும் இருந்தது. அதைப் பிடித்துத் தாவிச் சுவர் மீது ஏறிக்கொண்டான். கருத்திருமனையும் கையைப் பிடித்துத் தூக்கி ஏற்றிவிட்டான்.

இருவருமாக, முறிந்து மடிந்திருந்த அந்த மரக்கிளையைச் சிறிது ஆட்டித் துண்டித்தார்கள்.

பின் தொடர்ந்து வந்த ஆள் அருகில் வந்ததும் அவன் பேரில் தள்ளினார்கள்.

மரக்கிளை அவன் பேரில் விழுந்ததா என்பதைக் கூடக் கவனியாமல் சுவர் மேலிருந்து தோட்டத்தில் குதித்தார்கள். அடர்ந்த மரங்கள் - புதர்கள் இவற்றினிடையே புகுந்து சென்று, மறைந்து கொண்டு நின்று, சுவரைக் குறி வைத்துப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

யாரும் தங்களைத் தொடர்ந்து பிடிப்பதற்குத் தோட்டத்துக்குள் குதிக்கவில்லை என்று தெரிந்து கொண்டு மேலே சென்றார்கள்.

"அப்பா! தப்பிப் பிழைத்தோம்!" என்றான் வந்தியத்தேவன்.

"இதற்குள் என்ன ஆகிவிட்டது? கோட்டைக்கு வெளியே போவது எப்படி?" என்றான் கருத்திருமன்.

"அதற்கு வழி இருக்கிறது கொஞ்சம் பொறுமையாயிரு!"

பழுவேட்டரையரின் மாளிகையை நெருங்கியதும் வந்தியத்தேவன் நின்றான். மாளிகையில் முன் போலக் கலகலப்பு இல்லைதான். ஆயினும் நடமாட்டம் இருந்தது. இருட்டும் நேரத்தில் பொக்கிஷ நிலவறையில் புகுவதுதான் உசிதமாயிருக்கும்.

இவ்விதம் தீர்மானித்து ஒரு மரக் கட்டையின் மீது உட்கார்ந்தான். கருத்திருமனையும் உட்காரச் செய்தான்.

"இனி இருட்டிய பிறகுதான் நம் பிரயாணத்தைத் தொடங்க வேண்டும். அதுவரையில் உன்னுடைய கதையைச் சொல்லு, கேட்கலாம்!" என்றான்.

"அதுதான் சொல்ல முடியாது என்று முன்னமே சொன்னேனே?"

"அப்படியானால், உன்னை வெளியே அழைத்துப் போகவும் முடியாது."

"நான் உண்மையைச் சொல்லாமல், ஏதாவது கற்பனை செய்து கூறினால் என்ன பண்ணுவாய்?' என்றான்.

"கதை - கற்பனை எதுவாயிருந்தாலும் சொல்லு! கொஞ்ச நேரம் பொழுது போக வேண்டும் அல்லவா?"

கருத்திருமன் சொல்லத் தொடங்கினான். உண்மையிலேயே அது அபூர்வமான பல சம்பவங்கள் நிறைந்த கற்பனைக் கதை போலவே இருந்தது.

## ஐம்பத்து எட்டாம் அத்தியாயம்

# கருத்திருமன் கதை

கரியதிருமால் என்னும் கருத்திருமன், கோடிக்கரைக்குச் சிறிது வடக்கே கடற்கரை ஓரத்தில் உள்ள தோப்புத்துறை என்னும் ஊரினன். அங்கிருந்து ஈழத் தீவுக்குப் படகு செலுத்திப் பிழைப்பு நடத்திக் கொண்டிருந்தான். சுமார் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் அவன் ஒருமுறை ஈழத்திலிருந்து தோப்புத்

துறைக்கு வந்துகொண்டிருந்தபோது புயல் அடித்துக் கடல் கொந்தளித்தது. படகு கவிழாமல் கரையில் கொண்டு வருவதற்கு மிகவும் பிரயாசைப்பட்டான். கோடிக்கரைக் கலங்கரை விளக்கின் அருகில் வந்து அவன் கரையை நெருங்கியபோது ஒரு பெண் அக் கொந்தளித்த கடலில் மிதப்பதைக் கண்டான். அவள் பேரில் இரக்கம் கொண்டு படகில் ஏற்றிப் போட்டுக் கொண்டான். அவள் அப்பொழுது உணர்வற்ற நிலையில் இருந்தாள். உயிர் இருக்கிறதா, இல்லையா என்று கூடக் கண்டுபிடிக்க இயலவில்லை. அங்கேயே படகைக் கரையேற்றப் பார்த்தும் முடியவில்லை. காற்று அடித்த திசையில் படகைச் செலுத்திக்கொண்டு போய்க் கடைசியில் திருமறைக்காடு என்னும் ஊர் அருகில் கரையை அடைந்தான். உணர்வற்ற அந்தப் பெண்ணைக் கரையில் தூக்கிக் கொண்டு வந்து போட்டுக் கவலையுடன் கவனித்துக் கொண்டிருந்தபோது குதிரைகள் மேலேறிச் சில பெரிய மனிதர்கள் அப்பக்கம் வந்தார்கள். அவர்கள் உதவி செய்து அப்பெண்ணுக்கு உயிர் வருவித்தனர். ஆனால் அவள் பேசவும் இல்லை. மற்றவர்கள் பேசுவது அவள் காதில் விழுந்ததாகவும் தெரியவில்லை. "இவள் பிறவி ஊமைச் செவிடு" என்று அவர்களில் ஒருவர் கூறினார். அவர்களின் தலைவராகத் தோன்றியவர் கருத்திருமனைத் தனியே அழைத்து ஒரு விந்தையான செய்தியைக் கூறினார். புயல் அடங்கியதும் அந்தப் பெண்ணை ஈழ நாட்டுக்கு அழைத்துச் சென்று அந்த நாட்டிலோ அல்லது அருகில் உள்ள தீவு ஒன்றிலோ விட்டு விட்டு வந்து விட வேண்டும் என்றும், அதற்காகப் பெரும் பணம் தருவதாகவும் அவர் சொன்னார். அதன்படியே கருத்திருமன் ஒப்புக்கொண்டு பணமும் பெற்றுக் கொண்டான். கடலில் கொந்தளிப்பு அடங்கியதும் அவளைப் படகில் ஏற்றி அழைத்துச் சென்றான். கடல் நடுவில் கட்டை ஒன்றைப் பிடித்துக்கொண்டு ஒருவன் மிதப்பதைக் கண்டான். மிகவும் களைத்துப் போயிருந்த அவனையும் படகில் ஏற்றிக் கொண்டான். முதலில் அந்தப் பெண் புதிய மனிதனைக் கண்டுமிரண்டாள். பிறகு, அவனைக் கவனியாமலிருந்தாள். இருவரையும் அழைத்துக் கொண்டுபோய் அவன் ஈழ நாட்டுக்கு அருகில் உள்ள ஒரு தீவில் இறக்கி விட்டான்.

அந்த தீவில் ஒரு பெரியவர் இருந்தார். அவர் இந்தப் பெண்ணைத் தமது மகள் என்று கூறினார். முன்னமே அவள் ஊமை என்றும், இப்போது தம்மைக்கூட அவள் அறிந்து கொள்ளவில்லையென்றும் கூறினார். பிறகு, அவளைக் கடலிலிருந்து காப்பாற்றியதைக் கருத்திருமன் சொன்னான்.

நடுக்கடலில் படகில் ஏறிய மனிதர் கருத்திருமனிடம் ஓர் ஓலை கொடுத்து அதை இலங்கை அரசனிடம் கொண்டு போய்க் கொடுக்கும்படி அனுப்பினார். அதிலிருந்து அவர் ரொம்பப் பெரிய மனிதராயிருக்க வேண்டுமென்று கருத்திருமன் தீர்மானித்துக்கொண்டான். இலங்கை மன்னனிடம் ஓலையைக் கொடுத்த பிறகு அவனுடைய பேச்சிலிருந்து தன்னால் காப்பாற்றப்பட்டவர் பாண்டிய நாட்டு அரசர் என்பதைத் தெரிந்துகொண்டான். பாண்டிய மன்னரை அழைத்து வருவதற்கு இலங்கை அரசர் பரிவாரங்களை அனுப்பினார். கருத்திருமன் மிக்க களைத்திருந்தபடியால் அவர்களுடன் போகவில்லை. பாண்டிய அரசர் சில தினங்களுக்குப் பிறகு இலங்கை அரசரின் அரண்மனைக்கு வந்து சேர்ந்தார். இரு மன்னர்களும் சேர்ந்து இலங்கையின் தென் கோடியில் மலைகள் சூழ்ந்திருந்த ரோஹண நாட்டுக்குச் சென்றார்கள். அங்கே சில தினங்கள் தங்கியிருந்தார்கள். கருத்திருமன் பேரில் பிரியம் கொண்ட பாண்டிய மன்னர் அவனையும் தம்முடன் அழைத்துப் போனார். ரோஹண நாட்டில் பல இடங்களையும் இலங்கை அரசர் பாண்டிய மன்னருக்குக் காட்டினார். கடைசியாக, யாரும் எளிதில் நெருங்க முடியாத ஒரு பள்ளத்தாக்கிற்கு அழைத்துச்

சென்றார். அங்கே ஒரு மலைக்குகையில் அளவில்லாத பொற்காசுகள், நவரத்தினங்கள், விலை மதிப்பில்லாத ஆபரணங்கள் முதலியவை வைக்கப்பட்டிருந்தன. அவற்றையெல்லாம் பார்வையிட்ட பிறகு, இலங்கை அரசர் ஒரு தங்கப் பெட்டியை எடுத்துத் திறந்து காட்டினார். அதற்குள்ளே ஜாஜ்வல்யமாகப் பிரகாசித்த மணிமகுடம் ஒன்றும், இரத்தினஹாரம் ஒன்றும் இருந்தன. அரசர்களுடைய சம்பாஷணையிலிருந்து அந்தக் கிரீடம் பாண்டிய வம்சத்து அரசர்களின் புராதனமான கிரீடம் என்றும், அந்த இரத்தினஹாரம் பாண்டியகுல முதல்வனுக்குத் தேவேந்திரன் வழங்கியதாகச் சொல்லப்பட்ட ஹாரம் என்றும் தெரிந்துகொண்டான். அவற்றை எடுத்துக்கொண்டு போகும்படி இலங்கை அரசர் பாண்டியனை வற்புறுத்தினார். பாண்டிய மன்னர் மறுத்துவிட்டார். சோழர்களை அடியோடு முறியடித்துவிட்டு மதுரையில் தாம் முடி சூட்டிக் கொள்ளும் நாள் வரும்போது, இலங்கையின் அரசரே அவற்றை எடுத்துக்கொண்டு மதுரைக்கு வந்து உலகம் அறியத் தம்மிடம் அளிக்க வேண்டும் என்று கூறினார்.

பிறகு, பாண்டிய அரசர் கருத்திருமனிடம் அவன் எடுத்துப் போகக் கூடிய அளவு பொற்காசுகளைக் கொடுத்து அந்த ஊமைப் பெண்ணைப் பத்திரமாகப் பராமரிக்க ஏற்பாடு செய்துவிட்டுத் திரும்பப் பாண்டிய நாட்டில் வந்து தம்முடன் சேர்ந்து கொள்ளும்படி அனுப்பினார்.

கருத்திருமன் பூதத்தீவுக்குச் சென்றபோது அங்கே அந்தப் பெண்ணைக் காணவில்லை. அவளுடைய தகப்பனையும் காணவில்லை. இருவரையும் தேடிக்கொண்டு கோடிக்கரைக்குப் போனான். அங்கே அந்த ஊமைப் பெண்ணைக் கண்டான். ஆனால் அவள் அவனைத் தெரிந்து கொள்ளவில்லை. அவளுடைய வீட்டாரிடமிருந்து சில விவரங்களைத் தெரிந்துகொண்டான். அவளுடைய தகப்பனார் உடல் நலிவுற்றபடியால் அவளை அழைத்துக்கொண்டு வந்து இங்கே விட்டுவிட்டு உயிர் நீத்தார். கலங்கரை விளக்கின் காவலன் அவளுடைய சகோதரர் என்று தெரிந்தது. முதலில் அவளுக்குச் சகோதரன் - சகோதரி யாரையும் நினைவிருக்கவில்லை. மறுபடியும் ஒருதடவை கால் தவறிக் கடலில் விழுந்து காப்பாற்றப்பட்ட பிறகு அவர்களையெல்லாம் அவளுக்கு நினைவு வந்தது. அவள் கர்ப்பவதியாயிருக்கிறாள் என்பதை மற்றவர்கள் தெரிந்துகொண்டார்கள். அதை அவளும் உணர்ந்து பெரும் பீதியில் ஆழ்ந்தாள். கோடிக்கரைக் குழகர் கோவிலுக்கு அடிக்கடி சென்று அங்கே கைங்கரியம் செய்துகொண்டிருந்தாள். கருத்திருமன் எவ்வளவுதான் முயன்றும் அவனை அவள் இப்போது கண்டு கொள்ளவில்லை.

கோடிக்கரையில் இருந்தபோது அந்த ஊமைப் பெண்ணின் தங்கையை அவன் சந்தித்தான். அவளும் ஊமை என்று அறிந்து அவள் பேரில் பரிதாபம் கொண்டான். அவளை மணந்து கொண்டு வாழவும் எண்ணினான். அதற்கு முன்னால் பாண்டிய மன்னரிடம் போய்த் தகவல் தெரிவித்துவிட்டு வர விரும்பினான்.

இச் சமயத்தில் சோழ சக்கரவர்த்தி கண்டராதித்தரின் பட்டத்து அரசியும் சிவபக்தியில் சிறந்தவருமான செம்பியன் மாதேவி கோடிக்கரைக்குக் குழகர் கோவிலுக்குச் சுவாமி தரிசனத்துக்கு வந்தார். அங்கே அந்த ஊமைப்பெண் மந்தாகினியைக் கண்டு அவளைத் தம்முடன் அழைத்துச் சென்றார். அவளுடன் அவள் தங்கை வாணியும் போய்விட்டாள்.

கருத்திருமன் பாண்டிய நாடு சென்றான். அங்கே பாண்டிய மன்னர் போர்க்களம் சென்றிருப்பதாக அறிந்தான். போர்க்களத்தில் சென்று பாண்டிய மன்னரைச் சந்தித்தபோது, அவர் அவனை இலங்கைக்கு மீண்டும் போய் இலங்கை அரசனிடம் ஓலை கொடுத்துவிட்டு வரும்படி கூறினார். திரும்பி வரும்போது மறு

படியும் அந்த ஊமைப் பெண்ணை அழைத்து வருவதற்கு ஒரு முயற்சி செய்யும்படியும் தெரிவித்தார்.

கருத்திருமன் இலங்கையிலிருந்து திரும்பிப் பழையாறைக்குச் சென்றான். வாணியின் நினைவு அவன் மனத்தை விட்டு அகலவில்லை. முக்கியமாக அவளைச் சந்திக்கும் ஆசையினாலே அவன் பழையாறைக்குப் போனான். ஆனால் அங்கே அவளைக் கண்ட போது அவன் திடுக்கிட்டுத் திகைத்துப் பிரமித்துப் பயங்கரமடையும்படி நேர்ந்தது. அருணோதய நேரத்தில் அவன் அரசலாற்றங்கரை வழியாகப் பழையாறையை நெருங்கிக் கொண்டிருந்தபோது, ஆற்றங்கரை ஓரத்தில் பெண் ஒருத்தி குனிந்து குழி தோண்டிக் கொண்டிருப்பதைக் கண்டான். அது கூட அவனுக்கு அவ்வளவு வியப்பளிக்கவில்லை. அவளுக்குப் பக்கத்தில் துணி மூட்டை ஒன்று கிடந்தது. அதற்குள்ளேயிருந்து ஒரு மிக மெல்லிய குரல், - சின்னஞ்சிறு குழந்தையின் அழுகைக் குரல் கேட்டது.

எந்தச் சண்டாளப் பாதகி உயிரோடு குழந்தையைப் புதைப்பதற்கு ஏற்பாடு செய்கிறாள் என்ற ஆத்திர அருவருப்புடன் அவன் அருகில் நெருங்கிய போது, குழி தோண்டிய பெண் நிமிர்ந்தாள். அவள்தான் வாணி என்று கருத்திருமன் அறிந்துகொண்டான்.

"தம்பி! எனக்கு அப்போது எப்படி இருந்திருக்கும்? நீயே ஊகித்துக் கொள்!" என்றான் கரிய திருமால்.

"அதை ஊகித்துக் கொள்கிறேன். அப்புறம் கதையைச் சொல்!" என்றான் வந்தியத்தேவன்.

"அப்புறம் நடந்ததைச் சொல்ல இயலாது. அரச குலத்தைச் சேர்ந்தவர்கள் காதிலேதான் சொல்லலாம்! நான் மட்டும் அப்போது பழையாறைக்குப் போயிராவிட்டால் எனக்குப் பின்னால் நேர்ந்த கஷ்டங்கள் ஒன்றும் நேராமற் போயிருக்கும்!" என்றான் கருத்திருமன்.

"அப்படியானால், கிளம்பு! நேரே அரச குலத்தைச் சேர்ந்தவர்களிடம் போய்ச் சொல்லலாம்!" என்று கூறி நகைத்துக் கொண்டே வந்தியத்தேவன் அங்கிருந்து எழுந்தான்.

கருத்திருமனையும் அழைத்துக் கொண்டு பொக்கிஷ நிலவறையை அணுகினான். அங்கே அப்போது யாரும் இல்லை. நிலவறைக் கதவு பெரிய பூட்டினால் பூட்டப்பட்டிருந்தது. ஆனால் தெரியாதவர்கள் கண்டுபிடிக்க முடியாதபடி அமைக்கப்பட்டிருந்த அதன் உட்கதவை வந்தியத்தேவன் அழுத்தியதும் திறந்துகொண்டது. இருவரும் உள்ளே புகுந்து உட்புறம் தாளிட்டுக்கொண்டார்கள்.

வழியில் பொன்னும், மணியும், முத்தும், நவரத்தினங்களும் குவித்து வைத்திருந்த இடத்தில் வந்தியத்தேவன் பிரவேசித்தான். கருத்திருமனிடம், "உன்னுடைய ரோஹணநாட்டு மலைக்குகையில் இவ்வளவு செல்வங்கள் உண்டா?" என்று கேட்டான். "இதைவிட நூறு மடங்கு உண்டு!" என்று சொன்னான் கரியதிருமால்.

வந்தியத்தேவன் சிலதங்கக் காசுகளை எடுத்து மடியில் வைத்துக் கட்டிக் கொண்டதும் மறுபடியும் கிளம்பினார்கள். நிலவறைப் பாதை வழியாக வந்தியத்தேவன் முன்னால் சென்றான். மதில் சுவரில் அமைந்திருந்த இரகசியக் கதவையும் திறந்தான். அங்கே இப்போது காவலன் யாரும் இருக்கவில்லை. வெளியிலே முதலில் தலையை மட்டும் நீட்டி எட்டிப் பார்த்தான். வடவாற்றில் வெள்ளம் இரு கரைகளையும் தொட்டுக் கொண்டு சென்றது. வெகு தூரத்தில் தீவர்த்தி வெளிச்சம் தெரிந்தது. அந்த இடத்தில் அருகாமையில் யாரும் இல்லை என்று தெரிந்துகொண்ட பிறகு வந்தியத்தேவன் வெளியே வந்தான். கருத்திருமனும் வந்த பிறகு கதவைச் சாத்தினான். வடவாற்றை எப்படிக் கடப்பது என்று யோசித்துக் கொண்டிருந்தபோது பக்கத்தில் சாய்ந்திருந்த மரத்தடியில் படகு ஒன்று மரத்தின் வேர்களில் மாட்டிக் கொண்டு நின்றது தெரிந்தது.

(தொடரும்)



# மாயமான மணப்பெண்!

என்னுடைய அழகு நிலையத்துக்கு ஓர் இளம் பெண், அவரது அம்மா, மாமியாருடன் வந்திருந்தார். மறுநாள் அந்த இளம் பெண்ணுக்குத் திருமணம். முந்தைய நாள் வரவேற்புக்காக அலங்கரிக்க வந்திருந்தார்கள். அடுத்த ஒரு மணி நேரத்தில் மணப்பெண் ரெடி. பணம் பெற்றுக் கொண்டு மணமகளைத் தேடினால்... ம்ஹூம், காணவில்லை! எல்லோருக்கும் 'திக்'கென்றாகி விட்டது.

'பாத்ரூம் சென்றிருப்பாரோ' என்று தேடினால் அங்குமில்லை. அருகிலேயே கடல். அடிக்கடி அங்கு தற்கொலை நடக்கும். மனசு கேட்காமல் அங்கெல்லாம் தேடியும் பயனில்லை. அன்று இரவு முழுவதும் எனக்குத் தூக்கமில்லை. திருமண வீட்டில் எப்படி இருந்திருக்கும்? மறுநாள் அவர்கள் வீட்டிற்குப் போன் செய்து கேட்டதும்தான் விஷயம் தெரிந்தது. அந்தப் பெண்ணுக்கு இந்தத் திருமணத்தில் விருப்பமில்லாமல் தனது காதலனுடன் சென்று திருமணம் செய்து கொண்டாரென்று! இப்போது அந்தப் பெண் கணவருடன் மகிழ்ச்சியோடு வாழ்ந்து கொண்டிருப்பாள் என்று நம்புகிறேன்.

– இலங்கை அழுக்கலை நிபுணர் நயனதாரா

– எம்

## அம்மாவுக்கு அழைப்பு...

தமிழ்நாடு அரசின் சிறந்த ஒளிப்பதிவாளருக்கான விருது திரைப்படக் கல்லூரி மாணவர் சிவகுமாருக்குக் கிடைத்துள்ளது. வள்ளுவர் கோட்டத்தில் நடந்த விருது வழங்கும் விழாவில் சிவகுமாரின் பெயர் அறிவிக்கப்பட்டதும், முதல்வர் காதில் சென்று கிசுகிசுத்தார் சிவகுமார். முதல்வர் தலையாட்டவும், தனது அம்மாவை அவர் மேடைக்கு அழைக்க, அவர் மேடை ஏறி வந்தார். பயங்கர கைத்தட்டல்களுக்கிடையே அம்மாவும் மகனும் மகிழ்ச்சியில் விருது வாங்குவதைத்தான் படத்தில் பார்க்கிறீர்கள்.

– மௌலி

படம் : யோகா



## கறுப்பு மாவட்டம்!

● விலங்குகளின் தோலைப் பதனிட கந்தக அமிலம், சோடியம் டை குரோமைட் உட்பட ஐந்துவிதமான நச்சுத் தன்மை கொண்ட வேதிப் பொருட்கள் பயன்படுத்தப்படுகின்றன. தோல் தொழிற்சாலைகளின் மாசுபடுத்தும் பணி இதே வேகத்தில் தொடருமானால் வேலூர் மாவட்டத்தில் இன்னமும் ஐம்பது ஆண்டுகளில் விவசாய நிலங்கள் முழுவதும் பாழடைந்துவிடும்.

● தென் கிழக்கு ஆசியாவிலேயே அதிகமாக மாசுபடுத்தப்படும் ஆறு பாலாறுதான். எனவே வேலூர் மாவட்டத்தை, பாதிப்பின் அடிப்படையில் கறுப்பு மாவட்டமாக மத்திய அரசு அறிவித்துள்ளது.

– 'பசுமைத் தாயகம்' நடத்திய சுற்றுச் சூழல் மாநாட்டில் கேட்டவர் : கௌசி.

## களஞ்சியம்

மதுரை சின்னப்பிள்ளை பிரதமரிடம் பெற்ற விருதையடுத்து தமிழகத்தில் பல இடங்களில் அவர் சார்ந்த 'களஞ்சியம்' அமைப்புக்கு உறுப்பினர்கள் பெருகி வருகிறார்களாம். மதுரை டாக்டர் வாசிமலை என்பவரால் தொடங்கப்பட்ட 'தானம் அறக்கட்டளை'யின் மூலம்தான் இந்தக் 'களஞ்சியம்' உருவானது. தமிழ்நாடு, கேரளா, ஆந்திரா, பாண்டிச்சேரி ஆகிய மாநிலங்களில் சுமார் எழுபதாயிரம் பெண்கள் உறுப்பினர்களாகி இருக்கிறார்கள். இதில் ஒன்றான வைகை வட்டாரக் களஞ்சியத்தில் சிறு சேமிப்பு மூலம் ஐம்பது லட்சம் ரூபாய் சேர்த்துள்ளார்கள். உறுப்பினர்கள் இருபது ஆயிரம் ரூபாய் வரை கடன் பெற வசதி செய்யப்பட்டிருக்கிறதாம்.

– சிங்காரவடிவேல்






• எதிர்ப்பு...



• எஸ்ட்ராடா

# ஊழல் மன்னன்!

**கா**தல் மன்னனாகப் பல படங்களில் தோன்றியவர் அவர். ஆனால் ஊழல் மன்னன் என்று முத்திரை குத்தப்பட்டு வெளியேற்றப்பட்டிருக்கிறார். இன்றைக்கும் அவருக்கென்று ஒரு ரசிகர் கூட்டமே இருக்கிறது என்றாலும் பிலிப்பைன்ஸ் நாட்டுச் சரித்திரத்தில் ஜோசப் எஸ்ட்ராடாவை ஓர் அவமானச் சின்னமாகக் கருதுபவர்களின் எண்ணிக்கை அதிகமாகி வருகிறது.

ஊழல், பதவியைத் தவறாகப் பயன்படுத்தியது, பொதுநலநிதி ஒன்றிலிருந்து பெரும் சுய ஆதாயம் தேடிக் கொண்டது, அரசியலமைப்புச் சட்டத்தை மீறியது ஆகிய நான்கு குற்றங்களுக்காகப் பிலிப்பைன்ஸ் நாட்டு ஜனாதிபதி எஸ்ட்ராடா மீது தொடுக்கப்பட்ட வழக்குகளுக்கு ஒய்வளிக்கப்பட்டிருக்கிறது. அது தற்காலிகமாகவா? இல்லையா? என்பது விரைவில் தெரிந்துவிடும்.

அப்படியென்ன குற்றங்கள் செய்துவிட்டார் அவர்? இதோ அவரது ஒரு பானை ஊழலுக்கு ஒரு சோறு ஊழல். 'ஜோஸ் பெல்லார்டே' என்ற பெயரில் பல ஆவணங்களில் அவரே கையெழுத்திட்டிருக்கிறார். கற்பனையில் உருவான இந்தத் தொழிலதிபருக்காக அளிக்கப்பட்ட வங்கிக் கடன் பத்து மில்லியன் டாலர்களுக்கும் அதிகம். அந்த வங்கியின் உதவித் தலைவரான கிளாரிசா என்ற பெண்மணி நீதிமன்றத்தில் இதைக் கூறியபோது பலரும் உறைந்து போனார்கள்.

பாராளுமன்றத்தில் கொண்டுவரப்பட்ட நம்பிக்கையில்லாத் தீர்மானத்தில் தப்பிவிட்டாலும் (அவர் பதவியில் தொடரலாம் என்று 11 வோட்டுகளென்றால், விலக வேண்டுமென்ற வோட்டுக்களின் எண்ணிக்கை 10), அவரது மகிழ்ச்சி நீடிக்கவில்லை. காரணம் அவருக்கெதிராக மாறிவிட்ட ராணுவம்.

கௌரவமாகப் பதவி விலகாவிட்டால் உயிருக்கே ஆபத்து விளையலாம் என்பதை உணர்ந்ததும் தனது பதவியிலிருந்து விலகச் சம்மதித்திருக்கிறார்.

பிலிப்பைன்ஸ் நாட்டு சட்டப்படி உதவி ஜனாதிபதிதான் (அடுத்த தேர்தல்வரை) ஜனாதிபதியாக இருக்க முடியுமென்பதால், க்ளோரியா மெகபெல் இப்போது அந்நாட்டின் ஜனாதிபதியாகியிருக்கிறார். இந்தப் பெண்மணி எஸ்ட்ராடாவுக்கெதிராகத் திரண்ட ஊர்வலத்துக்குத் தலைமை தாங்கியவர்.

பெரும்பாலான மக்கள் எஸ்ட்ராடாவுக்கு வாக்களித்ததற்குக் காரணமே அவரது திரை இமேஜ்தான். பணக்காரர்களிடமிருந்து செல்வத்தைக் கொள்ளையடித்து ஏழைகளுக்கு அளிப்பது திரைப்படத்தில் இவருக்குக் கைவந்த கலை. நிஜவாழ்விலும் செல்வந்தர்களிடமிருந்து, தனது பதவியின் செல்வாக்கால் பணத்தை அள்ளி எடுத்துக் கொண்டிருக்கிறார். ஆனால் அதில் கொஞ்சமே கொஞ்சத்தை ஏழைகளுக்குக் கிள்ளி விட்டதோடு சரி.

அறுபத்து மூன்று வயதான எஸ்ட்ராடாவுக்குச் சமீபகாலமாகக் கடும் மூட்டுவலி. உடனிருந்து கவனித்துக் கொள்வதற்குப் பதிலாக இவரது மனைவிகள் தங்கள் வாரிசுகளுடன் வெளிநாடுகளுக்குப் பறந்து விட்டார்கள். வழக்கின்போது சாட்சியளிக்க வேண்டிய கட்டாயத்துக்கு உள்ளாக நேரிடுமே என்ற பயம்தான் காரணம்.

— குல்லூ

ஸ்ரீ சுந்தர விநாயகர் துணை உ ஸ்ரீகாமாட்சி அம்மன் துணை

காலை, மாலை காபி, 3 வேளை சைவ உணவு, ஊர்கள் சுற்றிப் பார்க்கும் டீலக்ஸ் பஸ் கட்டணம், தங்கும் செலவு உள்பட தூங்கும் வசதி (3Tier) இரயில் சுற்றுலாக்கள் சென்னையிலிருந்து புறப்படுகின்றன.

## டெல்லி - ஜெய்பூர் - காசி - கல்கத்தா - பூரி

ரூ 4990

23-2-2001, 9-3-2001, 20-3-2001, 12-4-2001 மற்றும் 11-5-2001 முதல் 18 நாட்கள் இரயில் சுற்றுலா மதுரா - ஆக்ரா - ஜெய்பூர் - டெல்லி - அமிர்தசரஸ் - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - திரிவேணி - காசி - சாரநாத் - வியாசகாசி - கயா - புத்தகயா - கல்கத்தா - பூரி - புவனேஷ்வர் - கோனார்க்

## நைனிட்டால் - மிசோரி - காசி - பம்பாய்

ரூ 4690

3-4-2001 மற்றும் 7-5-2001 முதல் 16 நாட்கள் மதுரா - ஆக்ரா - நைனிட்டால் - டெல்லி - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - டேராடூன் - மிசோரி - கெம்டிபால்ஸ் - திரிவேணி - காசி - பம்பாய்

## பத்ரிநாத் - கேதார்நாத் - காசி

ரூ 4790

13-5-2001 முதல் 14 நாட்கள் - மதுரா - ஆக்ரா - பிருந்தாவன் - டெல்லி - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - பத்ரிநாத் - கேதார்நாத் - திரிவேணி - காசி - சாரநாத் - வியாசகாசி - •பத்ரிநாத், கேதார்நாத் சென்றுவரும் பஸ் கட்டணம் உள்பட

## கல்கத்தா - டார்ஜிலிங் - காசி - நேப்பாள்

ரூ 5490

9-3-2001, 12-4-2001 மற்றும் 11-5-2001 முதல் 20 நாட்கள் கல்கத்தா - டார்ஜிலிங் - கயா - புத்தகயா - காசி - நேப்பாள் - திரிவேணி - ஹரித்துவார் - ரிஷிகேஷ் - டெல்லி - ஆக்ரா - மதுரா • நேப்பாள் சென்று வரும் பஸ் கட்டணம் உள்பட

23-4-2001 மற்றும் 18-5-2001 முதல் பம்பாய் - கோவா சுற்றுலா விஜயவாடா - ஹைதராபாத் - அஜந்தா - எல்லோரா - கிரிஸ்னேஷ்வர் - சீரடி - சனிசிங்கானப்பூர் - நாசிக் - திரியம்பகேஸ்வர் - பம்பாய் - கோவா - 12 நாட்கள் ரூ 4200

இலவசம் : மேற்கண்ட சுற்றுலாவில் ஏதேனும் ஒன்றில் பிப்ரவரி 20ம் தேதிக்குள் நபர் ஒன்றுக்கு டிக்கெட் அட்வான்ஸ் ரூ 2000 வீதம் செலுத்தும் 10 நபர் கொண்ட குழுவினர்க்கு 1 டிக்கெட் இலவசம்.

1. அந்தமான் போக, வர கப்பல் – 10 நாட்கள் (கப்பல் பயணம் போக, வர 6 நாட்கள்) முதல் வகுப்பு கப்பல் கட்டணம் சுற்றுலா 4 நாட்கள் அந்தமானில் சிறப்பான ஹோட்டல்களில் தங்கும் செலவு, சைவ சாப்பாடு, 2x2 பஸ்ஸில் ஊர் சுற்றிப் பார்த்தல் உள்பட நபர்1க்கு கட்டணம் ரூ. 11,500/- மட்டும்
2. (1 Way) கப்பல்; சென்னை திரும்பி வர விமானம் மேற்கண்ட செலவு உள்பட 7 நாட்களுக்கு ரூ. 12,500/-
3. இருபுறமும் போகவர விமானம் 5 நாட்களுக்கு ரூ. 14,500/-

ஒவ்வொரு ஆங்கில மாதமும் இரண்டாவது வார வெள்ளிக்கிழமை அந்தமான் சுற்றுலா புறப்படும்

பல அன்பர்கள் வேண்டுகோளுக்கு இணங்க சென்னையில் எமது கிளை கீழ்கண்ட முகவரியில் செயல்படுகிறது.

* L.T.C. & L.F.C. இரசீது தரப்படும்



விபரங்களுக்கு :
**K. கன்னையா,** பிரசாத் ஸ்டுடியோ,
86, நாகஸேல்வரன் வடக்கு வீதி,
கும்பகோணம். போன் : 433550



# சன் டிராவல்ஸ்

*சென்னை : சூர்யா கெஸ்ட் ஹவுஸ் – ரூம் நம்பர் 111 19 நடேசன் தெரு, (மாம்பலம் இரயில் நிலையம் எதிரில்) தி. நகர், சென்னை - 600 017. போன் : 4340969*

*மதுரை : 121, நேதாஜி ரோடு, மாடர்ன் ரெஸ்டாரெண்ட் எதிரில், மதுரை – 625 001. போன் : 741133, 744466 வீடு : 04549 – 21133 செல் : 98421 – 56668*

உரிமையாளர்: **K. சிதம்பரம், B.Sc, B.Ed; M.T.M.**

• யுக்தாமுகி

யுக்தா முகி

# வேட்டி சேலையில் ஊழல்!

ஒரே அறையில் சுஷ்மிதா சென், ஐஸ்வர்யா ராய், டயானா ஹைடன், லாரா தத்தா, யுக்தா முகி, ப்ரியங்கா சோப்ரா, என்று அழகுப் பட்டாளம் ஜொலிக்க, அசடு வழிந்தபடி அந்த அறைக்குள் நுழைந்தேன்.

"என்ன. லூக, ஜொள்ளுவிட்டுக்கிட்டே நீ பாட்டுக்கு உள்ளே வந்துட்ட? உன்ன யார் உள்ள விட்டது? செக்யூரிட்டி..."

"ஐயோ அம்மணி, என்னைத் துரத்திராதீங்க. நான் உங்களுக்கு ஐடியா கொடுக்கத்தான் வந்திருக்கேன். இப்ப எல்லாரும் அழகிப் போட்டின்னாலே வேஸ்ட், இதனால சமுதாயத்துக்கு லாபம் இல்லைன்னு பேச ஆரம்பிச்சிட்டாங்க. அந்த இமேஜை மாத்தறதுக்கு ஏதாவது என்னாலான ஹெல்ப் பண்ணலாமேன்னு பாத்தா இப்படி சிலுத்துக்கிறீங்களே?"

"வா லூக. இங்க வசதியா உக்காரு. நீ சொல்றது கரெக்ட் லூக. இப்ப இந்தியாவுல உலக அழகிப் பட்டம் வாங்கினவங்களை– கரிச்சிக் கொட்டறாங்க. ஏன்னே தெரியல."

ஐஸ்வர்யா ராய் தன் நீலக்கண்களை உருட்டிக் கொண்டு கவலையுடன் சொன்னபோது, சென்னை வெயிலில் கரையும் பால் ஐசாய்

• ஐஸ்வர்யா ராய்



• லாரா தத்தா



• சுஷ்மிதாசென்

உருகிவிட்டேன்.

"ஆமா. நீங்க அழகிப் போட்டில பதில் சொல்லும்போது எனக்கு மதர் தெரசா பிடிக்கும். நான் ஏழைக் குழந்தைகளுக்குச் சேவை செய்யப் போறேன். உலகத்துல உள்ள பசி பட்டினியை ஒழிக்கறதுதான் என் குறிக்கோள்னு பிலா விடறீங்க. உங்க தலைல கிரீடம் வச்சவுடனே சினிமாவுல நடிச்சிக் கோடிக் கணக்குல பணம் சம்பாதிக்க ஆரம்பிச்சிடறீங்க. இதுல சில பேரு இன்கம்டாக்ஸ் ரெய்டு வர அளவுக்குச் சம்பாதிச்சிடறாங்க." அங்கிருந்த ஒன்றிரண்டு அழகுத்தலைகள் இலேசாகக் குனிந்தன.

"சரி லூசு நம்ம வந்த வேலையை விட்டுட்டு வேற எதையோ பேசிக்கிட்டு இருக்கோமே. நாங்க அழகிப் போட்டில பெருமையாச் சொல்ற மாதிரி சமூக சேவை எதுவும் செய்யறதில்லைன்னு பத்திரிகைகள் எங்களைக் கிண்டல் பண்றதுக்குப் பதிலடி கொடுக்க ஐடியா கேட்டா நீ பாட்டுக்கு வேற எதையோ பேசிக்கிட்டு இருக்கியே?"

## உலக அழகிகளுக்கு லூசு தரும் ஐடியாக்கள்!

– ஐஸ்வர்யா ராய் கொஞ்சம் சூடாகவே கேட்டார். நானும் சூடாகவே பதில் சொன்னேன்.

"பத்திரிகைக்காரங்க சொல்றது கரெக்ட்தான். பேசாம நீங்க வாக்கு கொடுத்த மாதிரி சமூக சேவையே பண்ணிட்டா என்ன?"

ஐஸ்வர்யா ராய் தன் வைர மோதிரக் கையால் நறுக்கென்று குட்டினார். எனக்குச் சுகமான வலி. "என்ன விளையாடறியா, லூசு? இவங்கள்லாம் நினைச்சாலும் சமூக சேவை பண்ணலாம். ஒண்ணும் வெட்டி முறிக்கிற வேலை கிடையாது. ஆனா என்னைப் பாரு. ஹிந்தி தமிழ்னு ஒரு நாளைக்கு மூணு ஷெட்யூல் ஷூட்டிங். மூச்சு விட நேரம் கிடையாது. நடுவுல சல்மான்கானைப் பாத்து நாலு வார்த்தை பேசவே நேரம் கிடைக்க மாட்டேங்குது. இதுல சமூக சேவைன்னா நடக்கற காரியமா?"

மற்ற அழகிகளை விட தனக்குச் சினிமாவில் மவுசு அதிகம் என்ற அர்த்

தத்தில் ஐஸ்வர்யா ராய் பேசியதால் மற்றவர்கள் அவரை முறைத்தார்கள்.

இதுவரை பேசாமல் இருந்த டயானா ஹைடன் பேச ஆரம்பித்தார்.

"ஏய் ஐஸ், நீயாவது மும்பை, சென்னைன்னுதான் ஷூட்டிங்குக்கு அலைஞ்சிக்கிட்டு இருக்கே. ஆனா என் நிலைமையப் பாரு. முந்தா நேத்து நியூயார்க்ல ஒரு விளம்பரம் மாடலிங் முடிச்சேன். நாளைக்கு லண்டன்ல நடக்கற ஒரு எக்ஸிபிஷனுக்குப் போறேன். அப்புறம் சனிக்கிழமை ஆஸ்திரேலியாவுல ஒரு மதுபானக் கம்பெனிக்கான விளம்பரம்."

அதைத் தொடர்ந்து மற்ற அழகிகளும் கோபத்துடன் தங்கள் பிரதாபங்களை, தங்கள் டைட் ஷெட்யூலைப் பற்றி விலாவாரியாகச் சொல்ல ஆரம்பித்தார்கள்.

இப்போது அந்த இடம் ஏதோ மாநகராட்சி கவுன்சில் மீட்டிங் நடக்கும் இடம் போல அமளிப்பட்டது.

"அட ராமா. சமூக சேவை செய்யணும்னா உங்க வேலையைக் கெடுத்துக்கணும்னு யார் சொன்னது?"

"அப்ப நாங்க எங்க வேலையைப் பாத்துக்கிட்டே சமூக சேவை செய்யலாமா?"

கோரசாகக் கேட்டனர் அழகுக் குயில்கள்.

"தாராளமா. அதுக்கு நம்ம நாட்டு அரசியல்வாதிகள்கிட்டதான் நீங்க ட்ரெயினிங் எடுத்துக்கணும். இருந்தாலும் எனக்குத் தெரிஞ்சதைச் சொல்றேன்."

"ஏதாவும் முக்கியமான பண்டிகை நாட்கள்ள-தீபாவளி, பொங்கல், நியூ இயர்-நீங்க சமபந்தி போஜனம் சாப்பிடணும்."

"அப்படின்னா..."

"பண்டிகை நாட்கள்ள ஏதாவது ஒரு பெரிய கோவில்ல, இல்லேன்னா மண்டபத்துல ஏழை மக்களோட சரி சமமா உட்கார்ந்து சாப்பிடணும்."

அவ்வளவுதான்! சரமாரியாக வந்தன கேள்விகள்.

"ஓ! டின்னரா? அதுக்கு எப்படி டிரஸ் பண்ணணும்? ஃபார்மலா, இன்ஃபார்மலா? இல்லை நீச்சலுடையா? நாங்க அலங்காரம் பண்ணிக்கிட்டுப் போறதுக்கு எப்படியும் பத்து பதினைஞ்சி மணி நேரம் கொடுப்பாங்கல்ல?"

"டேபிள் போட்டு கத்தி ஃபோர்க் எல்லாம் கொடுப்பாங்கல்ல?"

"ஆமா அந்த டின்னரை எந்த கம்பெனி ஸ்பான்சர் பண்ணுது? பெப்சியா, இல்லை கோக்கா? பெப்சின்னா நான் வர முடியாது. ஏன்னா கோக் விளம்பரத்துல நடிக்கறேனே."

"டின்னர்னா நான் நாலு வேக வச்ச கேரட் துண்டுகள்தான் சாப்பிடுவேன். அதுக்கு மேல போடக்கூடாது."

"நான் மூணுதான் சாப்பிடுவேன்."

"பஃபே தானே?"

எல்லாக் கேள்விகளுக்கும் பதிலாக நான் தலையில் அடித்துக் கொண்டேன்.

"அடக் கண்றாவியே! நீங்க ஏழை மக்களோட சரி சமமா தரையில உக்காந்து வாழை இலையில சாம்பார், ரசம், மோர்னு தமிழ்நாட்டு சாப்பாடு சாப்பிடணும். அப்போ உங்களை போட்டோ பிடிச்சி பேப்பர்ல போடுவாங்க. 'இங்க பாரு உலக அழகியா இருந்தாலும் ஏழையோட சரிசமமா உட்கார்ந்து சாப்பிடறாங்களே'ன்னு மக்கள் உங்களைப் பாராட்டுவாங்க. இவங்க சமூக சேவைதான் சிறந்ததுன்னு வேறே சொல்லுவாங்க."

"ஐயோ தரையில உட்கார்ந்தா...? நோ சான்ஸ்... இந்த ட்ரஸ் போட்டுக்கிட்டு சேர்ல, கார்ல உட்காரதே கஷ்டம். தரையில உட்காரதை யோசிச்சே பார்க்க முடியாது."

"இந்த ஐடியா வேண்டாம் ஹாக."

"சரி விட்ருங்க. இந்த சமபந்தி போஜனத்துலயும் ஒரு கஷ்டம் இருக்கு. உங்களை மாதிரி உலக அழகிகள் சாப்பிட வரீங்கன்னு தெரிஞ்சதுன்னா பெரிய பெரிய பணக்கார ஜொள்ளர்கள் எல்லாம் உங்க பக்கத்துல உட்கார நான் நீன்னு போட்டி போட ஆரம்பிச்சிருவாங்க. நிஜ ஏழைங்களுக்கு அந்த விருந்துல இடம் கிடைக்காது."

"வேற ஐடியா சொல்லு ஹாக."

"இந்த சமூக சேவையில செய்ய வேண்டிய விஷயங்கள விட பேர் வாங்க வேண்டிய விஷயங்கள்தான் ஜாஸ்தி. மத்திய அரசும் மாநில அரசுகளும் ஏழை மக்களுக்காகப் பல திட்டங்களை அறிவிக்கறாங்க. அதுக்கெல்லாம் கவர்ச்சியாப் பேர் வைக்கறாங்க. நீங்க உங்க செல்வாக்கைப் பயன்படுத்தி ஏழை மக்கள் நல வாழ்வுத் திட்டங்களுக்கெல்லாம் உங்க பேர் வைக்கற மாதிரி பாத்துக்கணும்."

"எப்படி?"

"லாரா தத்தா சத்துணவு திட்டம். ப்ரியங்கா சோப்ரா வேலை வாய்ப்புத் திட்டம், சுஷ்மிதா சென் சுத்தக் குடிநீர் திட்டம். யுக்தா முகி இலவச வேட்டி சேலைத் திட்டம். ஐஸ்வர்யா ராய் இலவச கலர் டி.வி. திட்டம். இப்படியெல்லாம் பேர் இருந்துச்சின்னா யாரும் உங்களைக் குறை சொல்ல முடியாது

"சார் வீட்ல எலிங்க நடமாட்டம் அதிகமா இருக்கு."

"நீங்க கொடுக்கற ஐந்நூறு ரூபா வாடகைக்குப் புலிங்க நடமாட்டமா இருக்கும்!"

– சென்னிமலை சி.பி. செந்தில்குமார்

பாருங்க."

"நல்ல ஐடியாதான். நான் இப்பவே ஃபோன் பண்ணி ஏற்பாடுகளை ஆரம்பிக் கறேன்." டயானா ஹைடன் அவசரம் அவசர மாகத் தன் செல்ஃபோனை எடுத்து நம்பர் களை அமுக்கத் தொடங்கினார்.

"ஏய் அவசரக் குடுக்கை கொஞ்சம் இரு. லூசு சொல்ற ஐடியாவுல ஒரு வில்லங்கம் இருக்கு."

லாராதத்தா எரிச்சலுடன் சொன்னபோது எல்லோருமே அவரைக் கேள்வியுடன் பார்த் தோம்.

"இந்தத் திட்டங்கள் எல்லாம் நல்லபடியா நடந்து ஏழைகளுக்கு நல்லது நடந்தா நமக்கு நல்ல பேர் கிடைக்கும். எந்தத் திட்டம் நல்ல படியா ஊழல் இல்லாம நடந்துருக்கு? உதார ணமா இலவச வேட்டி சேலை திட்டத்துல ஏதாவது ஊழல் நடந்ததுன்னா பேப்பர்ல எப்படி நியூஸ் போடுவாங்க தெரியுமா? 'யுக்தா முகி வேட்டி சேலையில் ஊழல்.' இல்ல 'லாரா தத்தா சத்துணவு திட்டம் – குழந்தைகள் வாந்தி, மயக்கம்.' 'ஐஸ்வர்யா கலர் டீ.வியின் சாயம் வெளுத்தது.' அப்புறம் இப்ப இருக்கற நல்ல பேரும் போயிரும். ஏய் லூசு நாங்க நல்லா இருக்கறது உனக்குப் பிடிக்கலையா?"

இப்போது எல்லா அழகிகளும் என்னை அடிக்காத குறையாக முறைத்தார்கள். பர வாயில்லையே அழகிகள் கூட யோசிக்கிறார் களே. இனிமேல் இவர்களிடம் ஜாக்கிரதை யாகத் தான் பேச வேண்டும் என்று தீர்மானித் தேன்.

"இப்போ சமூக சேவைல நம்ம என்ன செய்யறோங்கறதை விட, விளம்பரம்தான் முக்கியம். அதனால இப்போ மெட்ராஸ் தெருவுல நீங்க குப்பை கூட்டற மாதிரி ஒரு நிமிஷ வீடியோ படம் ஒண்ணு எடுத்து வச்சிக் கங்க. நீங்க நடிக்கற கோகோ கோலா விளம் பரப் படம் போடும்போது அதையும் போடச் சொல்லிரலாம்."

"அந்தப் படத்தைக் காமிக்கணும்னா டீவில நிறையக் காசு கேப்பாங்களே. அதை கோகோ கோலா தருவாங்களா?"

"சரி அது வேண்டாம் மேடம். நீங்க விளம் பரப் படத்தைத் தயாரிக்கும் போதே உங்க சமூக சேவை நல்லா வெளிய தெரியற மாதிரி எடுக்கச் சொல்லுங்க."

"எப்படி?"

"நீங்க ஒரு கைல கோக்கோ கோலா பாட்டிலை வச்சிக்கிட்டு இன்னொரு கையில மெட்ராஸ் தெருக்குப்பையைக் கூட்டற மாதிரி விளம்பரம் பண்ணாங்கன்னா எப்படி இருக் கும்? கோக்குக்கும் விளம்பரம். அப்படியே நீங்க சமூக சேவை பண்றதும் பிரபலம் ஆயிரும். நீங்க எங்கேயோ போயிடுவீங்க."



"போ லூசு, நீயும் உன் ஐடியாவும்."

"இன்னும் ரெண்டே ரெண்டு ஐடியாதான் இருக்கு. அதை வேகமாச் சொல்லிட்டு நான் கிளம்பறேன்."

"சொல்லு லூசு."

"உங்களுக்குச் சமூகப் பிரக்ஞை இருக் குன்னு காமிக்க ஏதாவது கண்டன அறிவிப்பு விட்டுக்கிட்டே இருக்கணும். அப்போ நீங்க சமூக சேவை செய்யலேன்னு யாரும் சொல்ல மாட்டாங்க."

"எந்த மாதிரி விஷயத்தைக் கண்டனம் பண்ணி அறிவிப்புக் கொடுக்கணும்?"

"இதுவரைக்கும் யாரும் பாக்காத விஷயமா இருக்கணும்."

"ஃபார் எக்சாம்பிள்."

"ஒவ்வொரு ஊர்லயும் கார்ப்பரேஷன் காரங்க கொசு மருந்து அடிச்சி கொசுவைக் கொல்றது தப்பு. கொசுக்கும் மனசு இருக்கு. உணர்ச்சிகள் இருக்கு. ஆத்மா இருக்கு... பாவம் கொசுவுக்கு எவ்வளவு வலிக்கும்?"

"ஸ்டாப்! ஸ்டாப் திஸ் நான்சென்ஸ். எங் களுக்குச் சமூக சேவைல பேர் கிடைக்காட்டி யும் பரவாயில்லை. பைத்தியக்காரிங்கன்னு பேர் கிடைக்க வேண்டாம். நீ முதல்ல இடத்தைக் காலி பண்ணு. வாங்கடி கிளம்பு வோம்."

"ஐயோ இன்னும் ஒரே ஒரு ஐடியா இருக்கு அதைக் கேட்டுட்டுக் கிளம்புங்கத் தாயி."

"என்ன அது?"

"பேசாம நீங்கள்லாம் சேர்ந்து ஒரு கட்சி ஆரம்பிச்சிருங்க. அழகு மக்கள் சேவை முன் னேற்றக் கழகம்னு பேர் வச்சிரலாம். வேற எதுக்கு இல்லாட்டியும் உங்க அழகுக்காகவே உங்க பின்னால நிறையப் பேர் வருவாங்க. நீங்க ஜெயிச்சு ஆட்சிக்கு வந்துட்டா யாரும் 'இவங்க ஆட்சி நடத்தற அழகைப் பாரு'ன்னு சொல்ல மாட்டாங்க. 'அழகே ஆட்சி நடத்தற அதிசயத்தைப் பாரு'ன்னு சொல்லுவாங்க. அதுக்கப்புறம் நீங்க சமூக சேவை செய்ய லைன்னு யாரும் சொல்ல மாட்டாங்க..."

அழகிகள் 'கேட் ரன்' பிடித்தார்கள்!

**— வி.ஆர்**

அகில் கேட்ட கேள்வி ஒரு குட்டி ஏவுகணையாக மாறி யமுனாவின் மூளைப் பிரதேசத்தைத் தாக்க, அவள் நிலைகுலைந்தாள். உள்ளுக்குள் பூகம்பம் நிகழ்ந்து கொண்டிருந்தாலும் அது வெளியே தெரியாதபடிக்கு உதட்டுக்கு ஒரு ரெடிமேட் புன்னகையைக் கொடுத்தாள்.

"பார்த்திங்களா தப்பா புரிஞ்சுகிட்டீங்க..."

அகிலின் நெற்றிப் பரப்பில் இப்போது இலேசாய் ஒரு வியப்புக் கோடு உற்பத்தியாயிற்று.

"நான் தப்பா புரிஞ்சுகிட்டேனா...?"

"பின்னே... டாய்லெட் பேசின் குழாயில் தண்ணி நிக்காம சொட்டிகிட்டேயிருந்தது. அதைச் சரி பண்றதுக்காக டாய்லெட்டுக்குள்ளே போனேன். ஃபோன் வந்தது. ரூம்ல யாரும் இல்லாததனால நான் கார்ட்லஸ்ஸை எடுத்துப் பேசிக்கிட்டே டாய்லெட்டுக்குள்ளே போய்ட்டேன். ஃபோன்ல பேசிக்கிட்டே குழாயையும் சரி பண்ணிட்டேன். டூ இன் ஒன்."

"ஓ...!" என்ற அகிலின் உதட்டில் ஒரு மினி புன்னகை ஜனித்தது. "இருந்தாலும் இனிமேல் கார்ட்லஸ் டெலிஃபோனை டாய்லெட்டுக்குள்ளே கொண்டு போகாதே... உன்னோட மாமனாருக்குப் பிடிக்காத பல விஷயங்களில் இதுவும் ஒண்ணு. நான் காலேஜில் படிச்சிட்டிருக்கும்போது ஒருநாள் டாய்லெட்டுக்கு நியூஸ் பேப்பரையும் கையோடு கொண்டு போய்ட்டேன். நான் டாய்லெட்டிலிருந்துத் திரும்பியதும் அப்பா என்னைக் கூப்பிட்டார். எதிர்ல போய் நின்னேன். 'பளார்'ன்னு ஒரு அறை விட்டார். நான் பொறி கலங்கிப் போய்ப் பார்க்க அவர் கோபமா சொன்னார். 'என்னடா பார்க்கிறே, சரஸ்வதிக்கு 'அட்சர ரூபிண்யை'ன்னு பேர். அந்த சரஸ்வதி எழுத்துக்கள் ரூபத்துல எந்த வடிவத்துல இருந்தாலும் அது நியூஸ் பேப்பராயிருந்தாலும் சரி, ஒரு வாரப் பத்திரிகையாயிருந்தாலும் சரி, அதை டாய்லெட்டுக்குள்ளே கொண்டு போறது சரஸ்வதிக்கு நாம் செய்யற அவமரியாதை. டாய்லெட்டுக்குத் தேவையில்லாத எந்த ஒரு பொருளும் உள்ளே போகக் கூடாது. இது மூடத்தனமா உனக்குப் படலாம். ஆனா இது மடத்தனம் கிடையாது."

"என்னங்க... இது..! இது ஒரு சின்ன விஷயம். இதுக்குப் போய் இவ்வளவு பெரிய காலட்சேபம் பண்ணணுமா...? இனிமே கார்ட்லஸ் டெலிஃபோனை எடுத்துக்கிட்டு டாய்லெட்டுக்குள்ளே போகாதே'ன்னு ஒரு வார்த்தை சொன்னா போதாதா...?"



# 5

# மூடுபனி நிலவு



''சரி...! இவ்வளவு காலையில் யார் உனக்கு ஃபோன் பண்ணினாங்க...?''

"சரண்."

''உன்னோட பழைய ஆபீஸ் கொலீக்?''

"அவனேதான்...! பஞ்சமுக ஆஞ்சநேயர் கோயில்ல இன்னிக்கு ஏதோ விசேஷமாம். வர்றியான்னு கேட்டான். அத்தையும் மாமாவும் வெளியே போயிருக்காங்க. வந்ததும் கேட்டுட்டு உனக்கு ஃபோன் பண்றேன்னு சொல்லிட்டேன்."

"சரி.... டிஃபனை எடுத்து வை. ட்ரஸ் பண்ணிட்டு வந்துடறேன்."

அகில் மாடியறையை நோக்கிப் போக யமுனா சமையலறைக்கு வந்தாள். புழுக்கமான மனசுக்குள் இப்போது காற்று வீசியது. இனி இப்படிப் பட்ட முட்டாள்தனங்களையெல்லாம் செய்யக் கூடாது.

சமையலறையில் ஹரிதாவும் சௌம்யாவும் கோடீஸ்வரன் நிகழ்ச்சியை நடத்திக் கொண்டிருந்தார்கள்.

''இந்த கேள்விக்குக் கோடீஸ்வரன் முத்திரையைப் பயன்படுத்துறியா...?''- இது சௌம்யா.

''வேண்டாம்! அண்ணியைப் பயன்படுத்திக்கிறேன்'' இது ஹரிதா.

"சரி... பயன்படுத்திக்கோ..."

ஹரிதா யமுனாவை ஏறிட்டாள்.

"அண்ணி..."

"சொல்லு..." தோசைக்கல்லை ஸ்டவ்வில் ஏற்றிக் கொண்டே தலையசைத்தாள் யமுனா.

''அக்கா சௌம்யாவைக் கட்டிக்கப் போகிற மாப்பிள்ளைக்கு வழுக்கை முன்பக்கமா... பின்பக்கமா...?''

சௌம்யா பக்கத்தில் இருந்த கரண்டியை எடுத்தாள். "ஏய்... கேள்வியை மாத்தாதே... நான் கேட்ட கேள்வியைக் கேளு. "வெள்ளைத் தங்கம் என்று அழைக்கப்படுவது எது?''

"நோ... நான் இந்தக் கேள்வியைத்தான் கேட்பேன். எனக்கு இதுக்குத்தான் பதில் வேணும்... நீங்க சொல்லுங்கண்ணி, வரப் போகிற அத்திம்பேர்க்கு முன் வழுக்கையா...பின் வழுக்கையா...?''

சௌம்யா கையில் கரண்டியோடு

**ராஜேஷ் குமார்**

"பாரண்ணி இவளை.....?" என்று கத்திக் கொண்டே துரத்த ஹரிதா ஹாலுக்குள் ஓடினாள்.

'எவ்வளவு மகிழ்ச்சியான குடும்பம் இது...?' நினைத்த விநாடியே யமுனாவுக்கு மனசு ரயக் குண்டாய் கனத்துப் போயிற்று.

'லீலாகிருஷ்ணனின் விவகாரம், கோயில் போன்ற இந்த வீட்டுக்குள் நுழையாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்...!'

இன்ஸ்பெக்டர் பால்பாண்டியன் கொஞ்சம் நல்லவராக தெரிகிறார். வீட்டு நிலைமையைத் தெளிவாக எடுத்துச் சொல்லி...!

தோசைக்கல்லில் வார்த்த அடை மணத்தது. 'லீலாகிருஷ்ணனை எனக்குத் தெரியும். இரண்டு தடவை பார்த்து 'ஹலோ' சொல்லிக் கொண்டதோடு சரி. மற்றபடி அவனுக்கும் எனக்கும் எந்தவிதமான தொடர்பும் இல்லை. காதல் சுத்தமாகவே இல்லை என்று சொல்லி விடலாமா...?'

டைனிங் டேபிளில் தாளச் சப்தம் கேட்டது. தொடர்ந்து அகிலின் குரல்.

"என்ன டிஃபன் ரெடியா...?"

"இதோ... ஆச்சு..."

"சீக்கிரம்..."

யமுனா பரபரவென்று இயங்கிக் கொண்டிருந்த விநாடி–

ஹாலில் டெலிஃபோன் அடித்தது.

சௌம்யாவும் ஹரிதாவும் தோட்டத்துப் பக்கம் இருக்க, டைனிங் டேபிளைத் தட்டிக் கொண்டிருந்த அகில் எழுந்து போனான். ரிஸீவரை எடுத்து காதுக்குக் கொடுத்தான்.

"ஹலோ..."

மறுமுனையில் நிசப்தம். அகில் மீண்டும் குரல் கொடுத்தான்.

"ஹலோ..."

"டொக்..."

அடுத்த பக்கம் ரிஸீவர் சாத்தப்படும் சத்தம் கேட்டது. யமுனா படபடக்கும் இதயத்தோடு சமையலறையினின்றும் எட்டிப் பார்த்தாள்.

'ஒரு வேளை சரளாவோ?'

கேட்டாள்.

"ஃபோன்ல யாருங்க...?"

"தெரியலை. நான் 'ஹலோ'ன்னு சொன்னதுமே ரிஸீவரை வெச்சுட்டாங்க..."

யமுனாவின் இதயத்துடிப்பு உச்சத்துக்குப் போயிற்று. 'ஃபோனில் யார்... ஒரு வேளை இன்ஸ்பெக்டர் பால்பாண்டியனோ?' முகத்தில் எந்தவிதமான உணர்ச்சியையும் காட்டிக் கொள்ளாமல் சொன்னாள்.

"லைன் கட்டாகியிருக்கும்."

"எனக்கு அப்படி தோணலை. என் குரலைக் கேட்டதுமே வேணும்ன்னே ரிஸீவரை வெச்சுட்ட மாதிரி இருந்தது." சொல்லிக் கொண்டே அகில் டைனிங் டேபிளுக்கு வந்து உட்கார்ந்தான்.

யமுனா டிஃபன் பரிமாறி அகில் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது– ஃபோன் மறுபடியும் வாயைத் திறந்தது.

எழ முயன்ற அகிலை கையமர்த்தினாள் யமுனா. "நீங்க சாப்பிடுங்க... நான் போய்ப் பார்க்கிறேன்..." ரிதம் மாறிவிட்ட இருதயத் துடிப்போடு போய் ரிஸீவரை எடுத்தாள் யமுனா.

"ஹலோ..."

"யாரு யமுனாவா...?" ஒரு ஆண் குரல் கேட்டது. அது பால்பாண்டியன் குரல் அல்ல என்பதை உணர்ந்து கொண்ட யமுனா கேட்டாள்.

"நீங்க யாரு...?"

குரல் சிரித்தது.

"என்ன யமுனா... என்னோட குரலைக் கண்டுபிடிக்க முடியலையா? எத்தனை நாள் பீச்சில், ஹோட்டலில் பக்கம் பக்கமா உட்கார்ந்து மணிக்கணக்கா பேசியிருக்கோம்."

'ஸ...ஸாரி...! ராங் நெம்பர்...'

"ஓ....! உன் பக்கத்துல புருஷன் இருக்கானோ? சரி விஷயத்தைச் சொல்லிடறேன்... கேட்டுக்கோ. இன்னிக்குச் சாயந்திரம் ஏழு மணிக்கு எலியட்ஸ் பீச்சுக்குச் சிவப்புப் பனித் துளியோடு வந்துடு..."

"டொக்...!"

மறுமுனையில் அவன் ரிஸீவரை வைத்து விட–யமுனா ரிஸீவரை வைக்கத் தோன்றாமல் அப்படியே நின்றாள்.

'யாரிவன்...?'

'சிவப்பு பனித்துளி... என்ன அது...?'

**பிரசார மேடை :**

## பொற்கால ஆட்சி தொடரட்டும்!

ஒரு தகவலைச் சொன்னால் பலருக்கு ஆச்சர்யமாக இருக்கும். தமிழ்நாட்டில் தமிழைத் தாய் மொழியாகக் கொண்ட மக்களைவிட தெலுங்கைத் தாய் மொழியாகக் கொண்ட மக்கள் அதிகம். தமிழகத்தில் கிட்டத்தட்ட 42 சதவீத மக்கள் தெலுங்கைத் தாய் மொழியாகக் கொண்டவர்கள். ஆனால் அவர்கள் தமிழர்களோடு கலந்து விட்டார்கள். தமிழர்களின் கலாசாரத்தையும் பாரம்பரியத்தையும் கட்டிக் காப்பதில் துணை நிற்பவர்கள். தெலுங்கு பேசும் மக்கள் ஆண்ட பரம்பரைக்கு வாரிசுகள் நிறைய உண்டு. நீதிக் கட்சியின் தூணாக இருந்த ஸர்.பி.டி. தியாகராச செட்டியார் அந்தப் பரம்பரையைச் சேர்ந்தவர். ஆனால் இன்று தெலுங்கு பேசும் மக்களின் நிலை என்ன? நிலச்சுவான்தார்களாக இருந்த பலர் இன்று நிலங்களை இழந்து நிற்கிறார்கள். இதற்குக் காரணம் அவர்

களிடமிருந்து அடாவடியாக நிலப்பறிப்பு நடந்திருக்கிறது. அவர்கள் வீட்டுப் பெண்கள், மற்றவர்களுக்கு இளக்கார மாகப் போய்விட்டார்கள். நகரத்தில் இருக்கும் மக்கள் எங்களுக்கு நடக்கும் கொடு

**ஜி. காமாட்சி**
**நிறுவனர் – தலைவர்**
**திராவிடத் தெலுங்கர்**
**முன்னேற்றக் கழகம்**



மைகளை அறிய மாட்டார்கள். கடந்த 53 ஆண்டுகளாக தமிழகத்தில் நடந்த பல்வேறு கட்சி ஆட்சிகளால் எங்களுக்கு ஏதும் பயனில்லை.

இன்று எடுப்பார் கைப்பிள்ளையாக இருக் கிறார்கள் தெலுங்கைத் தாய் மொழியாகக் கொண்ட மக்கள். அவர்களுக்குச் சரியான வழி காட்ட, அவர்களுக்கு நடக்கும் கொடுமைகளைக் களைய, அவர்களது குரலை அரசுக்கு எடுத்துச் சொல்ல துவங்கியதுதான் திராவிடத் தெலுங்கர் முன்னேற்றக் கழகம்.

கடந்த நான்கு வருடங்களில் தமிழகத்தில் தொழில் புரட்சியே நடந்துள்ளது. இன்று இந்தியாவில் தொழில் வளர்ச்சியில் தமிழகம் முதலாவது இடத்தில் இருக்கிறது. கணினி மற்றும் அதன் மென் பொருட்கள் உற்பத்தி மற்றும் விற்பனையிலும் தமிழகம் சாதனை படைத்து வருகிறது. இப்படிப்பட்ட கலைஞர் ஆட்சி தொடர வேண்டும். இதற்குத் தோள் கொடுக்க எங்கள் கழகம் தயாராக இருக் கிறது. அதே சமயம் எங்களுக்கு உரிய மரியாதை யும், எதிர்பார்க்கும் இடங்களையும் கலைஞர் கொடுப்பார் என்று நம்புகிறோம்.

அஇஅதிமுக. ஆட்சியில் நடந்த அரா ஜக அக்கிரமச் செயல்களை மனத்தில் நிறுத்தி, அந்த ஆட்சி அமைய வேண்டுமா என்று மக்கள் தீர் மானிக்க வேண்டும்.

படம் : ராஜன்

---

அகில் டைனிங் டேபிளிலிருந்து அடை மெல்லும் வாயோடு கேட்டான்.

"யமுனா! ஃபோன்ல யாரு...?"

"ஏ...ஏதோ...ராங்க் நம்பர்..."

அகில் எழுந்து வந்தான். "ராங்க் நம்பரா?"

"ஆ....ஆமாங்க..."

"ஃபோன்ல ராங்க் நம்பர்ன்னா உனக்கு ஏன் இப்படி வேர்த்து வழியுது. நீ பொய் சொல்றே...!

அகிலின் முகத்தில் இப்போது அனல்.

ஜெனிஃபர், ரெஸ்டாரெண்டில் சுற்றும் முற்றும் பார்த்து சற்றுத் தொலைவில் நின்றிருந்த பேரரைக் கையசைத்துக் கூப்பிட்டதும் அந்த பேரர் வேகவேகமாய் நடைபோட்டு பக்கத்தில் வந்து நின்றார்.

"மேடம்..." ஆர்டர் புக்கைப் பிரித்து வைத் துக் கொண்டு பால்பாய்ண்ட் பேனாவைப் பிதுக்கிக் கொண்டார். "சொல்லுங்க மேடம்... என்ன வேணும்...?"

"உண்மை..."

"உண்மையா...?"

"யெஸ்... இவர்க்கு இப்போ ஒரு ஃபோன் கால் வந்ததே. அந்த ஃபோன்காலை மொதல்ல அட்டெண்ட் பண்ணினது நீங்கதானே...?"

"யெஸ்...மேடம்..."

"இவர் போட்டிருந்த ட்ரஸ்ஸை மென்ஷன் பண்ணி கூப்பிடச் சொன்னாங்க... இல் லையா...?"

"யெஸ்.... மேடம்...."

"ஃபோன்ல கேட்ட குரல் ஒரு பெண் ணோடதா இல்லை ஆணோடதா...?"

"ஆணோடது மேடம்..."

"ஆணா...?"

"யெஸ்..."

"நல்லா யோசனை பண்ணிச் சொல்லுங்க."

"இதுல யோசனை பண்ண என்ன இருக்கு மேடம். ஃபோன் பண்ணினது ஒரு ஆண் தான்."

"சரி...ஆர்டர் எழுதிக்குங்க, ரெண்டு மினி மீல்ஸ் வித் ஐஸ்க்ரீம்..."

பேரர் தலையசைத்து ஆர்டர் எழுதிக் கொண்டு நகர்ந்துவிட ஜெனிஃபர் தலையைக் குனிந்து மேஜையின் முனையைக் கிறீக் கொண்டே "ஸாரி...வருண்" என்றாள்.

"எதுக்கு ஸாரி...?"

"உன்மேல தேவையில்லாமே சந்தேகப் பட்டுட்டேன்."

"ஸோ...வாட்... எப்படியோ உனக்குச் சந்தேகம் தீர்ந்தா சரி... என்ன... ஒரு பேரர் கிட்டே போய் 'க்ராஸ் செக்' பண்ணியிருக்க வேண்டாம்... அதுல என்னோட தன்மானத் துக்குக் கொஞ்சம் நகங்கல்..."

"ஸாரிடா...." வருணின் முன் உச்சியில் புரண்ட முடியை இடது கையின் ஆட்காட்டி விரலால் சுண்டினாள் ஜெனிஃபர். "உனக்கு வேலை கிடைச்ச சந்தோஷத்தைக் கொண் டாட இன்னிக்குச் சாயந்திரம் ஒரு சினி மாவுக்குப் போலாமா...?"

கலக்கமாய் நிமிர்ந்தான் வருண்.

"இன்னிக்கா...?"

"ம்..."

"வேண்டாம்..."

"ஏன்..."

## லட்சத்துப் பத்தாயிரம் ரூபாய்க்கு ஒரு சைக்கிள்!

ஆம்! நம்புங்கள்! இந்த சைக்கிளின் விலை ஒரு லட்சத்துப் பத்தாயிரம் ரூபாய்! இதன் எடை ஆறு கிலோ. வேகத்தைக் கட்டுப் படுத்த பத்து கியர்கள் இருக்கின்றன. ஜப்பான் நாட்டுத் தயாரிப்பு இது. சைக்கிளைப் பிடித்து நின்று கொண்டிருக்கும் சிவா, திருவண்ணாமலை மாவட்டம் கீழ்நீக்குன்றம் கிராமத்தைச் சேர்ந்தவர்.



"இந்தியாவை 17 நாட்களில் சுற்றிவர ஆசை! அதற்குத்தான் இந்த காஸ்ட்லி சைக்கிள். என்னை ஊக்குவிக்கும் வகையில் எனக்காக இதை ஜப்பானிலிருந்து வாங்கிக் கொடுத்தவர் பேராயர் எஸ்ரா சற்குணம். அவர் செய்திருக்கும் இந்த உதவியை மறக்கவே முடியாது" என்கிறார்.

சிவாவின் சைக்கிள் பயணத்தில் என்ன தான் விசேஷம்? ஒரு மணி நேரத்திற்கு ஐந்து நிமிடம்தான் ஓய்வு. இரவு, பகல் பாராமல் ஓட்டுவார். நோ தூக்கம்; நோ சாப்பாடு. ராகிமால்ட்டும், இளநீரும்தான் ஆகாரங்கள். கின்னஸ் சாதனை புரியத் துடிக்கும் இந்த இளைஞரின் உடனடி தேவை ஒரு நல்ல வேலையாம்!

— ஸ்ரீநிவாசன்

ஒரு மைக்ரோ விநாடி யோசித்து அந்தப் பொய்யைச் சொன்னான் வருண்.

"எனக்கு வேலை கொடுத்த கம்பெனியில் சரியா நாலு மணிக்கு நான் இருக்கணும்..."

"எதுக்கு...?"

"மெடிக்கல் செக்கப்..."

"அப்பாயிண்ட்மெண்ட் ஆர்டரே உன்னோட கைக்கு வந்தாச்சு. அப்புறம் எதுக்கு இந்த மெடிக்கல் செக்கப்...?"

"எல்லாம் ஒரு ஃபார்மாலிடிதான். அவங்களை ஏன் எதுக்குன்னு காரணம் கேட்க முடியுமா...?"

இரண்டு மினி மீல்ஸ் ப்ளேட் மேஜைக்கு வந்தது. வருண் எழுந்தான்.

"நான் ஹேண்ட் வாஷ் பண்ணிட்டு வந்துடறேன்."

"பெரு விரல்ல இங்க் கறை. லிக்விட் சோப் போட்டுக்கோ வருண்.

வருண் தலையசைத்துவிட்டு ரெஸ்டாரெண்டின் வலதுபக்க மூலையில் இருந்த வாஷ்பேசின் தடுப்பை நோக்கிப் போனான்.

லிக்விட் சோப்பால் கையை நனைத்து வாஷ்பேசின் குழாயைத் திருப்ப முயன்ற விநாடி-

பக்கவாட்டு ஜன்னல் கம்பிகளில் அந்த பேரரின் முகம் தெரிந்தது.

"ஸார்..."

வருண் மலர்ந்தான்.

"ரொம்ப தாங்க்ஸ் பேரர்..."

பேரர் சிரித்தார். "என்னோட சர்வீஸ்ல இந்த ரெஸ்டாரண்ட்ல எத்தனை காதல் ஜோடிகளைப் பார்த்திருப்பேன். லேடீஸ் கிட்டே எப்படி பேசணும் ஜெண்ட்ஸ்கிட்ட எப்படி பேசணும்ன்னு எனக்கு நல்லாவே தெரியும் ஸார்."

"நன்றி..."

"இந்த நன்றியை எனக்கு டிப்ஸ் கொடுக்கும்போது காட்டுங்க ஸார்...."

பேரரின் தலை ஜன்னலில் மறைந்தது.

வருண் ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டு, ஜெனிஃபரிடம் மறுநாள் சந்திப்பதாகச் சொல்லி விடைபெற்று, தண்டையார் பேட்டையில் தன்னுடைய அறைக்குத் திரும்பி, யோசனையில் சில நிமிஷங்கள் படுத்து, பின் ட்ரஸ் மாற்றிக் கொண்டு உரிய பஸ்ஸைப் பிடித்து ஹோட்டல் பட்டர்ஃப்ளை போய்ச் சேர்ந்தபோது நேரம் சரியாய் நான்குமணி.

ரிசப்ஷன் கௌண்டரில் தொப்புளையும் புன்னகையையும் ஒரு சேர காட்டிய அந்த ரிசப்ஷனிஸ்ட் பெண் வருணைப் பார்த்ததும்-

"யெஸ்...." என்றாள்.

"ரூம் நெம்பர் த்ரீ ஃபோர் ஸெவன். நேம் பார்வதராஜகுமாரி..."

"பார்க்கணுமா?"

"யெஸ்..."

ரிசப்ஷனிஸ்ட் கம்ப்யூட்டரைத் தட்டி அக்காமடேஷன் சார்ட்டைப் பார்த்துவிட்டு கண்களில் வியப்பு காட்டினாள்.

"அப்படி யாரும் இங்கே இல்லையே?"

(தொடரும்)

# நான்வாலு புத்தகம்; காப்ஸ்யூல் கார்ட்டூன்!

'மை லைஃப் இஸ் அன் ஓபன் புக்'னு சொல்றவங்களை நம்பறது வழக்கமா ரொம்ப கஷ்டம். ஆனா விதிவிலக்கா ஒரு ஓபன் புக் வாழ்க்கை வரலாறு சமீபத்துல படிச்சேன். சாவி-85! குரு சாவிக்கு சிஷ்யர் ராணிமைந்தனோட முதல்தர காணிக்கைனு வர்ணிச்சா தப்பில்லே.

வேற எந்த புக்லயும் கிடைக்காத இரண்டு விஷயம் இதுல இருக்கு. ஒண்ணு வரலாற்று நாயகன் பாயின்ட் அஃப் வியூவிலிருந்து சொல்லப்பட்டாலும், மறைக்கப்படாத உண்மைகள். தான் பட்ட கோபதாபங்கள்; செய்த தவறுகள்; அடைந்த கடன்; அனுபவித்த, பயன்படுத்திய செல்வாக்கு- எதையும் பூசி மெழுகாம பட்பட்னு தேங்காய் உடைக்கிற மாதிரி சொல்லிருக்கார் சாவி! செம துணிச்சல் வேணும் இதுக்கு.

இரண்டாவது விஷயம்: படிக்கறதுக்கு ரொம்ப ரொம்ப ஈஸியான- வர்ணனை உவமையெல்லாம் புகுத்தாத- எளிமையான எழுத்து நடை. அன்டர்கரன்ட்டா அங்கங்க ராணிமைந்தனோட அட்மிரேஷன் ஃபர் சாவி தலைகாட்டத்தான் செய்யுது. ஆனா மிகைப்படுத்தலே.

தமிழ் ஜர்னலிஸம்ல மூணு தலைமுறை கண்ட பத்திரிகையாளர்ன்றதால முப்பதுகள்ள ஆரம்பிச்ச இன்னி வரைக்குமான பத்திரிகை உலகம் பத்தியும் ஒரு பார்வை கிடைக்குது இந்த புக்ல. பட், எனக்குத் தெரிஞ்ச ஒரு மிஸ்டேக்:

கல்கியிலேருந்து வெளியேறி சாவி 'வெள்ளிமணி' ஆரம்பிச்சப்போ 'கல்கி' கிருஷ்ணமூர்த்தி அதுல போய்ச் சேர்றதா சொன்னதாகவும் 'கல்கி'-சதாசிவம் இரண்டு பேருக்குமிடையே மனஸ்தாபம் இருந்தது இதற்கு ஒரு காரணம்னும் எழுதியிருக்கார் ராணிமைந்தன்.

ராஜாஜி முயற்சியினால 'கல்கி' மகனுக்கும் சதாசிவம் மகளுக்கும் கல்யாணம் நிச்சயமாகி மனஸ்தாபம் தீர்ந்துபோக, 'கல்கி' வெள்ளிமணிக்குப் போகற ஐடியாவை விட்டுட்டாராம்!

ஆனா, இப்போ கல்கி பப்ளிஷரா இருக்கிறவரைக் கேட்டா, தமது திருமணம் 'கல்கி' காலமான பிறகு 1957ல்தான் நடந்ததாச் சொல்றார். ஸோ, முன்னதாகவே மனஸ்தாபம் தீர்ந்ததற்கு வேற காரணம் இருந்திருக்கணும்.

சாவியோட முதல் கிரேட்னஸ் அவர் ஏராளமான பத்திரிகையாளர்களையும் எழுத்தாளர்களையும் உருவாக்கினார், இன்ஸ்பைர் பண்ணினார்ன்றதுதான். அவரோட எழுத்துக்குக் கூட அடுத்த ஸ்தானம் தான்ங்கற இம்ப்ரஷன் இந்த புக்லேயிருந்து கிடைக்கறது.

புத்தகத்தை அப்படியே காப்ஸ்யூல் பண்ணின மாதிரி இருக்கு பின் அட்டையில் அரஸ் வரைஞ்சிருக்கற கார்டூன். சாவி ஆன்






ரோலர் ஸ்கேட்ஸ்! அவர் சுறுசுறுப்புக்கும் பத்திரிகைக்குப் பத்திரிகை அவர் பாய்ஞ்ச பாய்ச்சலுக்கும் நல்ல இல்லஸ்ட்ரேஷன்!

இன்னிக்கு அவர் நினைவில்லாம படுத்த படுக்கையா இருக்கார்னு நினைக்கும்போது... இட் இஸ் வெரி ஸாட்!

ஒரு குவிஸ் வைச்சு, தூங்கிட்டிருக்கிற மன்ற உறுப்பினர்களை உலுக்கி எழுப்பப் போறேன்...

புது கார் வாங்கின ஒருத்தர் டெய்லி ஈவினிங் ஆபீஸ்லேருந்து வரும்போது ஐஸ்க்ரீம் கடையில நிறுத்தி விதவிதமா ஐஸ்க்ரீம் வாங்கிச் சாப்பிட்டாராம். வெனிலா ஃப்ளேவர் சாப்பிட்ட அன்னிக்கு மட்டும் கார் திரும்ப ஸ்டார்ட் ஆகாம மக்கர் பண்ணுமாம். ஏன்னு கண்டுபிடிக்க முடியாது உங்களால; ஸோ வெயிட் டில் நெக்ஸ்ட் வீக்!

— சுமி



குஜராத்தின் கோரங்களைப் பார்க்கும் போது, விதியின் ஆட்சி பற்றி உமர் கய்யாம் புலம்பியது ஞாபகம் வருகிறது. The moving finger writes; and having writ, moves on; not all your tears wash out a word of it என்றார் அந்தப் பாரசீகக் கவி.

ஏதுமறியாத குழந்தைத் தன் தாய் எங்கே என்று கண்ணில் நீர் தளும்பத் தேடுவதும்; தரையிலே ஒரு தேசியக் கொடி எல்லார் காலிலும் மிதிபட்டுக் கசங்கிக் கிடப்பதும்; இடிபாடுகளுக்கிடையேயிருந்து சொற்பக் காயங்களுடன் மீட்கப்பட்ட ஒரு பெண் வெளியே வந்தவுடன் உணர்ச்சி வேகத்தில் ஒரு காவல் அதிகாரியைத் தாவி அணைத்துக் கொள்வதும்; கான்கிரீட் பலகையின் இடுக்கில் ஒரு மூதாட்டி தலையை நுழைத்து, 'சச்சி! சச்சி!' என்று யாரையோ கூப்பிட்டுப் பார்ப்பதும்; இடிந்து நொறுங்கிவிட்ட ஒரு வீட்டின் சுவரில் ஒரு சிறுமியின் போட்டோ மட்டும் விழாமல் தொங்கிக் கொண்டிருப்பதும்; ஏழைக் குடும்பங்கள் கூட்டம் கூட்டமாக ஊரை விட்டு நடந்தே வெளியேறிக் கொண்டிருப்பதும்; மனிதர்களாக இருந்தவர்கள்



• 'அப்பாவுக்காக...' விஜி

மூட்டைகளாகிப் போனதும்...

வழியும் கண்ணீரைத் துடைத்துக் கொண்ட பின் செய்யக்கூடிய ஒரே காரியம். அருகிலே யார் நிவாரண நிதி திரட்டுகிறார்களோ அவர்களுக்கு நம்மாலானதை அனுப்புவதுதான்.

மேற்கண்ட அவலங்களைப் பார்த்த பிறகு, Pulse-pounding music and psychedelic light உள்ள துள்ளல் டேயட்களையும், காதல் குறும்புகளையும் பார்க்கும் 'மூட்' போயே போய்விட்டது. Diversion தேடி ரிமோட்டைத் தட்டிக் கொண்டேயிருந்த போது, எம்.டி.வி.யில் இந்திப் பாடல்களின் இடையே Chitto chat கொடுக்கும் முந்திரிப் பருப்பு வியாக்கியானங்கள் மொறுமொறுவென்று வந்து கொஞ்சம் முறுவல் வரவழைத்தன.

சுனில் ஷெட்டியும், சுஷ்மிதா சென்னும் ஆடிப் பாடும் காட்சியின் அடியில் - ரொம்பக் குளிர்போல இருக்கு... அதான் இப்படிக் கட்டிக்கிறாங்க. சுஷ் என்றால் சுனிலுக்குக் குஷ். இந்தக் காட்சி ஸ்விட்சர்லாந்தில் எடுக்கப்பட்டதாம்... உங்களுக்கு ஒரு விஷயம்

• சுஷ்

தெரியுமோ...? உலகத்திலேயே அதிகமாகச் சாக்லேட் சாப்பிடுகிறவர்கள் ஸ்விட்சர்லாந்துக்காரர்கள்தான். கனில் இப்ப ரென்னியைத் தத்து எடுத்துக் கொண்டிருக்கிறார். கனில் எங்கே போனாலும் கூடவே ரென்னி...

ரென்னி என்பது யார்? காதலியா? மனைவியா? தங்கையா? நாய்க் குட்டியா? தெரிந்து கொள்வதற்குள் சிக்கெனப் பறந்துவிட்டது சிட்டோ.

முதல் ஆச்சரியம். இறந்து போன விஜி போல் அல்லவா இருக்கிறார் இவர்? இரண்டாவது ஆச்சரியம். அதே கோழி கூவுது விஜிதான். தொடர் : 'அப்பாவுக்காக' (பொதிகை) விஜி நடித்த கடைசி டீவி தொடர் என்று

# மூட்டைகளாகிப்போன மனிதர்கள்!

முன்பே அறிவித்திருந்தார்களாம்.

விஜயசந்திரிகா அம்மா. விஜி மகள். ஹீரோயினாக வர வேண்டும் என்ற கனவுகள் கலைந்து, துணை நடிகையாகவே வாழ்க்கை கழிந்த தாய், மகளையாவது ஹீரோயினாக ஆக்கிப் பார்க்க வேண்டும் என்று லட்சியம் கொள்கிறாள். மகளுக்கோ படிக்க வேண்டும் என்று ஆசை. A clash of subtle emotions.

ஒரு தயாரிப்பாளரின் படத்தில் ஹீரோயினாக நடிக்கும் வாய்ப்புக் கிடைக்கவே, வேண்டா வெறுப்பான மகளை அழைத்துச் செல்கிறாள் அம்மா. 'புரொட்யூசர்கிட்டே சிரிச்சு சிரிச்சுப் பேசணும்' என்று அறிவுரை கூறும் அம்மாவிடம், 'சிரிச்சு சிரிச்சுப் பேசினால் பைத்தியம்னு நினைப்பாங்க' என்று எரிந்து விழும் விஜியைப் பார்க்கையில் தளிரிலே கருகிவிட்டதே ஒரு இளம் நடிகையின் வாழ்க்கை என்ற பரிதாபம் மேலிடுகிறது.

## ரிமோட்



சிரிக்க வைப்பதுதான் நையாண்டி தர்பாரின் நோக்கம் என்று யாரும் நினைத்து விடக் கூடாது என்பதற்காகவே சிந்தனைக்கான நிகழ்ச்சிகளும் வழங்குகிறார்கள் விஜய்யில். உதாரணம், இருதய நோய் நிபுணர் டாக்டர் சிவகடாட்சத்தின் பேட்டி.

அவர் சொன்னவற்றில் சில :

- கிராமவாசிகளைவிட நகரவாசிகளுக்கு மூன்று மடங்கு ஹார்ட் அட்டாக் வருகிறது.
- நீரிழிவுக்காரர்களுக்குத்தான் ஹார்ட் அட்டாக் அபாயம் அதிகம்.
- ஹார்ட் அட்டாக் ஒருமுறை வந்துவிட்டுப் போயிருக்கும். அது அவர்களுக்கே தெரிந்திருக்காது.

சும்மா செக் அப்புக்காக வந்த ஒரு பெண்மணிக்கு, ஏற்கெனவே ஒரு தடவை ஹார்ட் அட்டாக் வந்திருந்தது கண்டுபிடிக்கப்பட்டு, பேஸ் மேக்கர் பொருத்தப்பட்டதாக டாக்டர் சொன்னார்.

Variety is the spice of life என்பது உண்மையே என்றாலும் இதுபோன்ற பயனுள்ள, ஆனால் பயமுறுத்தலான பேட்டிகளை இரவு பத்து மணிக்குமேல் நடத்தக் கூடாதென்று தடை போட்டால் என்ன?

நாளொரு கோவில்; பொழுதொரு கும்பாபிஷேகம். Almost a daily happening. இருந்தாலும், ஜெயா டீவியில் பார்த்த ஒரு கும்பாபிஷேகக் காட்சி வித்தியாசமாக இருந்தது. (எந்தக் கோவில்?)

சம்பிரதாயப்படி கோபுரக் கலசங்களுக்கு அபிஷேகம் நடக்கிறது. குடம் குடமாய்ப் புண்ணிய தீர்த்தங்களை வர்ஷித்துக் கொண்டிருந்த சமயம், மேலே ஒரு ஹெலிகாப்டர் பறந்து வர, அதிலிருந்து புஷ்பமாரி பெய்தது. கண்ணுக்கினிய காட்சி. அத்தோடில்லை. அந்த ஹெலிகாப்டர் தாழப் பறந்த போது அதன் விசிறிக் காற்றில் அபிஷேகத் தீர்த்தம் சிதற, கீழே கூடியிருந்த பக்த கோடிகளின்மீது துளிகள் தெறித்தன. A good thing looks simple when it is done.

**வினோத்**

# குறு

இரவு மணி பத்து. காலிங்பெல் ஒலித்தது.

"சந்து, சந்து..." கூடவே அன்பரசனின் குரல்.

அன்பரசன் - என் அருமை (பாழாய்ப்போன) மச்சினன்.

சந்து, பொந்து என்று அவன் அழைப்பது என் மனைவி சகுந்தலாவை. அப்படிக் கூப்பிடாதே என்று பல தடவை சொல்லிப் பார்த்தாயிற்று. கேட்டால்தானே?

இந்த நேரத்தில் எதற்கு வந்திருக்கிறான்?

வேறு எதற்கு வந்திருப்பான்... நேற்று என்ன பேசி கழுத்தறுத்தானோ, முந்நூற்றி மூன்று நாட்களுக்கு முன்பு என்ன பேசி கழுத்தறுத்தானோ அதையே திரும்பப் பேசி கழுத்தறுப்பதர்குத்தான்.

டீ.வி.யில் ஏற்கெனவே ஒரு மெகா தலைவலி ஓடிக் கொண்டிருந்தது. இன்னொரு மெகா தலைவலியை வரவேற்க எழுந்து போனேன்.

"தூங்கிட்டியா நாகராஜ்... சாப்பிட்டாச்சா... சந்து தூங்கிட்டாளா... டீ.வி. சத்தம் கேட்டுச்சே..." கேள்விகளை அடுக்கிக் கொண்டே நுழைந்தான் அன்பரசன். பிராந்தி நெடி அவனை முந்திக் கொண்டு வீட்டிற்குள் புகுந்தது.

சகுந்தலாவைப் பார்த்தேன். தூங்கிவிட்டிருந்தாள். ஒரு வேளை தம்பியின் அறுவையிலிருந்து தப்பிப்பதற்காக பாவனை செய்கிறாளோ?



# க்கும் நெருப்பு

நாராயணி கண்ணகி

"சாப்பிடு அன்பு!"

"வேணாம்... தூக்க நேரம்... உங்களை எல்லாம் தொந்தரவு பண்றேன்!"

"அதெல்லாம் இல்லை!"

எவ்வளவு பெரிய பொய்!

"வாழ்க்கையே வெறுத்துப் போச்சு. ரயிலில் தலையைக் கொடுக்கலாம்னு முடிவு பண்ணிட்டேன். கடைசியா ஒரு தரம் உங்களை எல்லாம் பார்த்துட்டுப் போயிடலாம்னுதான் வந்தேன்!"

"துப்புக்கெட்ட மனுஷனாக இருக்கியே. சாகற அளவுக்கு என்ன பிரச்னை?"

சகுந்தலா . நிஜமாகவே தூங்கிப் போவாளே என்கிற கவலை எனக்குள் ஆக்கிரமிப்புச் செய்தது.

"எல்லாம் அவ மேட்டர்தான்!"

உன் கிட்ட வேற மேட்டர் ஏதுடா பண்ணி?

"ஏன் ஸ்ரீதேவி சாப்பாடு செய்யாம சதாய்க்குதா?"

"ஸ்ரீதேவியா... அவ பெயரைச் சொல்லாதே. ரத்தம் கொதிக்குது. எவன் அவளுக்கு அந்தப் பெயரை வச்சானோ, மூதேவி!" மெத்தையைக் குத்தினான். "நேத்து என்ன நடந்திச்சு தெரியுமா?"

"சொன்னாத்தானே தெரியும்."

"அவ வந்து சொல்லிட்டிருப்பான்னு நினைச்சேன். அவளுக்குத்தான் நீ ரொம்ப சப்போர்ட் பண்றியே. நீ சப்போர்ட் பண்ணுகிற தைரியம் ஜாஸ்தி அவளுக்கு!" சொல்லி விட்டு என்னைக் குற்றவாளி மாதிரி பார்த்தான்.

கோபம் வந்தது. அடக்கிக் கொண்டேன்.

"அவளுக்கு என்னைச் சுத்தமாகப் பிடிக்கலை. வேற எவன் கிடைப்பான்னு அலையறா. விதவிதமா டிரெஸ் பண்ணிக்கிட்டு விதவிதமாப் பூ வைச்சுக்கிட்டு. ரோட்ல போறவங்க வர்றவங்ககிட்டே எப்படி சிரிச்சு சிரிச்சுப் பேசறா தெரியுமா... ஆனால் என்கிட்டே பேசும்போது பார்க்கணுமே நெருப்பா எரிவா. இந்தக் கன்றாவியை எல்லாம் பார்த்துக்கிட்டு உயிரோடு இருக்கிறதை விட உயிரை மாய்ச்சுக்கறது மேல்!"

இரண்டாவது முறையாக மெத்தையை ஓங்கிக் குத்தினான். அரசியல் கட்சி ஒன்றின் தொண்டனாகச் சேர்ந்ததிலிருந்து அவன் கற்றுக் கொண்ட தேவையற்ற விஷயங்களில் இப்படி குத்திப் பேசும் கோமாளி வித்தையும் ஒன்று.

"எப்பவும் சொல்றதைத்தான் இப்பவும் சொல்றேன். இரண்டு பேரும் விவாகரத்து பண்ணிக்குங்க. குழந்தைகளோட அது பாட்டுக்கு அது பொழைச்சுக்கும், நீ பாட்டுக்கு நீ பொழைச்சிப்பே!"

"அது அவ பண்ற அசிங்கத்துக்கு லைசன்ஸ் தந்த மாதிரி ஆயிடும். அப்படி நான் விடமாட்டேன். அவ மூளியாகணும். பூ இல்லாம பொட்டு இல்லாம விளங்காமூஞ்சியா வளைய வரணும்!"

முற்றும் துறந்த யோகியைப் போல் முதுகுத்தண்டை நிமிர்த்தி உடம்பை நேராக்கி கண்களின் பார்வையைக் கூராக்கிப் பார்த்தான்.

எத்தனைக் குடிகாரர்களைப் பார்த்திருக்கேன்டா பரதேசி, என்கிட்டேயே பார்வையை நீட்டறியா?

"அன்பு, நான் ஒன்று சொல்றேன் கேட்டுக்க. உனக்கும் அதுக்கும் இடையில் நெருப்பாக எரியற பிரச்னை பொருளாதாரம் தான். அரிசி இருந்தா பருப்பு இல்லை, பருப்பு இருந்தா அரிசி இல்லைன்னு கஷ்டத்தில் இருக்கிற பொம்பளை புருஷன் கிட்டே கோபத்தைத்தான் காட்டுவா..."

மேற்கொண்டு சொல்ல விடாமல் இடைமறித்தான்.

"வீட்ல என்ன இல்லைங்கறே... ஒண்ணாந்தேதி ஆனா சகலமும் வாங்கித்தான் போடறேன். ஆக்கறதுக்கு அவளுக்கு நோகுது. உங்கிட்ட வந்து அது இல்லை இது இல்லைன்னு சொல்லிட்டானா? அதுக்காகவே வெட்டிப் போடணும் அவளை!" இரண்டு கைகளையும் மேலே உயர்த்திக் கரகம் ஆடினான்.

"அது வந்து சொல்லலை. நிலைமை

எனக்குப் புரியாதா? ஜவுளிக் கடையில் உனக்கு எவ்வளவு சம்பளம்?"

"தவுசன்ட்!"

இங்கிலீஷுக்குக் குறைச்சலில்லை.

"அஞ்சாயிரம் சம்பளம் வாங்கற எனக்கே எட்டாம பத்தாம போகுது... ஆயிரம் ரூபாய் என்னத்துக்குக் கட்டும்?"

"ஏன் கட்டாது? கூலி வேலை செய்றவங்க நிம்மதியா இருக்காங்க..."

இவன் கூலி வேலை செய்யாம முதலாளி வேலை செய்கிறானா? ஜவுளி கடையில் துணி எடுத்து காண்பிக்கிற வேலை.

"கூலி வேலை செய்யறவங்கன்னு யாரைச் சொல்றே?"

"வீடு கட்டுகிற மேஸ்திரி, சித்தாள்..."

"கட்டிட மேஸ்திரிக்கு ஒரு நாள் கூலி நூத்தி இருபது ரூபா. கையாளுக்கு எழுவது ரூபா. டவுனில் இன்னும் அதிகம். அது மட்டும் இல்லை. அவங்களுக்கு ஆடம்பர செலவும் குறைவு. நடுத்தர குடும்பம்னு வெளிக்காட்டிக்கிற உனக்கு ஆயிரம் ரூபாய் எப்படிப் போதும்? பேசாமல் பெண்டாட்டியோட சண்டை போடுவதை நிறுத்திட்டு காசைப் பெருக்கி முன்னேறுகிற வழியைப் பாரு!"

எனக்குக் கையை ஆட்டியோ நீட்டியோ மெத்தையில் குத்தியோ பேச வரவில்லை. அந்தக் கலை எனக்கு வராது போலிருக்கிறது. சீரியஸ் விஷயத்தைக்கூட அமைதியாகத்தான் சொல்கிறேன். ஆர்ப்பரிப்பு இல்லாமல். அதனாலேயே என் வாதங்கள் வலுவற்றதாகிவிடுகிறது.

"வீட்ல நிம்மதி வேணும், அப்பத்தான் முன்னேற முடியும். அந்த கேடு கெட்டவ என்னை முன்னேற விடமாட்டா!"

"அதெல்லாம் சும்மா! நிம்மதி மனசில் இருக்கு. அது போகட்டும், ஸ்ரீதேவி வேலைக்குப் போறதாகச் சொல்லுச்சே, அனுப்பறதுதானே? அதுவும் ஒரு ஆயிரம் ரூபாய் சம்பாதிக்குமில்லையா?

"நீ வேற! அவ சம்பாதிச்சா திமிர் ஜாஸ்தியாகும். அது கூடப் பரவாயில்லை, வேலைக்குப் போகிற இடத்தில் பல்லை இளிக்க ஆரம்பிச்சா இன்னும் கஷ்டம்!"

எனக்கு ஆத்திரம் கூடிற்று. அவனை அப்படியே நசுக்க வேண்டும் போல் துடித்தது.

"இப்படியெல்லாம் பேசாதப்பா, சரியில்லை. பெண்டாட்டியைப் புருஷன் நம்பணும், புருஷனை பெண்டாட்டி நம்பணும். உன் அக்காவை நான் சந்தேகப்பட்டா என்ன ஆகும்? ஒரு வாரம் பதினைஞ்சு நாள்னு வெளியூர் போறேன். நிம்மதியா இருக்க முடியுமா?"

"த்தூ..." துப்பினான். நல்ல வேளை எச்சில் இல்லை. சாராய நெடி போபால் விஷ வாயு மாதிரி தாக்கிற்று. "யாரோட யாரை ஒப்பிடறே? நேத்து அவ செஞ்ச காரியத்தை என் அக்கா செஞ்சிருந்தா வெட்டிப் போட்டிருப்பே... என்னால முடியலை. அதான் செத்துப் போயிடலாம்னு முடிவு பண்ணிட்டேன்."

"என்னதான் பண்ணுச்சு?"

"சொன்னா எனக்குத்தான் மானக்கேடு. ராத்திரி பன்னிரண்டு மணி இருக்கும்... நான் உள் ரூம்ல படுத்து தூங்கிட்டிருக்கேன். திடீர்னு பேச்சு சத்தம் கேட்டு முழிச்சுப் பார்த்தா, அவ எலக்ட்ரிக் மணியோட பேசிட்டிருக்கா! எனக்கு ஒரே அதிர்ச்சி! நீயே சொல்லு... ராத்திரி பன்னிரண்டு வரைக்கும் ஒரு குடும்பப் பொம்பளைக்கு வேற ஆளோட என்ன பேச்சு?

நான் பதில் சொல்ல முடியாமல் கரைந்துதான் போனேன்.

"நாகு... நாகு..." அழைத்தபடி உள்ளே வேகமாகவும் வியர்த்த முகத்தோடும் நுழைந்தான் என் பெரிய மைத்துனன். அன்பரசனுக்கு அண்ணன்.

"இந்த புறம்போக்கு இங்கதான் இருக்கானா...? அநியாயமா மூணு உயிரைப் போக்கடிச்சிட்டியேடா பரதேசி...!" கண்களில் கண்ணீருடன் என் பக்கம் திரும்பினான். "ஸ்ரீதேவி புள்ளைங்களுக்கு விஷம் தந்திட்டு அவளும் குடிச்சிட்டாப்பா! நேத்து ராத்திரி இந்த அயோக்கியன் என்ன பண்ணியிருக்கான் தெரியுமா? எலக்ட்ரிஷியன் மணி வாங்கித் தந்த சாராயத்தைக் குடிச்சிட்டு அவனை வீட்டுக்குக் கூட்டிட்டு வந்திருக்கான்! அப்புறம்...! இன்னிக்குச் சாயந்திரம்கூட என் சம்சாரத்துக்கிட்ட சொல்லி ஸ்ரீ தேவி அழுத்திச்சாம்...

சகுந்தலா அதிர்ந்து எழுந்தாள்.




ஒவ்வொரு வருடமும் சிறந்த ஹோட்டலுக்கான விருதை வழங்குகிறது மத்திய சுற்றுலாத்துறை. 99-2000ம் ஆண்டுக்கான தென் பிராந்திய சிறந்த இரண்டு நட்சத்திர ஹோட்டலுக்கான விருது சென்னை ஹோட்டல் பாண்டியனுக்கு ஜனவரி 25ம் தேதி வழங்கப்பட்டிருக்கிறது. இந்த ஹோட்டலுக்கு இந்த விருது இரண்டாவது முறையாம்.

— அப்பு

# KALKI SHOPPING PAGE



## “கல்கி ஷாப்பிங்”

பக்கங்களில்
விளம்பரம்
செய்ய ரூ.1250/-
மட்டுமே. செய்து
பயனடைவீர்!

47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை – 97.
போன்: 2345622, 2345623

## நியூ லைஃப் ரெய்கி (NEWLIFE REIKI)

எங்கும் நிறைந்துள்ள, நாம் சுவாசிக்கும் பிரபஞ்ச சக்தி (COSMIC ENERGY)யை பயன்படுத்தி, நம் உடல், மனம், உணர்ச்சி, ஆன்மா என்ற நிலைகளில் உள்ள இன்னல்களை நீக்கி, நிறைந்த மனதுடனும், ஆரோக்கியமான உடலுடனும் வாழ்க்கையை நடத்திச்செல்ல **நியூ லைஃப் ரெய்கி** பயின்று வாழ்வை வளமாக்கி பயன் பெறவும்.

ஞாபக சக்தி, அறிவாற்றல், செயல்திறன் இவைகளை வளர்த்து, வாழ்வில் உயர ரெய்கி சக்தி உதவுகிறது. நாம் இருக்கும் இடத்தை சக்தியூட்டவும் மற்றும் பல நிலைகளில் விருத்தியடையவும் ரெய்கி சக்தி உதவுகிறது.

சிகிச்சைக்கும், பயிற்சி பெறவும், விவரங்களுக்கும் அணுகவும்.

**R. SAMPATHKUMAR,**
Newlife Reiki Master,
Flat 12, Ashwin Apartments,
No.1, 5th Trust Cross Street,
Mandavelipakkam, Chennai-28. Ph:4615647

## வாஸ்து சாஸ்திரம்

உங்கள் இல்லம் மற்றும் வியாபார ஸ்தலங்களில் உள்ள அனைத்துப் பிரச்சனைகளையும் வாஸ்து சாஸ்திரம், ஜாதகம், வலம்புரிச் சங்கு பூஜைகளின் மூலம் தீர்த்து வைக்க அணுகவும்:–

### G.V.S.ராகவன்

(எண் கணித நவரத்தின வாஸ்து ஆலோசகர்)
புதிய எண். 26/பழைய எண். 60, கணபதி தெரு,
மேற்கு மாம்பலம், சென்னை - 600 033. போன்: 044-4726011 Cell: 0-98410-66828

வாஸ்து சாஸ்திரம் பார்க்க Rs. 500
எண் கணிதம், ஜாதகம் பார்க்க Rs. 300/-
வலம்புரிச் சங்குடன் பூஜை கட்டணம் உட்பட Rs1500/-

**வெளியூர் அன்பர்களுக்கு:**

ஜாதகத்துடன் ரூ. 300 மட்டும், வாஸ்து சாஸ்திரத்துக்கு வீட்டின் வரைபடம் எடுத்து அனுப்பி Rs. 500/– M/0 அல்லது DD மூலம் அனுப்பி வைத்தால் சகல பலனையும், பரிகாரங்களையும் எதிர்ப்பைப் பற்றியும் ஆலோசனைகள் எழுதி அனுப்பப்படும்.

WEBSITE: www.atozremedies.com Email: gvsraghavan@hotmail.com

இலவசம்!

இந்த விளம்பரத்தை 28.2.2001க்குள் கத்தரித்து எடுத்து வந்து ஜாதகம் பார்க்க வருபவர்களுக்கு தங்கள் பணப்பெட்டியில் செல்வம் கொழிக்க அபூர்வ ராசி கல் இலவசம்!

பாராளுமன்றத்துக்கோ, சட்டமன்றத்துக்கோ தேர்ந்தெடுக்கப்படும் அரசியல்வாதிகள், அடுத்த முறை போட்டியிடும் போது, தொகுதியில் செய்த வளர்ச்சிப் பணிகளைப் பட்டியலிட்டு வோட்டு கேட்பது வாடிக்கை. ''மனுஷன் ஏதோ செய்திருக்காருப்பா'' என்று மக்களும் சில சமயம் வோட்டுப் போடுவார்கள். ஆனால் இந்தக் கதை கன்னியாகுமரி மாவட்டத்தில் எடுபடாது. படிப்பறிவு அதிகமாக உள்ள நாஞ்சில் நாட்டில், மக்கள் கேட்கும் கேள்விகளில் அரசியல்வாதியின் டங்குவாரு அறுந்துவிடும்.

''உங்க வீட்டுப் பணத்திலா இவ்வளவும் செய்திங்க... எங்க பணம்தானே. இன்னும்கூட செய்திருக்கலாமே என்று போட்டு வளைப்பார்கள். அரசியல்வாதி சமாளித்து வருவதற்குள் போதும் போதும் என்றாகிவிடும். இதுதான் லார் கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள சூழ்நிலை. அந்த மாவட்டத்தில் ஒரு தொகுதியில் ஒருமுறை வெற்றி பெற்றவர் மறுமுறை வெற்றி பெறுவது அரிது. ஆனால் அமைச்சர், கடந்த 25 ஆண்டு காலத்தில் நடக்காத அளவுக்குக் கன்னியாகுமரி சட்டமன்றத் தொகுதியில் பல பணிகளைச் செய்திருக்கிறார். எனவே வரும் தேர்தலை நம்பிக்கையுடன் சந்திக்கவிருக்கிறார்'' என்று சொல்கிறார் சுற்றுலாத்துறை அமைச்சர் சுரேஷ்ராஜனின் உதவியாளர். குமரி சட்டமன்ற தொகுதியில் மட்டுமல்லாமல் மாவட்டம் முழுவதிலும் கடந்த ஐந்தாண்டு காலத்தில் பல சாதனைகளைச் செய்திருக்கிறார் அமைச்சர் என்று சொல்லிச் சிலிர்க்கிறார் அவர். குமரி தொகுதியில் அமைச்சர் செய்த பணிகள்தான் என்ன?

''குமரி மாவட்டத்தின் வாழ்க்கைக் கோடு நாஞ்சிலாறு - புத்தனாறு கால்வாய். இந்தக் கால்வாய் பல இடங்களில் தூர்ந்து போய் விட்டதால், கடைமடைப் பகுதிகளில் பாசனத்திற்குச் சோதனை. ஜெ. ஆட்சியில் தண்ணீர் இல்லாததால் பயிர்கள் கருகிவிட்டன. எனவே கழக ஆட்சியில் முப்பத்தெட்டு கோடி ரூபாய் செலவில் தூர் வாரும் பணிகள் நடந்து வருகின்றன. இதில் பதினெட்டு கோடி ரூபாய் அமைச்சரின் தொகுதியில் செலவிடப்படுகிறது. ஜெயலலிதா ஆட்சிக் காலத்



# மாறுமா

தில் முறைகேடுகள் காரணமாக முடங்கியிருந்த பொய்கை அணை வேலைகள் கலைஞர் ஆட்சியில் மீண்டும் துவங்கி அணை கட்டி முடிக்கப்பட்டுவிட்டது. தொகுதி முழுக்க எட்டு பாலங்கள். ஆறரை

கோடி செலவில் கட்டப்பட்டுள்ள கீழ்மணங்குடி - மேல் மணங்குடி பாலம் குறிப்பிடத்தக்கது. இதுதவிர தொகுதியில் எந்தக் கிராமத்திலும் குடிநீர்ப் பிரச்னை கிடையாது. கட்சி வித்தியாசம் பாராமல் எல்லா பஞ்சாயத்துத் தலைவர்களையும் கூப்பிட்டு, கூட்டம் போட்டுத் தேவைகளை அறிந்து நிதியுதவிக்கு ஏற்பாடு செய்கிறார். விதிகளைத் தவிர்த்து தொகுதி முழுவதும் 4000 பட்டாக்கள் கொடுத்திருக்கிறார் அமைச்சர். செண்பகராமன் புதூரில் சமத்துவபுரம் அமைக்கப்பட்டிருக்கிறது'' என்று பட்டியலிடுகிறார்கள் உடன் பிறப்புக்கள்.



''சுசீந்திரம் கோயில் குளத்தில் படகு விடுகிறேன் என்று ஐம்பது லட்சம் அரசுப் பணம் காணாமல் போனதுதான் மிச்சம்.''

அமைச்சரது சாதனைப் பட்டியலை கிண்டலடிக்கிறார் அ.தி.மு.க. ராஜ்ய சபை உறுப்பினரும் தோவாளையைச் சேர்ந்தவருமான தளவாய் சுந்தரம். ''நான் என் தொகுதி நிதியிலிருந்து ஒவ்வொரு கிராமத்துக்கும் செய்யத் துவங்கிய பிறகுதான் அமைச்சர் விழித்துக் கொண்டு எனக்குப் போட்டியாகச் செய்யத் துவங்கினார். சில இடங்களில் என்னுடைய திட்டங்களை முடக்கிவிட்டு, அவர் செயல்பட்டார். உதாரணமாக தோவாளையில் நான் சுடுகாட்டு கொட்டகைக் கட்டித்தர திட்டம் போட்டு, ஆட்சியாளரிடம் வேலைகளைக் கவனிக்கச் சொன்னேன். உடனே அமைச்சரும் அதே இடத்தில் சுடுகாட்டுக் கொட்டகை கட்டுவேன் என்று சொல்கிறார். தேர்தல் வருகிறதே என்று அவசர அவசரமாக கோ.சி. மணியைக் கொண்டு சில குடிநீர்த் திட்ட வேலைகளுக்கு அடிக்கல் நாட்டி இருக்கிறார். இவர் சுற்றுலாத் துறை அமைச்சராக இருந்தும் மாவட்டத்துக்கு எந்தப் பயனுமில்லை. சுசீந்திரம் கோயில் குளத்தில் படகு விடுகிறேன் என்று ஐம்பது லட்சம் அரசுப் பணம் காணாமல் போனதுதான் மிச்சம். அய்யன் திருவள்ளுவர் சிலை குமரிக்கு ஒரு கூடுதல் அட்ராக்ஷன்தான். ஆனால் டூரிஸம் வரைபடத்தில் விவேகானந்தர் பாறையை எடுத்துவிட்டு வள்ளுவரை மட்டும் போட்டிருக்கிறார்கள். வடநாட்டுச் சுற்றுலாப் பயணிகள் விவேகானந்தர் பாறைக்காகத்தான் குமரிக்கே வருகிறார்கள். இது தவிர லட்சக் கணக்கான பயணிகள் வரும் குமரி மிகவும் அலங்கோலமாகி வருகிறது. அந்த இடத்தை மேம்பாடு செய்ய மத்திய அரசு கொடுத்த தொகைக்கு இன்னமும் மாநில அரசு கணக்குக் கொடுக்கவில்லை. அமைச்சரும் கழகப் பிரமுகருமான அவரது உறவினரும் சேர்ந்து கட்சியைத் தங்கள் இஷ்டத்துக்கு நடத்திச் செல்வதால் லோக்கல் உடன் பிறப்புகளும் கோபத்தில் இருக்கிறார்கள்'' என்கிறார் தளவாய் சுந்தரம்.

# சரித்திரம்?

''ராஜ்ய சபா உறுப்பினர் நிதியிலிருந்து அதிக பட்சம் ஆறு கோடி ரூபாய்க்குத் தான் தளவாய் சுந்தரம் பணிகளைச் செய்திருக்க முடியும். ஆனால் எங்கள் அமைச்சர் 275 கோடி ரூபாய்க்கானப் பணிகளைத் தொகுதியில் நிறைவேற்றியிருக்கிறார். அதன் காரணமாக அவருக்கு வயிற்றுப் பொருமல் ஏற்பட்டுள்ளது. அதனால்தான் அமைச்சரைச் சாடுகிறார். சுசீந்திரம் குளத்தில் சுற்றுலாப் பயணிகளைக் கவர்வதற்காகப் படகு விட முயன்றது உண்மைதான். ஆனால் மக்களிடம் இருந்து ஆதரவு கிடைக்காததால் படகு சர்வீஸ் நிறுத்தப்பட்டது. அரசுக்குச்

செலவு இருபது லட்சம்தான். ஒரு முயற்சி செய்து பார்த்தோம். குமரியில் மண் பரி சோதனை நிலையம், கூட்டுறவு பயிற்சி நிலையம் ஆகியவற்றையும் கொண்டு வந்திருக்கிறார் அமைச்சர். அ.தி.மு.க. ஆட்சியில் திண்டுக் கல்லுக்குப் போகவிருந்த கால்நடை ஆராய்ச்சி நிலையத்தையும் மாவட்டத்திலேயே தக்க வைத்தார். இந்த சாதனைகளுக்கெல்லாம் உச்சமாகக் குமரியில் மருத்துவக் கல்லூரி 2002ம் ஆண்டில் வர இருக்கிறது. அதற்கான ஆயத்த வேலைகள் துவங்கிவிட்டன. குமரியில் மூன்றரை கோடி ரூபாயில், கழிப்பிடங்கள், சாலைகள் அகலப்படுத்துதல், பார்க்கிங் வசதிகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஜெயலலிதா ஆட்சியில்தான் செலவு செய்த தொகைக்கு மத்திய அரசுக்குக் கணக்குக் கொடுக்கவில்லை. அந்தக் கணக்கையும் நாங்கள் தான் கொடுத்தோம்" என்று சொல்கிறார்கள் அமைச்சரின் உதவியாளர்கள். ஒரு முறைக்குப் பலமுறை தொகுதியில் உள்ள அனைத்து கிராமங்களையும் சுற்றி வந்து விட்டாராம் அமைச்சர்.

பல மாற்றுக் கட்சிக்காரர்களை - குறிப்பாகத் த.மா.கா. பிரமுகர்களை - தன் பக்கம் இழுப்பதில் வெற்றி கண்டிருக்கிறார் அமைச்சர். அகத்தீஸ்வரத்தைச் சேர்ந்த த.மா.கா. பிரமுகர்களான தங்க நாடார், யூனியன் தலைவர் பிரேமலதா, துணைத் தலைவர் பகவதி ஆகியோர் அமைச்சரோடு நெருங்கிவிட்டார்கள். கடந்த நான்கரை ஆண்டு காலத்தில் கலைஞர் மூன்று முறை குமரிக்கு வந்த காரணத்தால் அரசின் கவனம் கொஞ்சம் கூடுதலாகவே குமரியின்மீது விழுந்திருக்கிறது. மாவட்டத்தில் கூட்டணி கட்சியான பா.ஜ.க. செல்வாக்கோடு இருப்பதால் கவலையின்றி இருக்கிறார் அமைச்சர். ஆனால் அதே சமயம் கிறிஸ்துவ மக்களின் புறக்கணிப்பும் பயமுறுத்துகிறது.



"அவர் நினைப்பதுபோல் வெற்றிக் கனியை அவ்வளவு சுலபத்தில் கைப்பற்ற முடியாது" என்கிறார் மார்க்ஸிஸ்ட் கட்சியின் மாவட்டச் செயலாளரான நூர் முகமது. "அவரது செயல்பாடு எதுவும் திருப்தியாக இல்லை. பொய்கை அணையை சாதனை என்கிறார். அது பொய்கை அணை அல்ல. 'பொய்' அணை. கலைஞர் திறக்கும்போதே அதில் பொட்டுத் தண்ணீர் கிடையாது. அதில் தண்ணீரும் தேங்காது. அதன் அமைப்பு அப்படி. குமரியைத் தவிர வட்டக்கோட்டை, திற்பரப்பு, உதயகிரி, இரணியல் ஆகிய இடங்களை நல்ல சுற்றுலாத் தலங்களாக அபிவிருத்தி செய்யலாம். ஆனால் இலாகா கைவசமிருந்தும் அமைச்சர் ஏதும் செய்யவில்லை. காமராஜ் மணி மண்டபம், அய்யன் திருவள்ளுவர் சிலை போன்றவற்றுக்கு இவர் காரணம் அல்ல. அதே போல் நாகர்கோயில் மருத்துவமனையில் சிடி. ஸ்கேன் கொண்டு வந்ததைச் சாதனை என்கிறார். அது வந்தபோது இவர் அமைச்சராக இருந்தார், அவ்வளவு தான்! தவிர, ரப்பர் தொழிற்சாலை கொண்டு வருவேன் என்றார். ஒன்றும் காணோம்" என்கிறார் அவர்.

இறுதியாக சில சந்தேகங்களுக்கு விளக்கம் பெற அமைச்சரைச் சந்தித்தோம். "நாங்கள் அமைக்க இருப்பது ரப்பர் தொழில் நுட்ப பூங்கா. முதல்வர் பதினான்கு கோடி ரூபாய் ஒதுக்கி இருக்கிறார், நிலம் கையகப்படுத்தும் வேலை நடக்கிறது. பொய்கை அணை திறக்கப்பட்டபோது அதில் நீர் இல்லையென்பதால் எதிர்காலத்திலும் நீர் தேங்காது என்று எப்படிச் சொல்ல முடியும்? வட்டக் கோட்டையை அபிவிருத்தி செய்ய இருபது லட்சம் செலவில் நிலம் கையகப்படுத்தப்பட்டிருக்கிறது. மாநில அளவில் பார்த்தாலும் கடந்த ஐந்தாண்டுகளில் சுற்றுலாப் பயணிகளின் எண்ணிக்கை இரண்டு மடங்காக உயர்ந்திருக்கிறது. இப்போது என் கவலையெல்லாம், மகாபலிபுரம் போன்ற சுற்றுலாத் தலங்களில் வெளிநாட்டுப் பயணிகளுக்கு டாலர் கணக்கில் நுழைவுக் கட்டணம் வாங்குவதை குறைப்பது எப்படி என்பதைப் பற்றித்தான். இது சம்பந்தமாக மத்திய அரசுடன் பேசிக் கொண்டிருக்கிறோம்" என்றார் சுரேஷ்ராஜன்.

குமரி சட்டமன்றத் தொகுதியில், ஒரு வெள்ளிவிழா கால வரலாற்றைப் பார்த்தால், ஒரு முறை வென்றவர் மீண்டும் வென்றதில்லை. ஆனால், அந்த சரித்திரத்தை சுரேஷ்ராஜன் மாற்றிக் காட்டுவார் என்று உறுதியாகச் சொல்கிறார்கள் உடன்பிறப்புக்கள்.

**- ப்ரியன்**

படம் : **ராஜன்**

S.K. Ads.

# ஸ்ரீராமபக்த ஹனுமான்

## 28

ராவண ஸம்ஹாரம் முடிந்து விட்டது. விபீஷணனுக்குப் பட்டமும் கட்டியாயிற்று. இனிமேல் அயோத்தி திரும்பி ஸ்ரீராம பிரான் ராஜ்யபாரத்தை ஏற்க வேண்டியதுதான். இந்தக் கட்டத்திலும் ஸ்ரீ ராம பக்த ஹனுமானுக்குத் தூதுப் பொறுப்பு தொடர்கிறது!

ஸ்ரீ ராமன் புஷ்பக விமானத்தில் இலங்கையை விட்டுப் புறப்படுகிறார். விபீஷணன், சுக்ரீவன், வானரவீரர்கள், அவர்களுடைய மனைவிமார் என எல்லோரையும் உடன் அழைத்துக் கொண்டு சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் செல்கிறார். வழியிலே தோன்றும் காட்சிகளை எல்லாம் சீதைக்கு விளக்கியபடி சென்று பரத்வாஜ முனிவரின் ஆசிரமத்தை அடைகிறார். அடைந்ததும், ஹனுமானை அழைக்கிறார் ஸ்ரீ ராமன்.

ராமபிரான் முன்பு கைகட்டி நிற்கிறான் ஹனுமான்.

"ஆஞ்சநேயா! இங்கேயிருந்து நேரே ச்ருங்கிபேரபுரம் செல். அங்கே என் தோழன் குகன் இருக்கிறான். நான் திரும்பி வந்து விட்டேன் என்று அவனிடம் சொல். அங்கிருந்து நந்திகிராமத்துக்குப் போ! அங்கே தம்பி பரதன் என் வரவை எதிர்பார்த்து காத்திருப்பான். நான் இலங்கையிலிருந்து திரும்பி விட்டேன் என்ற செய்தியை அவனிடம் சொல். நீ அச் செய்தியைச் சொல்கையில் அவன் முகக்குறிப்பையும் கண்டு அதன் மூலம் அவன் மனக் கருத்தையும் அறிந்து வந்து என்னிடம் சொல்ல வேண்டும்...."

ஹனுமான் உடனே புறப்பட்டு விட்டான். கேள்வியோ யோசனையோ அவனுக்குக் கிடையாது.

ஆனால் நமக்குக் கேள்வி எழுகிறது... யோசனை வருகிறது. எதற்காக பரதனின் முகக் குறிப்பை அறிந்து வரப் பணிக்கிறார் ஸ்ரீராமன்?

வால்மீகி ராமாயணத்திலே வரும் இந்தக் காட்சிக்கு ஓர் உரையாசிரியர் கூறியிருக்கும் விளக்கம் மிகப் பொருத்தமானது; மெய்சிலிர்க்க வைக்கிறது.

பரதனின் முகக்குறிப்பைக் கண்டால் அவன் எண்ண ஓட்டம் புரியும். ஒருக்கால், ஸ்ரீராமனிடம் தனக்குள்ள பக்தியே உயர்வானது என அவன் நினைப்பானேயானால், ஆஞ்சநேயனைக் கண்டு அவன் கர்வம் அடங்கட்டும்; அதே போல் ஹனுமான் தனது ராமபக்தியே உயர்ந்தது என எண்ணிக் கொண்டிருப்பானேயாகில் பரதனது ராமபக்தியை அவன் அறியட்டும்... இந்த நோக்கிலேதான் ஸ்ரீராமன், ஆஞ்சநேயனைப் பரதனிடம் தூதனுப்பினான்!

– இதுவே அந்த உரையாசிரியர் விளக்கம்! பரிபூரண பக்தி என்பதைத் தரம்பிரிக்க

### இளையபெருமாள் அணைத்த ஆஞ்சனேயன்

‘இளையபெருமாள்’ என்று போற்றப்படும் லக்ஷ்மணன் ஆஞ்சனேயரை ஆலிங்கனம் செய்யும் கோலத்தைக் காண வேண்டுமா? திருநெல்வேலி மாவட்டம் ஸ்ரீவைகுண்டம் என்ற ஸ்தலத்தில் இக் காட்சியைக் காணலாம். அங்குள்ள கள்ளப்பிரான் கோவிலின் முன் மண்டபத்தில் ஒரு கம்பத்தில் இளையபெருமாள் ஒரு கையால் ஹனுமானையும் மற்றொரு கரத்தால் அங்கதனையும் அணைத்து நிற்கும் கோலம் காணப்படுகிறது.

முடியாது என்பதற்கு இதைக் காட்டிலும் அழகான உதாரணம் காட்ட முடியுமா?

கம்பனும் அருணாசலக் கவிராயரும் பரதனிடம் ஹனுமான் தூது சென்றதற்கு வேறொரு காரணம் காட்டுகிறார்கள். ஸ்ரீ ராமன் பதினான்காண்டு களாகியும் வரவில்லையே என்ற துயரத்தில் அவன் அக்னியில் இறங்க யத்தனித்ததாகவும்



அதைத் தடுப்பதற்காகவே ஹனுமான் விரைந்து தூது அனுப்பப்பட்டதாகவும் சொல்கிறார்கள். எவ்வாறாயினும் ஆஞ்ச னேயனின் தூதுப் பணி ராமாயணத்தில் தொடர்ந்து நடைபெறு கிறது! பக்தனுக்கும் பர மனுக்கும் இடையே சதா தூது செல்லும் செல்வன் அவன் என்பதைக் குறிப் பால் உணர்த்தவே இப்படி யொரு பாத்திரப் படைப்பு உருவாகியிருப்பதாக -

கல்யாணபுரம் ஆராவமுதன்

## திருவெண்காடு ஆஞ்சனேயர்

கேரளாவில் தலைச்சேரிக்குக் கிழக்கே திருவெண்காடு என்ற ஸ்தலத்தில் ராமபிரான் சதுர்புஜத்தோடு காட்சியளிக்கிறார். உடன் சீதாபிராட்டியோ, லக்ஷ்மணனோ இன்றித் தனியாக சேவை தரும் இந்த ராமபிரானுக்குத் தன் பக்தனான ஹனுமானை மட்டும் விட இஷ்டமில்லை. இங்கே கர்பக்ரஹத்துக்கு எதிரே, கூப்பிய கரங்களுடன், நின்ற திருக்கோலத்தில் ராமனை தரிசிக்கும் ஹனுமானை நாம் தரிசிக்கலாம். இந்த ஹனுமானுக்கு மிகவும் இஷ்டமான பிரஸாதம் அவல்!

உருவகப் படுத்தியிருப்பதாகக் கொண்டும் நாம் மகிழலாம்.

ஸ்ரீ ராமன் கொடுத்த பணியைச் செவ்வனே நிறைவேற்றி விட்டான் ஹனுமான். பரதன் முன் சென்று ராமனின் வெற்றியைச் சொன்னான். அவர் பரத்வாஜ ஆசிரமத்தில் இருப்பதைத் தெரிவித்தான். சிதை உயிரை மாய்த்துக் கொள்ளவிருந்த நேரத்தில் தடுத்து நிறுத்தியதைப் போல் பரதனின் அக்னிப் பிரவேசத்தையும் தடுத்த பெருமை ஹனுமானுக்குத்தான் உரியது.

ஆஞ்சனேயன் பரதனைத் தடுத்து நிறுத்திய வேகத்தைக் கம்பநாடானின் செய்யுள் எப்படி வெளிப்படுத்துகிறது பாருங்கள் :

*ஐயன் வந்தனன் ஆரியன் வந்தனன்*
*மெய்யின் மெய்யன்ன நின்னுயிர் வீடினால்*
*உய்யுமேயவன் என்றுரைத்துட்வபுகாக்*
*கையினால் எரியைக் கரியாக்கினான்.*

கண்டேன் சீதையை என்று ஸ்ரீராமனிடம் சொன்னது போல் 'ஐயன் வந்தனன் ஆரியன் வந்தனன்' என்று சொல்லி இதோ ராமன் வந்து கொண்டேயிருக்கிறான் என்பதை உணர்த்தி, "சத்தியமே வடிவான அந்த ஸ்ரீராமன் நீ உயிர்நீத்தாயானால் வாழ்வானா?" என்று கேட்கிறான் பரதனிடம்.

அருணாசலக் கவிராயரும் அவ்வாறே தான் பாடுகிறார் :

*வந்தான் வந்தான் பரதா – ரகுராமன்*
*வந்தான் வந்தான் பரதா!*
*வந்தான் வந்தான் மோதிரம்*
*தந்தான் தந்தான் கை மேல்*
*இந்தா இந்தா தீயினில்*
*முந்தாதே முந்தாதே*

ஹனுமான் பரதனிடம் விவரிப்பதாக 28 பாடல்கள் புனைந்துள்ளார் கம்பர்.

அந்த வரலாறைக் கேட்ட பரதன், 'இதைச் சொல்பவனின் ராமபக்தி மிக உயர்ந்தது' என்று முடிவுக்கு வந்து ஹனுமான் காலில் விழுந்து வணங்கினானாம்!

பட்டாபிஷேக வைபவம். அமைச்சர்களும் புரோகிதர்களும் மக்களும் சூழ்ந்து நிற்க, நட்சத்திரங்களால் சூழப்பெற்ற சந்திரனைப் போல் பிரகாசிக்கிறான் ஸ்ரீராமபிரான்.

அந்தக் கோலாகலங்களுக்கிடையே அவன் என்ன செய்தான் என்று நினைக்கிறீர்கள்...? சுக்ரீவனுக்கும் தனக்கும் ஏற்பட்ட நட்பையும் விபீஷணன் தன்னைச் சரணடைந்த விஷயத்தையும் ஹனுமானுடைய வீரத்தையும் வலிமையையும் விவரித்து, சபையிலே எல்லோரும் கேட்கப் பேசுகிறான்.

பரதன் கேட்டுக் கொண்டதன்பேரில் நாற்திசை சமுத்திரங்களிலிருந்தும் புனித நீரைக் கொண்டு வருகின்றனர் வானரப் படையினர்.

சுசேஷணன் கிழை சமுத்திரத்திலிருந்தும்,
ருஷபன் தென் கடலிலிருந்தும்
கவயன் மேலைக் கடலிலிருந்தும்
நீலன் வட சமுத்திரத்திலிருந்தும்
நீர் எடுத்து வந்ததாக வால்மீகி கூற்று.

கம்பரோ இவையனைத்தையும் தனியொருவனாகக் கொண்டு வந்தவன் என்று சிலாகித்து ஹனுமானைப் போற்றுகிறார்.

இந்திரனுக்கு அஷ்டவசுக்களும் சேர்ந்து முடிசூட்டியது போல் ஸ்ரீராமனுக்கு வசிஷ்டர் முதலான முனிவர்கள் பட்டாபிஷேகம் செய்து வைக்கின்றனர். அந்தச் சமயத்தில் ஆஞ்சனேயன் எங்கே இருந்தான் என்று நினைக்கிறீர்கள்...?

ராமனின் திருவடிக்கு நேர் கீழே கரம் கூப்பி அமர்ந்திருந்தான். ஸ்ரீ ராமன் மீது பொழியப்பட்ட அத்தனை அபிஷேக

ஜலமும் அத்திருவுடலை நனைத்து பாதத்தின் வழி தாரையாக வந்து விழுந்தது ஹனுமானின் சிரஸில்தான்!

பிறகு, சூரிய குலத் தரசர்களின் சிம்மாசனத்தில் ஸ்ரீராமனையும் சீதையையும் அமர்த்தினார் வசிஷ்டர். அப்போது ராமபிரான் தன்னைச் சுற்றி நின்ற அன்பர்களுக்குப் பரிசுகள் வழங்குகிறார்.

சுக்ரீவனுக்கு ஒரு ரத்தின ஹாரம் கிடைக்கிறது. அங்கதனுக்கு ஒரு ஜோடி தோள் வளை. விபீஷணனுக்கு, தான் ஆராதித்த தங்க விமானத்தையே பரிசாகத் தந்தான் ஸ்ரீராமன். எல்லாவற்றையும் கொடுத்துவிட்டு இறுதியில் ஓர் அழகான முத்து மாலை... அதை எடுத்து சீதாபிராட்டியிடம் கொடுத்தான் ஸ்ரீராமன். ''புத்தியும் பலமும் பராக்கிரமமும் நிறைந்த ஒருவனுக்கு உரியது இந்த முத்து ஹாரம்... நீ யாரை இதற்கு உரியவனாகக் கருதுகிறாயோ அவனிடம் இதைத் தரலாம்'' என்றான்.

சீதை அந்த முத்து மாலையை யாரிடம் கொடுத்தாள் என்று சொல்லத் தேவையில்லை. ஸ்ரீராமனும் சீதையும் சேர்ந்து இருக்கையில் அவர்களுடைய முதலும் முடிவுமான பக்தனான ஹனுமான் பெற்றான் அந்த வடஸரத்தை.

வடமொழியில் வடஸரம் என்றால் முத்துமாலை என்று பொருள். இதுதான் பிற்பாடு தமிழில் வடமாலை என்றும் வடைமாலை என்றும் மருவி வந்தது போலும். அதனால்தான் இன்று நாம் ஹனுமானுக்கு வடைமாலை சார்த்தி வணங்கும் வழக்கம் உருவாகியது போலும்!

(வளரும்)

## அருள்வாக்கு

வராஹமிஹிரர் ''பிருஹத் ஸம்ஹிதை'' என்று ஒரு கிரந்தம் எழுதியிருக்கிறார். அதில் இல்லாத விஞ்ஞானக் கண்டுபிடிப்பு இல்லை.

வெறும் ஆகாசத்தில் இந்தக் கிரஹங்களெல்லாம் இருக்கின்றனவே; விழாமல் எப்படி நிற்கின்றன? இதற்குக் காரணத்தை நியூடன் என்பவர்தாம் கண்டு பிடித்தார் என்று எல்லோரும் நினைக்கிறார்கள். மிகப் பழைய காலத்தில் உண்டான சூரிய சித்தாந்தத்தின் ஆரம்பத்தில் இருக்கிற சுலோகமே, பூமி விழாமல் இருப்பதற்கு ஆகர்ஷண சக்தி காரணம் என்று சொல்லுகிறது. நம் பகவத் பாதாளின் உபநிஷத் பாஷ்யத்திலும் பூமிக்கு ஆகர்ஷண சக்தி இருக்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு வஸ்துவை நாம் மேலே வீசி எறிந்தால் அது மறுபடியும் கீழே வந்து விழுகிறது. அப்படி விழுவது அதனுடைய ஸ்வபாவகுணம் அல்ல. அது பூமியில் விழுவதற்குக் காரணம் பூமியின் ஆகர்ஷண சக்தியே. ஆகர்ஷண சக்தியென்றால் இழுக்கும் சக்தி என்பது அர்த்தம். பிராணன் மேலே போகும்; அபானன் அதைக் கீழே இழுக்கிறது. ஆகவே கீழே இழுக்கிற சக்திக்கு அபானசக்தி என்று பெயர். ஸ்ரீ ஆசாரியாரவர்கள் பிருதிவிக்கு அபானசக்தி, அதாவது ஆகர்ஷண சக்தி இருக்கிறதென்று சொல்லியிருக்கிறார்கள். ப்ரச்நோபநிஷத்தில் (3.8) ''ப்ருதிவியின் தேவதையே மநுஷ்ய சரீரத்தில் அபானனை இயக்குகிறது'' என்று வருகிறது. அதன் பாஷ்யத்தில் ஆசார்யாள், 'மேலே போட்ட பொருளைப் பூமி ஆகர்ஷிக்கிற மாதிரி, மேலே போகிற பிராணனை அபானம் கீழே இழுப்பதைப் பற்றிச் சொல்கிறார். இதனால் உபநிஷத்திலேயே Law of Gravitation பேசப்படுவதாக ஆகிறது. இவைகளைப் போன்ற பல அருமையான விஷயங்கள் நம்முடைய சாஸ்திரங்களில் இருக்கின்றன. நமக்கு அவைகள் தெரியாததனால் தேசாந்தரத்தில் உள்ளவர்கள் நமக்கு எவ்வளவோ காலம் பிற்பட்டு எழுதியவைகளுக்கு, அளவில்லாத கௌரவத்தைக் கொடுக்கிறோம்.



— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

# பழையன கழிதலும், புதியன புகுதலும்.





காலம் மாறிக்கொண்டே இருக்கிறது. அதற்கேற்ப நாமும் மாறவேண்டாமா?

## இன்று முதல் சேமிக்கத் தொடங்குவோம்
## எதிர்கால வாழ்வை இனிதாக்குவோம்.

### பொது சேமநல நிதி (PPF)

- ❖ கூட்டு வட்டி 11% ❖ ரூ.60,000/- வரையிலான முதலீட்டிற்கு 20% வரிவிலக்கு ❖ கிடைக்கும் வட்டிக்கு முழு வரிவிலக்கு.
- ❖ நிதியாண்டில் குறைந்தபட்ச முதலீடு ரூ.100/-மற்றும் அதிகபட்ச முதலீடு ரூ.60,000/-
- ❖ மூன்றாவது நிதியாண்டுக்குப் பின் கடன் வசதி.
- ❖ ஏழாவது நிதி ஆண்டிலிருந்து பணத்தை திரும்பப் பெற வசதி.
- ❖ இக்கணக்கை அனைத்து தலைமை அஞ்சலகங்கள், தேர்வு நிலை அஞ்சலகங்கள், பாரத ஸ்டேட் வங்கியின் கிளைகள் மற்றும் குறிப்பிட்ட தேசியமயமாக்கப்பட்ட வங்கியின் கிளைகள் ஆகியவற்றில் துவக்கலாம்.

| முதலீடுகளுக்கான வழிகள் | | 15 ஆண்டுகளில் முதிர்வுத் தொகை (ரூ. இலட்சத்தில்) |
|---|---|---|
| மாதந்தோறும் (ரூ.) | வருடந்தோறும் (ரூ.) | |
| 500 | 6,000 | 2.29 |
| 2,000 | 24,000 | 9.16 |
| 5,000 | 60,000 | 22.91 |

### தேசிய சேமிப்பு சான்றிதழ் (NSC) (VIIIவது வெளியீடு)

- ❖ ஆண்டுக்கு 11% கூட்டு வட்டி.
- ❖ முதிர்வுக் காலம் 6 வருடங்கள்.
- ❖ ரூ. 60,000/- வரையிலான முதலீட்டிற்கு 20% வருமான வரிச்சலுகை.
- ❖ கிடைக்கும் வட்டிக்கு பிரிவு 88 மற்றும் 80 எல்-ன் கீழ் வரிவிலக்கு. நிதியாண்டில் குறைந்தபட்ச முதலீடு ரூ.100/-, உச்சவரம்பில்லை.
- ❖ தனிநபர், ஒரு முதிரா வயதினர் சார்பில் வயது வந்தவர்கள் மற்றும் பொறுப்பாட்சி குழுமங்கள் வாங்கலாம்.
- ❖ வங்கிகளில் கடன் பெறும் வசதி.

### அஞ்சலக மாதாந்திர வருவாய்த் திட்டம் (POMIS)

- ❖ ஆண்டுக்கு 11% வட்டி, 10% போனஸ்.
- ❖ முதிர்வுக் காலம் 6 வருடங்கள்.
- ❖ ரூ.12,000/- வரையிலான வட்டிக்கு வரிச்சலுகை
- ❖ போனஸ் தொகைக்கும் வரிச்சலுகை.
- ❖ குறைந்த பட்சம் ரூ.6,000/- மற்றும் அதன் மடங்குகள்.
- ❖ தனிநபர் முதலீடு ரூ.3 லட்சமும், இருவர் கூட்டாக சேர்ந்து துவங்க ரூ.6 லட்சமும் உச்சவரம்பு.
- ❖ ஓய்வு பெற்றவர்களுக்கு உன்னதமான திட்டம்.

| முதலீட்டுத் தொகை (ரூ.) | மாதம் தோறும் கிடைக்கும் வட்டி (ரூ.) |
|---|---|
| 6,000 | 55 |
| 60,000 | 550 |
| 1,02,000 | 935 |



மேலும் விபரங்களுக்கு, தொடர்பு கொள்ளவும் ● ஆணையர், சென்னை மாநகராட்சி, சென்னை - 600 003. ● துணை இயக்குநர் (சிறுசேமிப்பு), சென்னை மாநகராட்சி, சென்னை - 600 003. தொ.பே. : 5384440. ● மண்டல இயக்குநர், தேசிய சேமிப்பு நிறுவனம், சாஸ்திரி பவன், பெசன்ட் நகர், சென்னை - 600 090. தொ.பே. : 4916342. ● மாவட்ட ஆட்சியர்கள், மாவட்ட ஆட்சியரின் நேர்முக உதவியாளர்கள் (சிறுசேமிப்பு மற்றும் பரிசுச் சீட்டு) கட்டாட்சியர்கள், வட்டார வளர்ச்சி அலுவலர்கள், அஞ்சலக அதிகாரிகள் மற்றும் சிறுசேமிப்பு முகவர்கள்.

சிறுசேமிப்புத்திட்டங்கள் பற்றி அறிந்து கொள்ள 24 மணி நேரமும் செயல்படும் கணினியுடன் கூடிய தகவல் பரிமாறிக் கொள்ளும் சாதனத்துடன் (IVRS) தொலைபேசி மூலம் தொடர்பு கொள்ளலாம். IVRS தொலைபேசி எண்கள் சென்னை : 8290853, 8290854, 8290855, 8290856. மதுரை : 537803, 537804. கோவை :303537, 303538.



## ஆணையர், சிறுசேமிப்புத் துறை



சபர் மேன்ஷன், 621, அண்ணா சாலை, சென்னை - 600 006. தொலைபேசி : 8291685 / 8291784

Website : www.SMALLSAVINGSTN.com email : saverat@md4.vsnl.net.in

**வளமையான பாதைக்கு வழி வகுக்கும் சிறுசேமிப்பு**

Visit us at : www.tn.gov.in / www.chennaionline.com / www.aaraamthinai.com / www.southindia.com / www.webulagam.com / www.thegovt.com

கல்கி–
ரமணி VS ரமணி
இணைந்து நடத்திய
'தம்பதி தமாஷ்'
போட்டியில்
ரூ. 2000 மதிப்புள்ள
பட்டுப் புடைவையை ஆறுதல்
பரிசாகப் பெறும் கட்டுரை.

# கரிபூசிய சென்டிமென்ட்!

திருப்பதி சென்று பெருமாளைத் தரிசித்து வர ரயில் டிக்கெட், தங்குமிட முன்பதிவு ரசீது ஆகியவற்றை எங்கள் திருமணத்திற்கு அன்பளிப்பாக அளித்தார் நண்பர் ஒருவர்.

நாங்கள் இருவரும் சேர்ந்து வெளியில் கிளம்பும் முதல் புரோக்கிராம் இது. கொஞ்சம் பரபரப்பு. இந்த டென்ஷனில் என் பர்ஸை எங்கோ வைத்துவிட்டுத் தேடிக் கொண்டிருந்தேன். அது என்னுடைய சென்டிமென்ட் பர்ஸ். அதில்லாமல் நான் வெளியில் கிளம்பவே மாட்டேன். நிலையை கணவரிடம் சொல்லவும் (திருமணமான புதிது!) அவரும் தேடினார்.... தேடினார்.. நீ.......ண்ட நேரத் தேடலுக்குப் பிறகு புத்தக இடுக்கின் உள்ளே மறைந்து கிடந்த பர்ஸ் 'ஹாய்' என்றது. 'அப்பாடா' கிடைத்ததே! என்று ஏழுமலையானுக்கு ஒரு ஸ்பெஷல் நன்றி சொல்லிக் கொண்டு ரயில்வே ஸ்டேஷன் கிளம்பினோம்.



ரயிலில் ஏற சீட் நம்பரைத் தேடியபோதுதான் தெரிந்தது. 'என் கணவர் ரயில் டிக்கெட்டை எடுக்காமலேயே வந்துவிட்டார் என்பது.

"ரொம்ப முக்கியம்னு அந்த பர்ஸை தேடுதேடுன்னு தேடுனியே; இதெல்லாம் செக் பண்ணியிருக்கலாம்ல, பொறுப்பேயில்லாம என்ன பொம்பளையோ!"

– கணவரின் டென்ஷன் வார்த்தைகள் தான்.

வீடு அருகிலேயே இருந்ததால் ஆட்டோ பிடித்து விரைந்தோம். 'முதன்முறையாக வெளியில் கிளம்பும்போது இப்படி ஆகிவிட்டதே' என்ற கவலையும், "டோஸ்" வாங்கியதால் ஏற்பட்ட அவமானமும் என் சென்டிமென்டைக் கவிழ்த்தது. உள்ளே சென்று டிக்கெட்டை எடுத்துவிட்டு, 'எல்லாம் உன்னாலதானே, சனியனே போ' என்று பர்ஸை வீட்டிற்குள்ளேயே எறிந்துவிட்டு வந்தேன்.

திருப்பதி. தேவஸ்தான அலுவலகத்தின் தங்குமிட முன்பதிவு கவுண்டரை அணுகியதும் என் கணவர் கேட்டார்,

"கஜி, உன்னோட பர்ஸைக் கொடு!"

எனக்குத் திக்கென்றாகி "எதுக்கு?" என்றேன்.

"அந்த பர்ஸ்தான் உன் செல்லப்பிள்ளையாச்சே, 'காட்டேஜ் ரிசர்வேஷன் ரசிதை அதிலதான் பத்திரமா வச்சிருக்கேன்."

– எனக்குச் சிரிப்பதா? அழுவதா? என்றே புரியவில்லை.

— சூர்யா

# என் கடவுளுக்கு நைவேத்தியம்காட்டி சாப்பிட வேண்டும்?



- ஒவ்வொரு பதார்த்தத்திலும் ஜீவனுண்டு. அதையறுத்து சமைப்பதனால் தோஷம் உண்டாகின்றது. அவைகளை கடவுளுக்கு ஆராதனைசெய்து சாப்பிட்டால் அந்த தோஷம் நிவாரணையாகும்.
- யஞ்ஞத்தினால் ஆராதிக்கப்பட்ட தேவதைகள், சந்தோஷமடைந்து இஷ்ட்டமான போகங்களைக் கொடுப்பார்கள். ஆதலால் நீங்கள் சாப்பிடுவதற்குமுன் அன்னமும் பதார்த்தங்களும் கடவுளுக்கு காட்டி ஆராதனை செய்து அந்த சேஷத்தைச் சாப்பிடவேண்டும்.
- இந்திராதி தேவதைகளும் ஜனங்களுக்கு ஜீவனார்த்தமாகிய பதார்த்தங்களைக் கொடுப்பதற்கு மழையைப் பெய்விக்கப் பகவானால் நியகிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் அவர்களால் விளைவித்துக் கொடுக்கப்பட்ட பதார்த்தங்களை மறுபடியும் அவர்களுக்கு அர்ப்பணம் செய்வதனால் அவர்களை சந்தோஷித்து மறுபடியும் பிரதி வருஷங்களிலும் மழையை விருத்து செய்து கொண்டே வருவார்கள். அதனால் ஜனங்கள் க்ஷேமமாய் விருத்தியடைவார்கள்.

*ஆதாரம்: ஜீவப்ரஹமைத்ய வேதாந்த ரஹஸ்யம்*

---

ஆகையால் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோருக்கு விநியோகம் செய்யவும்.

---

**திருமண வைபவங்களுக்கு** சீர் முறுக்கு, சீர் அதிரசம், முள்ளு தேன்குழல், பருப்புத் தேங்காய் வகைகள், திரட்டுப்பால் அப்பம் முதலியவை வழங்கப்படும்.

---

# தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு,
சென்னை - 20. போன்: 4915662, 4914213

# குபுகி



**வ**ழக்கமான முகங்களையே பரதத்தில் பார்த்துப் பழகிய கண்களுக்கு திருச்சி ரசிக ரஞ்சனி சபா சமீபத்தில் நடத்தியநிகழ்ச்சி வித்தியாசமாக இருந்தது. காரணம் பரதமாடியது ஜப்பானிய பெண்கள்.

ஒவ்வொரு வருடமும் இச் சபா நடத்தும் விழாவிற்கு இந்தியாவில் ஏதேனும் ஒரு மாநிலத்திலிருந்து இசை மற்றும் நடனக்குழுவினர் வருவது வழக்கம்.

இந்த ஆண்டு கர்நாடக மாநிலத்தவர் பங்கு பெற நேர்ந்ததில் அபூர்வமாய்க் கிடைத்தனர் இந்த ஜப்பானியப் பெண்மணிகள். மைசூர், லலித் கலா அகாடமியின் இயக்குனர் உமா ராவிடம் முறைப்படி பரதம் பயின்றவர்கள் இவர்கள். இவர்களின் பரதநாட்டியம் ஒண்ணேகால் மணி நேரமும், 'குபுகி' எனப்படும் ஜப்பானியப் பாரம்பரிய நடனம் அரை மணி நேரமும் நடந்தது. பார்வையாளர்கள் வைத்த கண்ணை வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தனர்.



நடனமாடிய செல்வி ஜீன் ஒபி ஒரு ஜப்பானிய பத்திரிகையாளராம். யூகி ஹிரபாயிஷி என்பவர் ஜப்பானியத் திரைப்பட நடிகை. தொலைக்காட்சித் தொடர்களிலும் நடித்து வருபவராம்.

நாற்பது வயதாகும் க்யூகோ நோபி என்றழைக்கப்படும் பெண்மணிக்குப் பரதநாட்டியத்தின்பால் அத்தனை ஈர்ப்பு. டோக்கியோ பல்கலைக்கழகத்தில் உளவியல்துறைப் பேராசிரியராகப் பணிபுரிந்து வருகிறார். கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த நாட்களில் ஜப்பானிய நடனங்களில் சிறந்து விளங்கி, 'ஹாகுஹின்கன்' (HAKUHINKAN) என்கிற விருது பெற்றுள்ளார். அதன் பின்னர் எப்படியும் பரதம் கற்றுக் கொள்ள வேண்டும் என்கிற ஆவலில் கர்நாடகம் வந்து மைசூர் லலித் கலா அகாடமி இயக்குனர் உமா ராவைச் சந்தித்துள்ளார். ஒவ்வொரு ஆண்டும் மூன்று மாத விடுமுறையில் மைசூர் வந்து தங்கியிருந்து பரத நாட்டியத்தை முறையாகவும், சிறப்பாகவும் கற்றுத் தேர்ச்சி பெற்றிருக்கிறார். டோக்கியோ நகரில் கான்டெம்பரரி நாட்டியக் கம்பெனி என்கிற நாட்டியப் பயிற்சி நிறுவனத்தின் இயக்குனராகச் செயல்பட்டு வரும் இவர், தற்பொழுது எழுபத்தைந்து ஜப்பானியப் பெண்கள் அங்கு ஜப்பானிய நடனத்துடன் பரதமும் பயின்று வருவதாகச் சொல்கிறார்.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

அன்றைக்குக் காலனி இளைஞர்களின் நடுவே டென்னிஸ் கோர்ட்டில் அஜய்யை வென்றாள் சுஜா. அது மட்டுமில்லை. அங்கே வசித்த மாமிகள், மாமாக்களிலிருந்து சின்னகுழந்தை வரை எப்படியோ அத்தனை பேரையும் வசியம் பண்ணி வைத்திருந்தாள்.

இத்தனைக்கும் சில சமயங்களில் அவள் பேசுவது அநியாயமாகவும், அடாவடித்தனமாகவும் இருந்தாலும் என்ன முகராசியோ... எல்லோரும் 'இவள் சொல்வதுதான் சரி, என்று ஆட்டு மந்தைக் கணக்காகத் தலையை ஆட்டுவார்கள்.

இளைஞர்களைப் பற்றி கேட்கவே வேண்டாம். சின்ன தாய் ஒரு கல்லைப் பொறுக்கி அந்தண்டைப் போடுவதானாலும், 'சுஜா வரல்லையேப்பா', என்றும், 'எங்கேடா, நம்ம தலைவியைக் காணோம்' என்றும் புலம்பத் தொடங்கி விடுவார்கள்.

# இனிமேல்




அப்போதெல்லாம் அஜய்க்கு, அவள்மேல் ஆத்திரமான ஆத்திரம்! வீட்டில் இவளைப் பற்றி யார் பேச்சை எடுத்தாலும், அன்றைக்கு அவர்கள் தொலைந்தார்கள்.

இதுநாள் வரையில் அந்த காலனிக்கே உத்தம இளைஞனாகப் போற்றிக் கொண்டாடப்பட்ட தான் ஓரங்கட்டப்பட்டு கிழடுகள் கூட சுஜாவிடம் அல்ப விஷயத்துக்கெல்லாம் போய் நின்றால் எரிச்சல் வருமா வராதா...

இன்றைக்கும் அவனுக்குப் பசுமையாக நினைவிருக்கிறது. ஒரு நாள் அவன் தன் அம்மாவிடமும் அர்ச்சனாவிடமும் புலம்பியது.

''எழுபத்தி எட்டாம் நம்பர் வீட்டு பூவராகன் மாமாவுக்கு என்ன வயசிருக்கும். அட, என்ன வயசிருக்கும்னு கேட்கிறேன். எனக்குத் தெரிஞ்சே அவர் அஞ்சு வருஷமா சதாபிஷேகம் செஞ்சிக்கணும்னு சொல்லிக்கிட்டிருக்கார். நேரா நடக்க முடியலே; வாக்கிங் ஸ்டிக்கைப் பிடுங்கிட்டா 'ராக்

அண்ட் ரோல்' டான்ஸ்தான் ஆடுவார். கண்ணுல திரை விழுந்து நாலு தடவை ஆபரேஷன் பண்ணிட்டாரு. எங்கேயோ கீழே விழுந்து பிருஷ்டத்துல அடியாம். அவரோட நாலாவது பிள்ளை சொன்னாரு. இத்தனைக்கும் நடுவுல என்னை மெனக்கெட்டு கூப்பிட்டு, 'அந்த குட்டி சுஜாவ பாத்தா வரச் சொல்லு... கம்பராமாயணத்துல சுந்தரகாண்டம் படிச்சு சொல்றேன்னு

# ஆரம்பம்

சொன்னா, அவ குரலைக் கேட்டுண்டே சாகலாம்'ங்கறாரு. இவ பெரிய ஏழிசை வல்லபி... அப்படியே இருந்துட்டுப் போகட்டுமே. நான் என்ன இவர் வீட்டு வாட்ச்மேனா? கூப்பிட்ட குரலுக்கு ஓடிப் போய்ச் சொல்ல''

இப்படி கத்தியவனை பெட்டிப் பாம்பாக அடங்க வைத்தவள் இதே சுஜாதான் என்றால் யாராவது நம்ப முடியுமா?

உண்மையிலேயே அப்படியொரு காரியத்தை அவள் செய்தாள்.

அந்த வருட ஹோலி பண்டிகையன்று காலனியே இரண்டுபட்டது. சாதாரணமாக பலதரப்பட்ட நடுத்தர மேல்மட்ட குடும்பங்கள் வசிக்கும் இந்த காலனியின் சிறப்பே அஜய்யும் அவனை ஒத்த இளைஞர்களும்தான். சின்னதாய் யார் வீட்டு வாசலிலும் செம்மண் கட்டி கோலம் போட்டு விடக்கூடாது. எந்த வீட்டிலும் எந்த பெண்ணுக்கோ அல்லது பிள்ளைக்கோ திருமணம் பேசி முடித்திருக்கக் கூடாது. கோபாலகிருஷ்ணன் மனைவிக்கு ஆறாவது குழந்தை பிறந்தாலும் சரி, பல்பீர் சிங்கின் ஹுயிப்ஸ் நாய் பிரசவித்திருந்தாலும் சரி, கோலாகலமாய் அதைக் கொண்டாடி விடுவார்கள். அப்படிப்பட்டவர்கள் ஹோலி வந்தால் என்ன பாடுபடுத்துவார்கள் என்று சொல்லத் தேவையில்லை.

இந்த முறை சுஜா மொத்த இளைஞர்களையும், இளைஞிகளையும் இரண்டு அணியாகப் பிரித்திருந்தாள். பதின்மூன்று வயதிலிருந்து இருபது வயது வரை பெண்கள் தனியாகவும் ஆண்கள் தனியாகவும் பிரிந்து எந்த அணி அதிகம் சாயம் பூசிக் கொள்ளாமல் தப்பிக்கிறார்களோ, அவர்களே வெற்றி பெற்றவர்களாக ஆவார்கள் என்று ஒரு சுற்றறிக்கை விட்டாள். அந்த நிமிடம் முதலே தேர்தல்களை கட்டுவது போல காலனி அமளி துமளிபட ஆரம்பித்துவிட்டது. மூட்டை பூச்சிகள் எங்கெங்கு அடையடையாக ஒளிந்து கொள்ளும் என்பது வீட்டிலுள்ளவர்களுக்குத் தெரியாதா? சந்து பொந்துகளிலெல்லாம் மருந்து அடிப்பதில்லையா?

அதுபோல யார் யார் தன்னுடன் யார் யாரைச் சேர்த்துக் கொண்டு எங்கெங்கே ஒளிவார்கள் என்று இரண்டு நாட்களாகவே ரகசியமாகத் திட்டம் தீட்டப்பட்டு எங்கே ஒருவருடன் ஒருவர் பேசினால்கூட தங்களது மாஸ்டர் ப்ளான் உடைந்து சிதறிவிடுமோ என்ற பயத்தில் ஒதுங்கி ஒதுங்கி போனார்கள். பார்த்தால்கூட பாராதது மாதிரி போனார்கள். தலையை நட்டுக் கொண்டும் உதட்டைச் சுழித்து, பழித்துக் காட்டி கொண்டும் கிண்டலாய் தமுட்டுச் சிரிப்பு சிரித்துக் கொண்டும் அவர்கள் போக...

ஒவ்வொரு வீட்டிலும் அண்ணன் தங்கை, அக்கா, தம்பிகளுக்கும் இதனால் ஆக்ரோஷமான சண்டை. பல சமயங்களில் கொக்கு தலையில் வெண்ணெய் வைத்துப் பிடிப்பதுபோல

அனுராதா ரமணன்

அவரவர்கள் தங்கள் சகோதரிகளைச் சாமர்த்தியமாக நைச்சியம் பண்ணியும் கேட்டார்கள்.

ஒன்றும் பலனில்லை. ஒவ்வொருத்தியும் சுஜாவினால் பலமாக உருவாக்கப்பட்டிருந்தாள்.

"ச்சீ... சொல்லாட்டா போங்கடா. நீங்க எங்கெல்லாம் ஒளிவீங்கன்னு எங்களுக்குத் தெரியாதாக்கும். போயும் வந்தா உங்க வீட்டு சமையற்கட்டுல, இல்லாட்டி வாட்ச்மேன் கூண்டுல அதுவும் இல்லாட்டி இருக்கவே இருக்கு உங்க வீட்டு கட்டிலடியெல்லாம். ஒரு நிமிஷம் உங்களால பேசாம இருக்க முடியுமா? தகர உண்டியல்ல கல்ல போட்டுக் குலுக்கறமாதிரி லொடலொடன்னு..."

அஜய் தங்கையைக் கிண்டலடித்தான். அவளோ அழுத்தமாய்ப் புன்னகைத்துவிட்டு கடைசி வாய் தயிர்சாதத்தையும் நிதானமாய்ச் சாப்பிட்டு, புறங்கையை நக்கிக் கொண்டே நகர்ந்தாள்.

# ஆறாம் நாள்!

ஆடம் கிப்ஸன் (அர்னால்ட்) ஒரு ஹெலிகாப்டர் பைலட். டூட்டி முடிந்து ஒரு நாள் வீட்டுக்குத் திரும்பும் ஆடம் வீட்டை நெருங்கியதும் 440 வோல்ட் அதிர்ச்சிக்குள்ளாகிறான். காரணம்... அங்கே இன்னொரு ஆடம் கிப்ஸன் தன் மனைவி மற்றும் பிள்ளையோடு ஜாலியாக பிறந்த நாள் கொண்டாடிக் கொண்டிருக்கிறான். அச்சு அசலாக தன்னை இன்னொரு பிரதி எடுத்த மாதிரி இருக்கிறான். 'யாரடா இவன்?' என்று வீட்டுக்குள் புகுந்து கலாய்ப்பதற்குள், எங்கிருந்தோ பிரவேசித்த இருவர் துப்பாக்கி நுனியில் ஆடமைக் கடத்துகிறார்கள். வில்லனின் கோட்டைக்கு வருகிறார்கள். ட்ரக்கர் என்ற மஹா கோடீசுவர ஆசாமிதான் வில்லன். மனிதனைத் தவிர மற்ற எதை வேண்டு

ஹோலியன்று பகல் ஒரு மணிக்குள் அத்தனை இளைஞர்களையும் தேடித்தேடி சுஜாவின் பெண்கள் படை வர்ணங்களை வாரிப் பூசியது.

"இந்த ஆம்பளைங்களைக் கண்டு பிடிக்கறது ஒண்ணும் கஷ்டமில்லேடி. பதிமூணு, பதினாலு, பதினைந்து. இதுங்க எங்க மறைந்திருந்தாலும் சூயிங்கம் வாசனையும் சாக்லேட் ஸ்மெல்லும் காட்டிக் கொடுத்துடும். பதினாறு, பதினேழு, பதினெட்டு இதெல்லாம் ஹேர்ஜெல் வாசனை வச்சும் நாலஞ்சு நாளா மாத்தாத ஸ்டோன் வாஷ் பாண்ட் நாத்தத்தை வச்சும் கண்டுபிடிச்சுடலாம். பத்தொம்போது, இருபது தானாவே மாட்டிக்கும். சிகரெட் நெடி, இல்லேன்னா ஆஃப்டர் ஷேவ் லோஷன்..."

"நாமதான் ரொம்ப ஜாக்கிரதையா இருக்கணும். யாரும் எந்த பெர்ஃப்யூமும் யூஸ் பண்ணாதீங்க. பவுடர், கண்ணாடி வளையல், தலையில பூ வச்சுக்கற சமாசாரம். இதெல்லாம் ருல்ட் அவுட். நல்லா கவனியுங்க அஜய்யோட அப்பாகிட்ட அவன் அம்மா சொல்லுவாங்க. அதுதான் நம்ம சிக்னல். ஓகே."

சுஜா தனது சிநேகிதிகளிடம் இப்படிச் சொல்லிவிட்டு அர்ச்சனாவிடம் திரும்பி திட்டத்தை மறுமுறை விளக்கிச் சொன்னாள்.

"ஓவர்ஹெட் டாங்க் ரிப்பேர் ஆயிடுச்சு; மோட்டார் ஸ்விட்ச்சைப் போடாதீங்க. இப்படி உங்க அம்மா சொல்லணும். டாங்க் தண்ணியெல்லாம் பின்னாடி பக்கத்துக் குழாய் வழியா சுத்தமா காலியாக்கிடணும். ஒரு டாங்க் சுமாரா பத்து பேர் உட்கார வசதியா இருக்கும். நாம மொத்தம் இருபத்திரெண்டு பேர் இருக்கோம். பதினோறு பேர் டாங்க்ல உட்கார மீதி பதினோறு பேர் இவனுங்களைத் தேடிப் பிடிச்சு சாமர்த்தியமா கலர் பூசணும். எவளும் இவங்ககிட்ட சிக்காம கொடுத்த வேலையைக் கச்சிதமா முடிச்சுட்டு எங்க வீட்டு ஓவர்ஹெட் டாங்க்குக்கு வந்துடணும். நான் ஏற்கெனவே டாங்கைச் சுத்தம் பண்ணி தரையில பாய், ஜமக்காளமெல்லாம் போட்டு கொறிக்கறதுக்குச் சீடை முறுக்கு, தாகத்துக்குத் தண்ணி, பெப்சின்னு எல்லாம் வைச்சுருக்கேன். ஆனால் எல்லாரும் அடக்கி வாசிக்கணும். சொல்லிட்டேன்."

கடைசியில் அவள்தான் ஜெயித்தாள். அவள் பக்கம் ஒருத்திகூட மாட்டவில்லை. அந்த பக்கமோ அத்தனை பேருமே அடையாளம் தெரியாதபடி சாயக் குட்டையில் நனைத்தெடுத்தப் பூனைக்குட்டிகள் மாதிரி இருந்தார்கள். இந்தப் போட்டியின் ஆரம்பத்திலேயே ஈஸ்வரன் உற்சாகத்துடன் வென்றவர்களுக்கு மிகப் பெரிய பரிசுப் பொருள் தருவதாக அறிவித்திருந்தார்.

அஜய்யைப் 'பொருத்தவரையில் பரிசு ஒன்றும் பெரிய விஷயமில்லை. எத்தனையோ போட்டிகளில் எவ்வளவோ

மானாலும் 'க்ளோனிங்' பண்ண லாம் - என்று உலகம் ஒப்புக் கொண்ட நேரம் அது. ட்ரக்கர், வயசான ஒரு விஞ்ஞானியை வைத்து ஆடமைக் க்ளோனிங் செய்திருக்கிறான். இவர்கள் மனிதனைப்படி எடுப்பதைத் தீவிரமாக எதிர்க்கிறது மற்றொரு கும்பல். சதி, எதிர்ச் சதி, எதிர்பாராத சிக்கல்கள் என்று கதை தொடர்கிறது. எதற்காகக் க்ளோனிங்? ஸிம்பிள். ஒன்று - எப்போதும் இளமையாகவே இருக்கலாம். மற்றொன்று - தனக்கென்று ஒரு குழுவை உருவாக்கி, கொஞ்சம் கொஞ்சமாக உலகைத் தனக்கு அடிமையாக்கலாம்.

இறுதியில் இரு ஆடம்களும் இணைந்து வில்லனின் சதியை முறியடிக்கின்றார்கள்.

படத்தின் பெரிய ப்ளஸ் - இரண்டு 'அர்னால்ட் ஷ்வார்ஸ் நெகர்கள்' படத்தின் பெரிய மைனஸ் - இருவருமே நடிக்கக் கொஞ்சம்கூட முயற்சிக்காதது.

(பைபிள் வாசகங்களின்படி 6வது நாள் கடவுள் மனிதனைப் படைத்தார் என்பதனால் படத்தின் பெயர் The 6th dayயாம்!)




— எம். அருண்

கோப்பைகளையும் பதக்கங்களையும் வென்றிருக்கிறான். ஆனால் ஒரு பெண்ணிடம் தோற்பது என்பது அவனைப் பொருத்தவரையில் அவமானமிக்க விஷயமாகவே இருந்தது.

ஈஸ்வரன் பெண்கள் குழு தலைவியான சுஜாவுக்கு லேடீஸ் சைக்கிளும், குழுவைச் சேர்ந்த மற்ற பெண்களுக்கு விதவிதமான டீ-ஷர்ட்ஸ், சூரிதார் செட்ஸ் என்றும் வாரி வழங்கியிருந்தார்.

இரண்டு நாட்கள் முழுக்க அஜய் வெளியே வரவேயில்லை. மூன்றாவது நாள், அவனது சிநேகிதன் டபிள் டக்கர் கிச்சா விடிகாலையிலேயே ஃபோன் செய்தான்.

"என்னடா? காலங்கார்த்தால?"

அஜய் அலுப்புடன் கேட்க, கிச்சா அவசரமான செய்தி ஒன்றை ஒலிபரப்பினான்.

"என்ன? தலைவா... அன்னிக்கி நடந்த சம்பவத்துக்கப்புறம் ஆளையே காணோம்? அதெல்லாம் சும்மா ஒரு விளையாட்டுக்குன்னு எடுத்துக்கணும்பா! சுஜா யாரு? நம்ம காலனி பொண்ணுதானே?"

"டேய்! எத்தனை பாக்கெட் சிகரெட் குடுத்தா? இப்படி அவ பக்கமே பேசற? அன்னிக்கி உன்னோட சார்மினார் நாத்தமே தான்டா காமிச்சி கொடுத்தது... பாவி!"

"விடுப்பா! விடிகாலைல ஆறு மணிக்கு நம்ம காலனி பிள்ளையார் கோவில்கிட்ட வரியா? நாங்க எல்லாரும் உனக்காக காத்துட்டிருக்கோம்.."

அவன் புரியாமல் குழம்பினான்.

"எதுக்கு?"

"நீ வந்துதான்டா மணியடிச்சு ஆரம்பிச்சி வைக்கணும்."

"எதை?"

"கேள்வி மேல கேள்விகேட்காம வந்து சேரு!"

அவன் தூக்கம் பிரியாத கண்களுடன் காலனி கோவில் பக்கம் போனபோது டபிள் டக்கர் கிச்சாவோ, தேங்கா மண்டை நாணாவோ யாருமே இல்லை. கோவில் வாசலில் புது சைக்கிளும் பூத்த புன்சிரிப்புமாக சுஜா மட்டுமே நின்றிருந்தாள். அவளைக் கண்டதுமே முகம் சுருக்கி அஜய் வந்த வழியே திரும்ப...

"என்ன தலைவா? மணியடிச்சு நல்ல நேரத்துல ஆரம்பிக்கறதை விட்டுட்டு கோவிச்சுட்டு கிளம்பினா எப்படி?"

டபிள் டக்கர் கிச்சாவின் குரல். அவன் வியப்புடன் திரும்பிப் பார்க்க சுஜா தொண்டையைச் செருமிக் கொண்டு சிரித்தாள்.

"கைவசம் நம்ம காலனியில இருக்கற எல்லாரோட குரலும் இருக்கு. யார் மாதிரி பேசணும்? சொல்லு... பரிசை உங்கப்பா கையால வாங்கினாலும் மணியடிச்சு ஓட்டறத நீதான் தொடங்கி வைக்கணும்னு ஆசைப்படறேன். அப்படி முறைக்காதேயேன். அன்பாவே பார்க்கத் தெரியாதா உனக்கு?"

அவன் அதிசயமாய்ப் பார்க்க அவள் நட்பாய்க் கைநீட்டினாள்.

(தொடரும்)

# நீரிழிவுக்கு அரிசி காரணமா?



'ஒரைஸா ஸ்டைவா' இல்லாமல் நம்மில் பெரும்பாலானவர்களால் ஒருநாள் கூட இருக்க முடியாது. திகைக்க வேண்டாம். அரிசியின் தாவரவியல் பெயர்தான் அது.

சென்னை ஐ.ஐ.டி. வளாகத்தில் நடைபெற்ற கருத்தரங்கு ஒன்றில் கலந்து கொள்ள வந்திருந்த டாக்டர் கே. முரளிதரனிடம் கல்கி வாசகர்களின் சார்பாக சில கேள்விகளைக் கேட்டோம். இவர் ஹைதராபாதில் உள்ள "அரிசி ஆராய்ச்சி இயக்கத்தில்" தலைமை விஞ்ஞானியாகப் பணிபுரிபவர்.

**• நெல் தாவரத்துக்கென்று ஏதாவது விசேஷ குணநலன்கள் உண்டா?**

எப்படிப்பட்ட சூழலிலும் வளரக்கூடிய பயிர் இது. இந்தியாவைப் பொறுத்தவரை தினமும் சுமார் ஆறு மணி நேரம் வெயில் அடிக்கும் என்று வைத்துக் கொண்டால், ஜப்பான் போன்ற நாடுகளில் கோடையில் தினமும் பதினாறு மணி நேரம்கூட வெயில் அடிக்கும். இரண்டுவித நாடுகளிலும் அரிசி அமோகமாக விளைகிறது. அதேபோல் மண் வாகு அமிலத்தன்மை கொண்டதாகவோ அல்லது உவர்ப்புத் தன்மை கொண்டதாகவோ இருந்தால்கூட அரிசி விளைவதற்குத் தடையேதுமில்லை.

**• ஓரிரு வருடங்களுக்கு முன் ஒரு சர்வதேச இதழில் வெளியிடப்பட்டிருந்த புள்ளிவிவரம், ரசாயனப் பூச்சிக் கொல்லிகளைப் பயன்படுத்துவதால் இன்னும் ஐந்து வருடங்களில் உலகின் ஆண்களில் ஐம்பது சதவீதம் பேருக்குக் குழந்தையை உருவாக்கும் தகுதி இல்லாமல் போய்விடும் என்றது. இதற்கு உங்கள் பதிலென்ன?**

ரசாயன பூச்சிக் கொல்லிகளால் கூட அவ்வளவு ஆபத்தில்லை. மரபணு மாற்றம் செய்த தாவரங்களை உற்பத்தி செய்தால் 'அமோக விளைச்சல் உண்டாகும்' என்று அந்த முறையை அறிமுகப்படுத்தியிருக்கிறார்களே, அந்த

னால் இது போன்ற ஆபத்துகள் ஏற்பட வாய்ப்பு உண்டு என்றே தோன்றுகிறது.

பொதுவாகப் பூச்சிக் கொல்லிகளையும் உரங்களையும் பயன்படுத்துவதால் சிக்கல்கள் முளைக்கின்றன என்று சொல்வதைவிட அவற்றைத் தவறான முறையில் பயன்படுத்துவதால்தான் பிரச்னைகள் எழுகின்றன. ஜுரம் சரியாக வேண்டும் என்று ஒரே வேளையில் ஏழெட்டு மாத்திரைகளை உட்கொள்ளலாமா? அதைப் போலத்தான்...

**• பச்சரிசி, புழுங்கலரிசி இரண்டில் எது அதிக சத்து கொண்டது?**

புழுங்கல் அரிசியில் நெல்லின் உட்சத்து தங்கி விடுவதால் அதற்குக் கொஞ்சம் கூடுதல் மதிப்பெண்கள். என்றாலும் சிலருக்கு இது ஒத்துக் கொள்ளாது. ஜீரணக் கோளாறுகளை உண்டு பண்ணக் கூடும். என்னைக் கேட்டால் 'பழையது' என்பார்களே அதில்தான் சத்து அதிகம். முன் நாள் இரவு வடித்த அரிசியில் தண்ணீரை ஊற்றி அதில் சிறிது வெங்காயம் மற்றும் பச்சைமிளகாயையும் போட்டு, சிறிதளவு மோரையும் ஊற்றி வைத்து விட்டு, அடுத்த நாள் காலை அதைச் சாப்பிட்டுவிட்டுச் செல்வது இன்னமும் பல கிராமங்களில் வழக்கத்தில் இருக்கிறது. இந்த நீராகாரம் சத்துணவு என்பதோடு வெயிலில் நின்று வேலை செய்யும்போது அதைத் தாங்கும் சக்தியையும் கொடுக்கிறது.

**• நீரிழிவு நோயிக்குக் காரணம் அரிசியைத் தங்கள் உணவில் அதிகம் சேர்த்துக் கொள்வது தான் என்றும் வெளி வந்த செய்திகள் குறித்து...**

இது சரியல்ல... நீரிழிவு நோய் பெரும்பாலும் பரம்பரையாக வருவது. கெலாக் போன்ற பிரபல பன்னாட்டு நிறுவனங்கள் கூட அரிசியை மையமாகக் கொண்ட பிரேக்ஃபாஸ்ட் உணவு வகைகளைத் தயாரிக்கத் தொடங்கி விட்டார்களே.

- ஜி.எஸ்.எஸ்.

படம்: ஸ்ரீஹரி

# அழியும் மூலிகைகள்!

**தா**வரங்களில் சில வகைகள் அழிந்து கொண்டே வருகின்றன. இது குறித்து ஒரு எச்சரிக்கை மணியை நம்மிடம் விடுத்தார் பசுமைப் புரட்சியை நம் நாட்டில் நடைமுறைப் படுத்தியதில் மிக முக்கியப் பங்கேற்ற டாக்டர் எம்.எஸ். சுவாமிநாதன்.

''சில குறிப்பிட்ட தாவர இனங்கள் மறைந்து வருவது வருத்தமான விஷயமென்றால், அதைவிட வேதனையான செய்தி, அவற்றில் சுமார் எண்பது சதவீதம் மருத்துவ குணங்கள் கொண்ட தாவரங்கள் என்பதுதான். முன்பெல்லாம் கோட்டக்கல் வைத்திய சாலையிலிருந்து பலவித விளம்பரங்கள் வந்ததுண்டு, உடல் நலத்துக்கு உதவும் பலவித மூலிகை மருந்துகளை வாங்கிப் பயனடையுங்களேன் என்று. ஆனால் இப்போது அங்கேயே கூட மூலிகைகள் போதிய அளவில் கிடைப்பதில்லை என்று கேள்விப்படுகிறேன்.

''இது குறித்து மக்களிடையே விழிப்புணர்வு வளரவேண்டும். இப்போதெல்லாம் அலோபதி மருத்துவர்கள்கூட சித்தா, ஆயுர்வேதம் போன்ற மாற்று மருத்துவ முறைகளின் பலனை உணரத் தொடங்கியிருக்கிறார்கள். எனவே மக்களின் நம்பிக்கையைப் பெற்றுள்ள அலோபதி டாக்டர்களே நன்கு ஆய்ந்து இந்திய மருத்துவ முறையின் மேன்மையையும் எடுத்துச் சொல்லலாம். இது போன்ற மருந்துகளின் தரத்துக்கு உத்தரவாதம் அளிக்கும் வகையில் சில அமைப்புகளை உருவாக்கலாம்.

''உயிரியல் தொழில்நுட்ப வாரியத்தின் தலைவர் என்கிற முறையில் நானும் அரசுக்குச் சில யோசனைகளைத் தெரிவித்திருக்கிறேன். தமிழகத்தின் சில பகுதிகளை மருத்துவத் தாவரங்கள் நன்கு வளர்க்கப்படுவதற்காகவே ஒதுக்கி விட வேண்டும். குற்றாலம், கொடைக்கானல், சிறுசேரி போன்ற பகுதிகள் உகந்தவை.



திருச்சியில் நடைபெற்ற இந்திய தேசிய லீக் கட்சியின் மாநாட்டுக்கு ஒரு நாள் முன்னதாகவே வந்திருந்த ஜெயலலிதா எவ்வித ஆரவாரமுமின்றி ஸ்ரீரங்கம் கோவிலுக்கு விசிட் அடித்தார். சென்னையிலிருந்து திருச்சிக்கு ஜெ.வுடன் வந்திருந்த சசிகலா ஸ்ரீரங்கம் கோவிலுக்கு ஏனோ வரவில்லை. மாறாக, பாவாடை தாவணிப் பெண் ஒருவர் மட்டும் உதவிக்காக அவருடன்.

★ கோபுரவாசல் வழியாக ஜெ. கோவிலுக்குள் செல்லும்போது ஆர்வமிகுதியில் சில தொண்டர்கள் 'வாழ்க' கோஷம் போட்டனர். அப்பொழுது அவர்களைப் பார்த்து ஜெயலலிதா 'ஷூச்' என சைகை மூலமாக கண்டித்தார். தொண்டர்கள் கப்சிப்.



# ஜெ.வை ஆசீர்வதித்த ஆண்டாள்!

★ கோவிலின் உள்ளே பெரும்பாலும் கல்தரை. மதிய நேரம். நல்ல வெயில். ஜெ. நடந்து வருவதற்காகப் பந்திப் பாய் சைஸில் இருந்த சாதாரண ஜமக்காளம் விரித்து வந்தனர் உதவியாளர்கள். (லோக்கல் தினசரிகள் அதை ரத்தினக்கம்பளம் என்று வர்ணித்திருந்தன!) சிறிது நேரம் அதில் நடந்து வந்தவர்க்கு அதிலிருந்த சின்னச்சின்ன முண்டு முடிச்சுகள் பாதங்களை உறுத்தவே விரிப்பினை தவிர்த்து விட்டு கல் பாவிய தரைகளிலும், சில இடங்களில் மணல்வெளியிலுமாக நடந்து வந்தார்.

★ கோவிலின் உள்முகப்பு வாசலருகே நின்றிருந்த கோவில் யானை ஆண்டாளுக்குக் கரும்பும் பழங்களும் கொடுத்தார். அவற்றைச் சுவைத்த பின்னர் ஜெவை ஆசீர்வதித்தாள் ஆண்டாள்.

★ ஆர்யபட்டாள் வாசல் வழியாக கம்பத்தடிக்குச் சென்ற ஜெ. அங்கு கன்றுடன் கூடிய காராம் பசு ஒன்றினை கோவிலுக்குச் சமர்ப்பித்தார். அப்பொழுது அர்ச்சகர் மூலமாக 'கோ சமர்ப்பணத்'திற்கு உண்டான மந்திரங்களை கூறச் செய்து அதனை ஒரு வார்த்தை மாறாமல் அப்படியே திரும்பச் சொன்னார் ஜெ. (சமர்ப்பணம் செய்பவர்கள் அர்ச்சகருடன் இணைந்து மந்திரங்கள் சொல்வது கூடாது என அங்கிருந்த பக்தர்களில் சிலர் பேசிக் கொண்டனர்!). சமர்ப்பணங்களில் கன்றுடன் கூடிய காராம் பசுவினைச் சமர்ப்பிப்பது என்பது மிகவும் உயர்ந்த நற்பலனைத் தரக் கூடியது என்று நம்மிடம் அர்ச்சகர் ஒருவர் கூறினார்.

★ பெரிய சன்னதி எனப்படும் ரங்கனாதர் சன்னதியில் ஜெ.வுக்காக சங்கல்பம் செய்து சகஸ்ரநாம அர்ச்சனை நடைபெற்றது. தாயார் சன்னதியில் அவர் பெயருக்கு அர்ச்சனை செய்யப்பட்டு செந்தாமரைப் பூவுடன் கூடிய பிரசாதம் வழங்கப்பட்டது.

★ மணல்வெளியில் உள்ளது கீழ்ப்பட்டாபிராமன் சன்னதி. இங்கு ராமர் வீற்றிருப்பது பட்டாபிஷேகத் திருக்கோலத்தில். இந்த சன்னதியில் சிறப்பு சேவை செய்யும் பக்தர்களுக்கு இழந்த பதவிகள் மீண்டும் கிடைக்கும் என்பது நம்பிக்கை. இங்கும் அவர் பெயரில் சிறப்பு சங்கல்பம் செய்து சகஸ்ரநாம அர்ச்சனை நடைபெற்றது.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

அழைக்கிறது அமெரிக்கா!

# கல்கி - டயானா வொர்ல்ட் டிராவல் இணைந்து வழங்கும்

## குவிஸ் போட்டி—14

''ஸ்''—க்ளுவெல்லாம் (இதற்குமேல்) கேட்கக் கூடாது. விடைகளை கவனமாக கூப்பனில் பூர்த்தி செய்து முந்தைய வாரங்களில் செய்ததைப் போலவே மற்ற கூப்பன்களோடு பூட்டி வையுங்கள். இருபத்தி ஆறு வார இறுதியில் எல்லா கூப்பன்களையும் எங்களுக்கு அனுப்புங்கள். இதில் மிக அதிகமான கேள்விகளுக்குச் சரியான பதில் எழுதும் ஒரு நபருக்கு

**அமெரிக்கப் பயணம் பரிசு!**

**ஐரோப்பா பயணம் இரண்டாவது பரிசு!**

**மலேஷியா—சிங்கப்பூர் பயணம் மூன்றாவது பரிசு!**

இந்த மூன்று நிலைகளிலும் ஒருவருக்கு மேல் சரியான பதிலை எழுதியிருந்தால் இருக்கவே இருக்கிறது குலுக்கல் முறை! பயணப் பரிசு பெறாதவர்களுக்கு அமரர் கல்கியின் நூல்கள் உண்டு.

ஆசிரியர் தீர்ப்புதான் இறுதி!

## குவிஸ் கூப்பன்—14

1) ஸ்டாக்ஹோமைத் தலைநகராகக் கொண்ட நாடு எது?
2) எல்லா மருத்துவர்களிடமும் இருக்கக் கூடிய, ரெனே லென்னெக் என்ற விஞ்ஞானியால் கண்டுபிடிக்கப்பட்ட கருவி எது?
3) இரு உலகப் போர்களிலும் பங்கேற்காத ஐரோப்பிய நாடு எது?
4) நுணுக்கம் அறியாதவர்கள் பில்லியர்ட்ஸையும் இந்த விளையாட்டையும் ஒன்று போலவே எண்ணக்கூடும்?
5) வருமானவரி ஏய்ப்பில் மாட்டிக் கொண்டுள்ள பிரபல ஜெர்மானிய டென்னிஸ் வீராங்கனை யார்?
6) ஒலிம்பிக்ஸ் நடைபெற்ற பார்சிலோனா இருப்பது எந்த நாட்டில்?

**விடைகள்:**

1)........................................
2)........................................
3)........................................
4)........................................
5)........................................
6)........................................



• ஐந்தும்...



• ... ஐந்தும்!

● பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? 'ஜெ'யின் ஐந்து வருட ஆட்சி, மு.கவின் ஐந்து வருட ஆட்சி - மனசாட்சிக்கு விரோதமில்லாமல் ஒப்பிடுங்களேன்...?

! முதல் ஐந்தாண்டுகள் காரிருள் சூழ்ந்த நீளிரவு: அடுத்த ஐந்தாண்டுகள் விடியலின் ஆரம்பம்.

● க.ந. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

? இங்கிலாந்தில் இந்தியப் பெண்மணி ஒருவர் சமோசா விற்றே கோடீஸ்வரியாகி விட்டாராமே...?

! 'லாட்டரி சீட்டு வாங்கினால்தான் கோடீஸ்வரனாக முடியும்' என்று எண்ணும் பலர் ருசியாக சமோசா செய்து விற்றும் கோடீஸ்வரனாகலாம் என்று உணர்ந்தால் சரி!



• 'வேண்டாத' தகுதி!

● கே. சுதர்ஷன், தூத்துக்குடி

? ஊழல் ஒரு பிரச்னை அல்ல என ஜெயலலிதாவைச் சந்திக்க வந்த காங்கிரஸ் தலைவர் பிரணாப் முகர்ஜி கூறியுள்ளது பற்றி...?

! Birds of a feather...



• நோ பிராப்ளம்!

● எஸ். அப்துல்லா அஹ்மது, நாகூர்

? அடுத்த பிரதமருக்குத் தகுதியானவர் யார்...?

! 'ஊஹூம். எனக்குப் பிரதமர் பதவியெல்லாம் வேண்டாம். அந்த நாற்காலி மீது துளிகூட ஆசை கிடையாது... வேண்டாம்னா விடுங்களேன்... ப்ளீஸ்'- இப்படி தினமும் சொல்லிக் கொண்டிருக்கும் யாரோதான் அங்கே அமரப் போகிறார் என்பது அரசியல் ரேஹஸ்யம்... அப்படிப் பார்த்தால் 'பாபு'காருதான்.

● ஆர். தங்கராஜ், திருப்பூர்

? போட்டி நிலவுகிற இச்சமுதாயத்தில், சாதிக்க நினைப்பவர்களுக்கு நீங்கள் கூறும் யோசனை என்ன...?

! "Perceive the world in a different light எந்த விஷயத்திலும் மற்றவர்களிடமிருந்து மாறுபட்ட கோணத்தில் உங்கள் பார்வை இருக்கட்டும். அதுவே உங்களைச் சாதனையாளராக்கிவிடும்."- இதை நான் சொல்லவில்லை: எம்.எஸ். மகான் பில்கேட்ஸ் சுவாமிகள் அருளியது இது!

● கருப்பம்புலம் சித்திரவேலு, நெய்விளக்கு

? பங்க்சரான சைக்கிளில் புதிய டயர்-ட்யூப் மாட்டி சரித்திரம் படைப்போம் என்றாரே த.மா.கா. எம்.எல்.ஏ. அப்பாவு?

பெண்களால்



• இது மஹான்!

□ ரூ. 50 பரிசு பெறுபவர்:
க.நா. இராஜேஸ்வரன்,
தெற்கு வீதி, மொரட்டுப்
பாளையம் அஞ்சல்,
ஈரோடு வட்டம் — 638 752

* ரூ. 25 பரிசு
பெறுபவர்:
எஸ்.ஈ.தாஸ்,
19, புதுக்குளக்கரை சாலை,
ஓட்டேரி, சென்னை — 600 012

# அரசியல் தூய்மையாகுமா?

! அதோடு நிறுத்திடாதீங்க... ஹேண்டில்பாரை நிமிர்த்தி, ஸ்போக்ஸ் கம்பி சரிபார்த்து, சீட் தைத்து, மணி, ஹெட் லைட் போட்டு, அப்படியே ஓவர்ஹாலிங்கும் செய்து 'சல்'னு ஓட்டுங்க... அப்பதான் ஜனங்க நம்பி வோட்டுப் போடுவாங்க...

● கே.வி. நாதன், நெய்வேலி — 3

? 'காற்றை நிறுத்தும் சக்தி எங்களுக்கு உண்டு; அசையாதே என்றால் அசையாது என்று பா.ம.க. தலைவர் டாக்டர் ராமதாஸ் கூறியுள்ளாரே...?

! மரங்களை வெட்டிப் போட்டு வாகனங்களைத் தானே நிறுத்துவார்கள்? இதென்ன புது சவால்; அதுவும் வைரமுத்து பாணியில்...!

● மு. இராமசாமி, வயலூர்.

? ஆஸ்திரேலிய நிறுவன உதவியுடன் குப்பையிலிருந்து மின்சாரம் தயாரிக்கும் பணிகளைத் தொடங்கும் முயற்சியில் சென்னை மாநகராட்சி ஈடுபட்டுள்ளது என்று மத்திய தொழில்துறை அமைச்சர் முரசொலி மாறன் தெரிவித்துள்ளாரே...?

! குப்பையிலிருந்து மின்சாரம் தயாரிக்க ஆகக்கூடிய செலவைக் கணக்கிட்டார்களா? ஒரு யூனிட் விலை கேட்டால் ஷாக் அடிக்கப் போகிறது!

● எஸ். கண்ணன், நெய்வேலி — 7

? இருபது ஆண்டுகளில் ஒரு டஜன் தலைவர்களைக் கண்டுள்ள தமிழக காங்கிரஸின் 'பரிதாப' நிலையை 'உட்கட்சி ஜனநாயகம்' என்று வர்ணித்துள்ள ஈ.வி.கே.எஸ். இளங்கோவன் பற்றி...?

! உட்கட்சி ஜனநாயகம் பற்றி காங்கிரஸுக்குப் பாடம் நடத்தியாக வேண்டும். முதல் மாணவராக ஈ.வி.கே.எஸ்தான் வரவேண்டும்.

● மா.சிவசக்தி, நெமிலி

? 'பெண்களுக்குச் சட்டமன்ற, நாடாளுமன்ற அமைப்புகளில் போதிய அதிகாரம் அளிப்பதன் மூலம் இன்றைய அரசியலைத் தூய்மைப்படுத்தி பாதுகாக்கலாம்' என்று குடியரசுத் தலைவர் நம்பிக்கை தெரிவித்துள்ளது பற்றி...?

! பெண்களுக்குத் தேவை சமவாய்ப்பு; சலுகைகள் அல்ல. பெண்களிடம் அதிகாரம் தரப்படுவதால் மட்டுமே அரசியல் தூய்மையாகிவிடாது. அவ்வாறு நம்புவது நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதாகும்!

● ஜி.ஜி.கிருஷ்ணன், விசலூர்

? லதா மங்கேஷ்கருக்கும் பிஸ்மில்லா கானுக்கும் பாரத் ரத்னா கிடைத்திருப்பது குறித்து...?

! கான் சாகிப்பின் இசையையும் லதாஜியின் கானத்தையும் கேட்டு ரசித்தவர்கள் இதை வரவேற்று மகிழும்போதே மத்திய அரசுக்கு ஒரு கோரிக்கையும் வைக்கிறார்கள்: சில வருஷங்களுக்கு ஒரு முறை யாரேனும் ஒரு நபருக்கு வழங்கப்பட்டு வந்த இந்தியாவின் தலை சிறந்த விருதை ஒவ்வொரு ஆண்டும் பலருக்கு வழங்கி மலினப்படுத்தி விடாதீர்கள்!

● எஸ்.ஈ.தாஸ்,
சென்னை — 12 *


• புது சவால்

? ரஜினியின் மௌனம், சோ–ஜெ சந்திப்பு, பா.ம.க. – வாழப்பாடி மோதல், அயோத்திப் பிரச்னை, இளங்கோவனுக்கு எதிர்ப்பு – இவற்றால், வருகிற பொதுத் தேர்தலில் மாற்றங்கள் ஏற்பட வாய்ப்பு இருக்கிறதா...?


• கணக்கிட்டாரா...?

! 'யார் ஆட்சிக்கு வந்தால் நமக்கு என்ன?' என்று அக்கறை இல்லாமல் ஒதுங்கிக் கொள்ளும் சோம்பேறிகளும் தகுதியான வேட்பாளர் யார் என்று தெரிந்தும் வோட்டுப் போடாமல் விரக்தியுடன் விலகி நிற்கும் விவரமானவர்களும் வோட்டுப் போட்டாலே போதும்... பொதுத் தேர்தலில் வியக்கத்தக்க மாறுதலும் ஆறுதலும் கிடைக்கும்.

நீங்கள் கேட்டவை — தராசு

## பிப்ரவரி 7 முதல் 13 வரை

# நடக்குமென்பார்



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

உங்கள் பேச்சாற்றலும், புத்தி சாலித்தனமும் அதிகரிக்கும் காலம் வந்தாச்சு. செயலில் உற்சாகம் கூடும். அதிர்ஷ்டவாய்ப்புகள் கூடி வரும். கணவன் – மனைவி உறவு நிலை திருப்தி தரும். பெண்களுக்கு உற்சாகமான பலன்கள் நடந்து வரும். வியாபாரம் நல்ல பலன் தரும். அப்புறமென்ன? உல்லாசமான வாரத்துக்கு உத்திரவாதம் கிடைச்சாச்சே!



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

வழக்கு, கோர்ட் விவகாரங்களில் வெற்றி காணலாம். உழைப்பிற்குப் பின்வாங்கக் கூடாது. புதியவர்களிடம் பழகும்போது விழிப்புடன் இருந்துட்டா எந்தப் பிரச்னையும் இருக்காது. பெரியவங்க ஆசிர்வாதம் இருக்கும். உங்க மதிப்பு, அந்தஸ்து, கௌரவம் எல்லாம் உயர்ந்து, நல்ல முன்னேற்றம் தெரியும். கலைத்துறையைச் சார்ந்தவங்களுக்குச் சாதகமான வாரம்.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

முக்கியமான கிரக சஞ்சாரம் அனுகூலமாக இல்லை. அதனால் சிற்சில பிரச்னைகள், சங்கடங்கள் வரத்தான் செய்யும். அதுக்காக அலுத்துக்காதீங்க... புதியவங்க, வேற்று மொழி பேசறவங்ககிட்ட ரொம்ப ஜாக்கிரதையா இருங்க. உடல் பாதிப்பு ஏற்படும். எச்சரிக்கை. பொருளாதாரம் ரொம்ப சுமாரா இருக்கும். அதனால் 'தாம், தூம்'னு செலவு பண்ணற வேலையே வேணாம். தெய்வப் பிரார்த்தனையைத் தொடர்ந்து செய்யுங்க... நலமெல்லாம் கிடைக்கும்.

**சிம்ம ராசிக்காரரான செஸ் மீனாட்சிக்கு நகை நட்டு வாங்க சான்ஸ் இருக்காம்.**



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

உங்க பேச்சுல இனிமையும் கவர்ச்சியும் இருக்கும். அதிர்ஷ்ட தேவதை வாசக் கதவை தட்டுவா. பெரிய பெரிய வி.ஐ.பிங்க எல்லாம் உதவறதுக்கு வருவாங்க. அதனால தொழில்ல ஜோரான வளர்ச்சி தெரியும். பதவி உயர்வு தானா கிடைக்கும். வெளிநாட்டுச் செய்திகூட ரொம்ப சாதகமாதான் இருக்கப் போகுது. அப்புறமென்ன...? உங்க ஆட்சிதான்!



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

நீங்க கலைத் துறையைச் சேர்ந்தவங்களா? அப்ப உங்களுக்கு இந்த வாரம் உற்சாகமான பலன்கள் நடக்கப் போகுது. அரசியல்வாதிகளுக்குச் செல்வாக்கு உயரும். வாழ்க்கை, வசதி எல்லாம் சீராக இருக்கும். மனை, நிலம், நகைன்னு வாங்கறதுக்குக்கூட யோகம் கூடியிருக்கு. ஆனா என்ன, கொஞ்சம் உடம்பு படுத்தும். ஆரோக்கிய விஷயத்துல அசால்டா இருந்துடாதீங்க. மற்றப்படி... அளவோடு பலன் பெற்று, வளமோடு வாழ்வீங்க...



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

கிரக சஞ்சாரத்தைப் பொருத்தவரை ஒரு பிரச்சனையும் இல்லை. எல்லாமே அனுகூலமாதான் இருக்கு. அதனால உங்க சாமர்த்தியம், புத்திசாலித்தனமெல்லாம் 'சட்'டுன்னு வெளியே தெரியும்படி, சாதனைகள் செய்யப் போறீங்க. கணவன் – மனைவி உறவுல அன்னியோன்யம் தெரியும். வாகன வகையில் ஏதாவது பிரச்னை ஏற்படலாம். அதனால ரொம்ப ஜாக்கிரதையா இருக்கணும். ஸ்ரீராம தியானம் பண்ணுங்க. நல்லதே நடக்கும்.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

கிரக சஞ்சாரம் பத்தி சொல்லணும்னா அவ்வளவா திருப்திகரமா இல்லை. அதனால புதிய முயற்சிகளை எல்லாம் கொஞ்சம் தள்ளிப் போட்டுடுங்க. அகலக் கால் வைக்காதீங்க. முதலுக்கே மோசம் வந்துடலாம். உஷார். பொருள் வரவும் ரொம்ப மட்டமாதான் இருக்கும். எதிர்க்கரம் வலுத்து இருக்கும்போது அடங்கிப் போறதுதான் நல்லது. கோபமாய்ப் பேசாதீங்க. தான, தருமம்னு ஈடுபட்டு, மனத்தை அமைதியா வெச்சுக்க முயற்சி பண்ணுங்க.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

ஙடக்கும்!

புதன், சுக்ரன், சஞ்சாரம் டபுள் ஓ.கே! அதனால உங்களுக்கு மகிழ்ச்சியான வாரமா அமையப் போகுது. கூட்டுத் தொழில், கலைத் தொழில், கல்வித் தொழில் செய்யறவங்களுக்கு நல்ல முன்னேற்றம் தரும். பெண்களுடைய எண்ணம் நிறைவேறும். சாதுக்கள், மகான்கள் தரிசனம் கிடைக்கும். மாணவர்கள் முன்னேற்றம் அடைவார்கள். சிறு சிறு இடர்பாடுகள் வரத்தான் செய்யும். அதுக்கெல்லாம் கவலைப்படாதீங்க.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

மனசுல உற்சாகம் புதுப் புனலா பொங்கும். சட்டம், காவல், பொறியியல் சார்ந்தவர்களுக்கு செழிப்பான வாரமா இருக்கும். சிவப்பு பொருள் லாபம் கொண்டு வரும். பெண்களுக்குப் பெருமையும், புகழும் கிடைக்கும். கலைத் துறைக்காரங்களுக்குத் தொட்டதெல்லாம் பொன்னாகும். பண விஷயம் கொஞ்சம் இழுத்தடிக்கும். கொடுக்கல் - வாங்கலும் பிரச்னைதான். நிதானமா இருங்க. எந்தக் கஷ்டமும் அணுகாது.





**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

குடும்பத்துல குதூகலத்துக்குக் குறைவே இருக்காது. விருந்து, கேளிக்கை, உபசாரம்னு அமர்க்களமா இருக்கப் போறீங்க. தந்தையின் நலனில் கவனமா இருங்க. வியாபாரிகளுக்கு ஏற்றமான வாரம். எழுத்து, பத்திரிகைத் துறைக்காரங்க 'ஓகோ'ன்னு வருவாங்க. சுபிட்சமான வாரம்தான். அதனால கொண்டாடுங்க!



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

மக்களால மனசுல நிம்மதி கெட்டுப் போகும். நிலம், மனை, வீடு வகையறா விஷயத்துல ரொம்ப உஷாரா இருக்கணும். பக்தி மார்க்கம், ஞான மார்க்கத்தில் ஈடுபாடு உள்ளவங்க மனத் தெளிவோடு இருப்பாங்க. கணவன் - மனைவி அன்பு பரஸ்பரம் நல்லபடியா இருக்கும். அதனால குடும்பத்துல குழப்பமில்லை. நேரான பாதையிலேயே போகப் பழகுனா வீண் வம்பு ஏன் வரப் போகுது?



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

முதல் பிரச்னையே உங்க ஆரோக்கியம்தான். சாண் ஏறினா முழம் சறுக்கும். கண்டபடி அலைஞ்சு, உடம்பைக் கெடுத்துக்காதீங்க. இந்த ஜாமீன் போடற வேலையே வைச்சுக்கக் கூடாது. அதனால தொந்திரவுதான் மிஞ்சும். அரசு அதிகாரிங்களுக்குப் பாராட்டு கிடைக்கும். குழந்தைகளால மனசு சந்தோஷப்படும். ஆன்மிக வழியில் நாட்டம் அதிகரிக்கும். பெரியவங்க ஆசிர்வாதம் நிறைய இருக்கறதனால, உங்க வாழ்வு ஏறு முகமாதான் இருக்கும். அப்புறம் அவன் விட்ட வழி!

அக்னிசர்மா பக்கம்

# அடகு

**சா**ணம் மெழுகிய
மண்தரை முற்றத்தில்
மல்லாந்து படுத்தபடி
நட்சத்திரம் வியப்பேன்

கோட்டைத் தெரு பொன்னம்மா
குடத்தோடு போகையில்
வெறித்த பார்வை
நெஞ்சைக் கீறி நிற்கும்

ஜாதி விட்டு ஜாதி போய்
காதல் செய்த மாரியப்பனை
கல்தூணில் கட்டி வைத்த
பஞ்சாயத்து
பயமுறுத்தும் இதனூடே.

கண்மூடி
சொல்லமாடனை வேண்டுகையில்
கௌரவம் பேசும்
அப்பா தெரிவார்
மீசையைத் தடவிக் கொண்டே.

பயத்தில் முங்கிப் போகும்
ஆசையும் எண்ணமும்...
அடகு வைத்த
அம்மாவின் நகை போல!

— வதனன்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications
Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623;
Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka